## *9. Welcome Rain*

---

Welcome rain,
Nectar descending
From heaven to earth.

Making barren things
Come to life,
Changing the heat of the day
To cool delight,
You bring hope
To the peasants.

Pattering on a roof of zinc,
Blabbing on the thatches,
You make the city's vessels of brass
Go clang, clang, clang.

Overflowing lakes and ponds
You bring cheer to the land
And soak in the elixir of life
The trees, their leaves, the blossoms, berries.

Be they haves or have-nots,
Be they good or evil
You distribute your wealth
Equally to all.

*Translated by M.L. Thangappa*

## 10. தென்றலின் குறும்பு

---

இழுத்திழுத்து மூடுகின்றேன்
எடுத்தெடுத்துப் போடுகின்றாய்,
பழிக்க என்றன் மேலாடையைத் தென்றலே -
உன்னைப்
பார்த்துவிட்டேன் இந்தச் சேதி ஒன்றிலே!

சிலிர்க்கச் சிலிர்க்க வீசுகின்றாய்,
செந்தாழை மணம் பூசுகின்றாய்,
குலுங்கி நடக்கும் போதிலே என் பாவாடை-தனைக்
குறுக்கில் நெடுக்கில் பறக்கச் செய்தாய் தென்றலே!

வந்துவந்து கன்னந் தொட்டாய்,
வள்ளைக் காதில் முத்தமிட்டாய்,
செந்தாமரை முகத்தினை ஏன் நாடினாய்? - ஏன்
சீவியதோர் கருங்குழலால் மூடினாய்?

மேலுக்குமேல் குளிரச் செய்தாய்,
மிகமிகக் களியைச் செய்தாய்,
உள்ளுக்குள்ளே கையைவைத்தாய் தென்றலே - என்
உயிருக்குள்ளும் மகிழ்ச்சி வைத்தாய் தென்றலே!

## *10. The Frolicsome South Wind*

---

I pull my dress around me all the time,
But you toss it again and again, Oh wind!
From the way you abuse my upper cloth
I know you now for what you are, Oh wind!

Chill, refreshingly chill, you blow, Oh breeze!
Carrying the odours of the fragrant screwpine!
As I walk along with cheerful steps,
My skirt you fling this way and that,
Oh you, frolicsome, wanton wind!

You touch my cheeks and caress them,
And plant your kisses in my pliant ears!
Oh, why do you thus desire my lotus-face,
And cover it with my locks well-comb'd and dark?

You have cooled my warm body O'er and O'er
Rejoicing the cocklets of my heart, Oh breeze!
You have touched the deepest depths of my being,
Kindling rapturous joy within my soul, Oh breeze!

*Translated by K.G.Seshadri*

# 11. தென்றலின் வருகை

பொதிகைமலை விட்டெழுந்து சந்த னத்தின்
புதுமணத்தில் தோய்ந்து, பூந் தாது வாரி
நதிதழுவி அருவியின்தோள் உந்தித், தெற்கு
நன்முத்துக் கடல்அலையின் உச்சி தோறும்
சதிராடி, மூங்கிலிலே பண்எழுப்பித்
தாழையெல்லாம் மடற்கத்தி சுழற்ற வைத்து,
முதிர்தெங்கின் இளம்பாளை முகம்சு வைத்து,
முத்துதிர்த்துத் தமிழகத்தின் வீதி நோக்கி,

அந்தியிலே இளமுல்லை சிலிர்க்கச், செந்நெல்
அடிதொடரும் மடைப்புனலும் சிலிர்க்க, என்றன்
சிந்தைஉடல் அணுஒவ்வொன் றும்சிலிர்க்கச்,
செல்வம்ஒன்று வரும்; அதன்பேர் தென்றற் காற்று!
வெந்தயத்துக் கலயத்தைப் பூனை தள்ளி
விட்டதென என்மனைவி அறைக்குப் போனாள்.
அந்தியிலே கொல்லையில்நான் தனித்தி ருந்தேன்
அங்கிருந்த விசுப்பலகை தனிற்ப டுத்தேன்.

## *11. The Coming of The Southerly*

---

Rising from the Potikai Hill, it bathes
In the fresh fragrance of sandalwood,
Scoops the pollen off blossoms, hugs the stream,
Moves along the shoulders of the cataract
To dance on the crest of each billow
In the pearly main of the South,
Raises music out of the bamboo basket,
Turns the petal-swords of the fragrant screwpine,
Busses the visage of the tender spathe
Of the mellowing coco-palm, spills pearls,
And turning towards the streets of Tamizhakam.

Causing, in the eve, the young jasmine to thrill,
The sluice that feeds the goodly paddy to thrill
And (also) my intellect, body and every pore to thrill,
Comes an opulence; its name is 'Southerly'!
My wife repaired to the larder thinking
The cat had upset the pot of fenugreek seeds;
In the evening I was alone in the backyard
And there on the swing I had laid me down.

பக்கத்தில் அமர்ந்திருந்து சிரித்துப் பேசிப்
பழந்தமிழின் சாற்றாலே காதல் சேர்த்து
மிக்கஅவ சரமாகச் சென்ற பெண்ணாள்
விரைவாக என்னிடத்தில் வருதல் வேண்டும்.
அக்காலம் அறைக்குவந்த பூனை யின்மேல்
அடங்காத கோபமுற்றேன் பிறநே ரத்தில்
பக்காப்பூ னைநூறு, பொருளை யெல்லாம்
பாழாக்கி னாலும் அதில் கவலை கொள்ளேன்.

வாழ்க்கைமலர் சொரிகின்ற இன்பத் தேனை
மனிதனது தனிமையினால் அடைதல் இல்லை;
சூழ்ந்ததுணை பிரிவதெனில் இரண்டு நெஞ்சும்
தொல்லையுறு வகைஇருத்தல் வேண்டும் அங்கே
வீழ்ந்துகிடந் திட்டஎனைத் "தனிமை" "அந்தி"
இவை இரண்டும் நச்சுலகில் தூக்கித் தள்ளப்
பாழான அவளுடலின் குளிர்ச்சி, மென்மை,
மணம் இவற்றைப் பருகுவதே நினைவாயிற்று.

தெரியாமல் பின்புறமாய் வந்த பெண்ணாள்,
சிலிர்த்திடவே எனை நெருங்கிப் படுத்தாள் போலும்,
சரியாத குழல்சரிய லானாள் போலும்,
தடவினாள் போலும், எனைத்தன்க ரத்தால்!
புரியாத இன்பத்தைப் புரிந்தாள் போலும்!
புரியட்டும் எனஇருந்தேன் எதிரில் ஓர்பெண்
பிரிவுக்கு வருந்தினே னென்றாள் ஓகோ!
பேசுமிவள் மனைவி; மற் றொருத்தி தென்றல்!

The woman that sat beside me laughing
And talking - infusing thereunto love
Distilled from the essence of hoary Tamil-
And who went away in haste, should return to me
In all celerity; unbounded was my wrath
Against the cat which came to the room at that hour.
At othertimes, I would not have minded the despoliation
Of cats, though they were a hundred strong.

The sweet honey poured by the blooms of life
Is not attained by man's loneliness.
If one, in the pair of mates, should part
It should be such that both hearts should suffer
'Isolation' and 'eventide': as these two lifted me
And threw me into a world of venom
My only thought was of sipping her body's coolth
Softness and fragrance - now gone to waste.

Unbeknown to me, the woman that came from behind
Perhaps to get thrilled, laid herself close to me;
Her hair, ever intact, became loosened perchance;
With her fingers she felt me, for aught I know;
May be, unknown to her she wrought a sweetness;
I let her do it and left it at that. She said
That I grieved for the parting of the peerless lass.
O, the marvel! The one that speaks
Is the wife; the other one is the Southerly.

*Translated by T.N. Ramachandran*

# 12. வானம்பாடி

வானந்தான் பாடிற்றா?
வான் நிலவு பாடிற்றா?
தேனை அருந்திச்
சிறுதும்பி மேலேறி
நல்லிசை நல்கிற்றா?
நடுங்கும் இடிக்குரலும்
மெல்லிசை பயின்று
மிகஇனிமை தந்ததுவோ?

வானூர்தி மேலிருந்து
வல்ல தமிழிசைஞன்
தானூதும் வேய்ங்குழலா?
யாழா? தனியொருத்தி
வையத்து மக்கள்
மகிழக் குரல்எடுத்துப்
பெய்த அமுதா?
எனநானே பேசுகையில்,

நீநம்பாய் என்று,
நிமிர்ந்த என் கண்ணேரில்
வானம்பா டிக்குருவி
காட்சி வழங்கியது.
ஏந்தும்வான் வெள்ளத்தில்
இன்பவெள்ளம் தான்கலக்க
நீந்துகின்ற வானம்
பாடிக்கு நிகழ்த்தினேன்;

## *12. The Skylark*

---

Did the sky sing?
Or the moon?
Did the honey-sucked beetle
Give the sweet note?
Did the roaring thunder
After learning the tender music
Give such a sweet melody?

Did an expert Tamil musician
Play the flute or harp
On the plane?
Did a lonely damsel
Shed the nectarine strains
To enchant the mankind?

As such...
When I was in that amazing mood
The skylark swam into my vision
Flooding its waves of music
All over the sky!

உன்றன் மணிச்சிறகும்
சின்னக் கருவிழியும்
என்றன் விழிகட்கே
எட்டா உயர்வானில்
பாடிக்கொண் டேஇருப்பாய்?
பச்சைப் பசுந்தமிழர்
தேடிக்கொண் டேயிருப்பார்
தென்பாங்கை உன்பால்!

அசையா மகிழ்ச்சி
அடைகநீ உன்றன்!
இசைமழையால்
இன்புறுவோம் யாம்.

'Oh! Skylark!' I said
with your beautiful wings
And glittering black eyes,
Sing your eternal songs
Flying in the dizzy heights!
The imaginative true Tamils
Will always search
Your honeyed melodies.

Be happy! sweet bird!
We will forever bathe
In your shower of music!

*Translated by T. Murugusundaram*

## 13. நீலவான் ஆடைக்குள்...

'நீலவான் ஆடைக்குள் உடல் மறைத்து
நிலாவென்று காட்டுகின்றாய் ஒளி முகத்தைக்!
கோலமுழு தும்காட்டி விட்டால் காதற்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ? வானச்
சோலையிலே பூத்ததனிப் பூவோ நீதான்
சொக்கவெள்ளிப் பாற்குடமோ, அமுத ஊற்றோ!
காலைவந்த செம்பரிதி கடலில் மூழ்கிக்
கனல்மாறிக் குளிரடைந்த ஒளிப் பிழம்போ!

அந்தியிருளாற் கருகும் உலகு கண்டேன்;
அவ்வாறே வான் கண்டேன்; திசைகள் கண்டேன்;
பிந்தியந்தக் காரிருள்தான் சிரித்த துண்டோ?
பெருஞ்சிரிப்பின் ஒளிமுத்தோ நிலவே நீதான்
சிந்தாமல் சிதறாமல் அழகை யெல்லாம்
சேகரித்துக் குளிரேற்றி ஒளியும் ஊட்டி
இந்தாவென் றேஇயற்கை அன்னை வானில்
எழில் வாழ்வைச் சித்திரித்த வண்ணந்தானோ!

## *13. In the Blue Garment...*

---

Concealing the body in the blue garment of the sky;
You reveal your refulgent face as the Moon,
If your beauty entire were shown
Will this world die of love's excess?
Are you the single flower blooming in the garden
of the sky!
Are you the pot of milk made of pure silver!
Or are you the ambrosial fountain!
Are you the radiant molten fire -
The ruddy sun that came with the dawn,
Now bathed in the sea, his searing heat transformed
and made cool!

I saw the world darkening in the twilight gloom;
And so did I see the sky and all the corners
Could it be that, later, this dark gloom burst into
laughter?
Moon! Are you the bright pearl of the peals of laughter?
Is this the hue with which Mother Nature
Paints in the sky a Life of Beauty,
Gathering all the graces, a wee-bit not wasting.
Cooling them and feeding with light
And offering them, "here, take thou all".

உனைக்காணும் போதினிலே என் னுளத்தில்
ஊறிவரும் உணர்ச்சியினை எழுது தற்கு
நினைத்தாலும் வார்த்தைகிடைத் திடுவ தில்லை
நித்திய தரித்திரராய் உழைத் துழைத்துத்
தினைத்துணையும் பயனின்றிப் பசித்த மக்கள்
சிறிதுகூழ் தேடுங்கால், பானை ஆரக்
கனத்திருந்த வெண்சோறு காணும் இன்பம்
கவின்நிலவே உனைக்காணும் இன்பம் தானோ?

உன்னைஎன திருவிழியாற் காணு கின்றேன்;
ஒளிபெறுகின்றேன்; இருளை ஒதுக்கு கின்றேன்;
இன்னலெலாம் தவிர்கின்றேன்; களிகொள் கின்றேன்;
எரிவில்லை குளிர்கின்றேன்; புறமும் உள்ளும்!
அன்புள்ளம் பூணுகின்றேன்; அதுவு முற்றி
ஆகாயம் அளாவுமொரு காதல் கொண்டேன்
இன்பமெனும் பால்நுரையே! குளிர் விளக்கே!
எனைஇழந்தேன், உன்னெழிலில் கலந்த தாலே!

Even if I ponder words are not found
To write of the feelings that well up
In my heart when I behold you.
Hungry masses, who, in daily indigence,
Labour or and on, without even very little gain,
While they search for a little gruel, -
If they happen to light on white rice
Filling the bowl to its very brim -
Their joy, oh, beautiful Moon,
Is that the joy of beholding you?

I behold you with my two eyes.
I take in the light and avoid the darkness.
Sorrows I set aside; and ecstasy I incur.
No irritation I am cooled, outside and within
I adorn myself with a heart of love, and that ripening,
I grow to a grace, sky-expanding.
Jouissance of milky foam! cool light!
I've lost myself commingling in your comeliness.

*Translated by S. Raman*

## 14. நிலா

முழுமை நிலா! அழகு நிலா!
முளைத்தது விண் மேலே-அது
பழைமையிலே புதுநினைவு
பாய்ந்தெழுந்தாற் போலே!
அமுதமுகம் சிரித்ததுபோல்
அல்லி விரித்தாற்போல், -மேல்
சுழற்றி எறிந்த வெள்ளித்தட்டுத்
தொத்திக் கிடந்தாற்போல்
முழுமை நிலா! அழகு நிலா!

குருட்டு விழியும் திறந்ததுபோல்
இருட்டில் வான விளக்கு!-நம்
பொருட்டு வந்தது பாடி ஆடிப்
பொழுது போக்கத் துவக்கு!
மரத்தின் அடியில் நிலவுவெளிச்சம்
மயிலின் தோகை விழிகள்!-பிற
தெருக்கள் எல்லாம் குளிரும் ஒளியும்
சேர்த்து மெழுகும் விழிகள்
முழுமை நிலா! அழகு நிலா!

## *14. The Moon*

---

Perfect Moon! Beautiful Moon!
Sprouted up in the sky
Like Fresh thoughts
Gushing through the old ones!
Like the smile that gleams on tearful face
And the blossoming lily,
As a silverplate thrown up
Lies suspended still
Perfect Moon! Beautiful Moon!

As though the blind eyes opened
The lamp of the sky in the dark!
It appeared for our sake.
Begin to spend your time
Singing and dancing!
Moonlight under the tree
As eyes of Peacock plumes!
Coolness and light together
Sweeping the ways of the other streets
Perfect Moon! Beautiful Moon!

*Translated by N. Natarajan*

# 15. வான்

## விண்மீன் நிறைந்த வான்

மண்மீதில் உழைப்பா ரெல்லாம்
வறியராம்! உரிமை கேட்டால்
புண்மீதில் அம்பு பாய்ச்சும்
புலையர்செல் வராம் இதைத்தன்
கண்மீதில் பகலி லெல்லாம்
கண்டுகண் டந்திக் குப்பின்
விண்மீனாய்க் கொப்ப ளித்த
விரிவானம் பாராய் தம்பி!

## நிலாச்சேவல், விண்மீன், குஞ்சுகள், இருட்டுப்பூனை

பாற்புகை முகிலைச் சீய்த்து
பளிச்சென்று 'திங்கட் சேவல்'
நாற்றிக்கும் குரல் எடுத்து
நல்லொளி பாய்ச்சிப் பெட்டை
ஏற்பாட்டுக் கடங்காப் பொட்டுப்
பொடிவிண் மீன்குஞ்சு கட்கும்
மேற்பார்வை செலுத்திப் 'பூனை
இருட்டையும்' வெளுத்துத் தள்ளும்.

# *15. The Sky*

---

### Star - Spangled Sky

Toilers on the land are called
the poor, crave they for their rights,
the wicked shoot arrows into
their wounds and style themselves
the rich. Watches this the wide
sky sadly all the day through
and after dusk bluster
into stars, Look, O brother!

### 'Moon' Cock, 'Star' Chicks, 'Gloom' Cat

Cleaving the milk-smoke-like
cloud emerges the moon cock
blows a bugle of light and
splashes the glow on all sides
wipes away the cat gloom
and surveys the star chicks.

### பகல் வானில் முகிலோவியங்கள்

பகல் வானிற் கதிரின் வீச்சுப்
பரந்தது! முகிலி னங்கள்
வகைவகை ஓவி யங்கள்
வழங்கின; யானைக் கூட்டம்!
தகதக எனும்மா ணிக்க
அருவிகள்! நீலச் சாரல்!
புகைக்கூட்டம்! எரிம லைகள்!
பொன் வேங்கை! மணிப்பூஞ் சோலை!

### இருண்ட வானும் ஏற்றிய விளக்கும்

கிழக்குப்பெண் விட் டெறிந்த
கிளிச்சிறைப் பரிதிப் பந்து
செழித்தமேற் றிசைவா னத்தின்
செம்பருத் திப்பூங் காவில்
விழுந்தது! விரிவி ளக்கின்
கொழுந்தினால் மங்கை மார்கள்
இருள்மாற்றிக் கொடுக்கின் றார்கள்!

### காலை வானம்

கோழிகூ விற்று! வையம்,
கொண்டதோர் இருளைத் தங்க
மேழியால் உழுதான் அந்த
விரிகதிர்ச் செல்வன்; பின்னர்
ஆழிசூழ் உலகின் காட்சி
அரும்பிற்று! முனைய விழ்ந்து
வாழிய வைய மென்று
மலர்ந்தது காலை வானம்!

### Cloud's Drawings on the Day-lit Sky

Spareads on the daylit sky
the sun's rays' sweep, varied
shapes assume the clouds-hordes
of elephants, glittering
brooks, blue showers, circles
of smoke, vulcanoes,
golden kino tree
and elegant gardens.

### Lamp Lighted in the Dark Sky

The parrot-winged ball
of Phoebus cast by
the woman of the East
falls on the shoe-flower
garden of the West.
With the expanding
tongues of flame, maidens
the darkness exchange.

### The Sky of the Dawn

Crows the cock, the expanding
rays of the farmer Sun
ploughs the land of gloom
with his golden plough, lo!
sprous the sight of the
sea-surrounded land
blooms the dawn blessing
'Long live the World'

## வானவில்

அதிர்ந்தது காற்று! நீளப்
பூங்கிளை அசைந்தா டிற்று!
முதிர்ந்திட்ட முகிலின் சேறு
மூடிற்றுச்! சேற்றுக் குள்ளே
புதைந்திட்ட கதிரிற் பூத்த
புதுப்புது வண்ண மெல்லாம்
ததும்பிற்றே வான வில்லாய்ப்!
பாரடி அழகின் தன்மை.

## மழைவான்

பகல்வான்மேல் கருமு கில்கள்
படையெடுத் தன!வில் லோடு
துகளற்ற வாளும், வேலும்
சுழன்றன மின்னி மின்னி!
நகைத்தது கலகல வென்று
நல்லகார் முகில்தான்! வெற்றி
அகத்துற்ற இயற்கைப் பெண்ணாள்
இறைத்தாள் பூமழையை அள்ளி.

## எரிகின்ற வானம்

தேன்செய்யும் மலரும் தீயும்!
செந்தீயும் நீறாய்ப் போகும்!
கான், செய், ஊர், மலை, கா, ஆறு
கடலெலாம் எரிவ தோடு
தான்செய்த தணலில் தானும்
எரிகின்றான் பகலோன் அங்கு
வான்செய்த வெப்பத் தால்இவ்
வையத்தின் அடியும் வேகும்.

## Rainbow

Vibrates rudely the gale!
sways and swings the long
flowery branch! denser and
denser grow the ripened clouds!
From out of these the novel
hues of the VIBGYOR bloom!
Look to the exquisite
Loveliness, this rainbow, O!

## The Sky in the Rain

Black clouds invaded
The sun and the morn,
swirl and splash the bow
and the sword and the spear
laughs the good dark
cloud thunderously
The Nature-Woman
elated with a sense
of victory sprinkles
rain-flowers profusely.

## The Burning Sky

Scorched are honey-rich
flowers! Into ashes
turn the crimson flames! woods
fields towns hills groves rivers
seas burn and also the
sun which intself the heat
generates! There heat scorches
the depths of this earth!

## உச்சிப்போதுக்கும் மாலைப்போதுக்கும் இடைநேரம்

உச்சியில் இருந்த வெய்யோன்,
ஓரடி மேற்கில் வைத்தான்:
நொச்சியின் நிழல்கி ழக்கில்
சாய்ந்தது! நுரையும், நீரும்,
பச்சையும், பழுப்பு மான
பலவண்ண முகில்கள் கூடிப்
பொய்ச்சான்று போல யானை
புகழும்;பின் மலையைக் காட்டும்.

### வான் தந்த பாடம்

எத்தனை பெரிய வானம்!
எண்ணிப்பார் உனையும் நீயே:
இத்தரை, கொய்யாப் பிஞ்சு,
நீ அதில் சிற்றெறும்பே.
அத்தனை பேரும் மெய்யாய்
அப்படித் தானே மானே?
பித்தேறி மேல்கீழ் என்று
மக்கள்தாம் பேசல் என்னே!

## The Time Between the Noon and the Evening

Treads the moon-day sun
a step towards the West
leaned the shadow of
the Chaste tree on the East!
Clouds various-coloured
as froth, water, green
and yellow mislead
mountain as elephant.

## The Lesson the Sky Teaches

How Vast is the sky!
Think you of yourself;
the earth is a tiny
guava fruit; you, like all
others are a tiny ant
in it? is that not so?
Why talk madly of
the high and the low?

*Translated by P. Parameswaran*

## 16. துறையில் ஓடம்

வீற்றிருக்கும் மணிமாடம்
விருந்துண்ணும் நடுக்கூடம்
ஆற்றிலே நடமாடும்
அழகான நம் ஓடம்.
ஆமாமாம் ஆமாமாம் ஆமாமாம்!
காற்றோ குளிர்ந்துவரும்
கண்ணிலே விண்தெரியும்
சாற்றிலே சர்க்கரை போட்ட
தமிழ்ப்பாட்டும் தானேவரும்.
ஆமாமாம் ஆமாமாம் ஆமாமாம்!

சிற்றலையின் வரிசையிலே
சேல்மீன்கள் விளையாடும்
முற்றிவிட்ட பகைபோல
முதலை ஒன்று குறுக்கோடும்.
ஆமாமாம் ஆமாமாம் ஆமாமாம்!
கற்றாழை மிந்துவரும்
கண்ணெதிரில் வாள்சுழற்றும்
முற்றாத தென்னம்பாளை
முன்னேவந்து தான்சிரிக்கும்.
ஆமாமாம் ஆமாமாம் ஆமாமாம்!
மேற்கை வெறுத்துவரும்
கிழக்கு நோக்கி விரைந்தோடும்
ஆற்றில் மிதக்கும் ஓடம்
காற்றுக்குமேல் ஆட்டம் போடும்.
ஆமாமாம் ஆமாமாம் ஆமாமாம்!

## *16. The Boat in the Whirlwind*

---

With uprising balconies.
And a hall for festive lunches,
This beautiful boat
Sailing in the river is ours

Yes, oh yes...

Oh! the wind is cool,
Eyes reflect the heaven;
Like swetened juice
Tamil song flows in the heart.

Yes, oh yes...

In the row of ripples
The fishes play;
A crocodile runs across
Like ripened enmity

Yes, Oh yes...

The plant aloe comes floating
Whirling like a sword;
Spathas of coconut tree
Appear and smile

Yes, Oh yes...

Rejecting the west
And running fast towards the East
The boat floats on the river
Dancing in the wind

Yes, Oh yes...

கீற்றுத் தென்னைமேலே
கிள்ளைகளும் தமிழ்பேசும்
சேற்றுத் தவளைகளும்
திடும்திடும் பறைவீசும்.
ஆமாமாம் ஆமாமாம் ஆமாமாம்!

வெள்ளாடு தழைமேயும்
வெய்யில் குடைபிடிக்கும்
புள்ளிமான் தென்துறையில்
பூரித்து நீர்அருந்தும்.
ஆமாமாம் ஆமாமாம் ஆமாமாம்!

கள்ளிமலர் பூத்திருக்கும்
பொன்வண்டு காத்திருக்கும்
துள்ளி வரால்மீன்கள்
தூறையாடும் மாம்பழத்தை.
ஆமாமாம் ஆமாமாம் ஆமாமாம்!

வானம் கருத்ததண்ணே
காற்றுமழை வந்ததண்ணே
ஏனம் கவழ்ந்ததண்ணே
என் கஞ்சி சாய்ந்ததண்ணே.
ஆமாமாம் ஆமாமாம் ஆமாமாம்!

கை சோர்ந்து போனதண்ணே
கண்தெரிய வில்லைஅண்ணே
ஐயையோ நம்ஓடம்
ஆற்றில் தள்ளாடுதண்ணே.
ஆமாமாம் ஆமாமாம் ஆமாமாம்!

On the split coconut leaf
The parrots talk Tamil
The frogs in the mud
Beat the drum, 'Didum'.

Yes, Oh yes...

The goats graze the foliage,
The sunlight is the umbrella,
The spotted deer to the south of the river
Drinks water cheerfully.

Yes, Oh yes...

The cactus flower blooms.
The golden beetle waits.
The murrel fishes leap
And plunder the mangoes.

Yes, Oh yes...

Oh! brother! the sky is dark
Wind and rain are here.
Oh! brother! the vessel has overturned!
My gruel is gone.

Yes, Oh yes...

Oh! brother! my hands are tired.
I cannot see either.
Alas! our boat
Is floundering in the river.

Yes, Oh yes...

*Translated by A.Alice*

## 17. காதல் வாழ்வு

---

### ஒன்று

மணம் முடிந்தது:

தனியிடம், விடுதலை பெற்ற இரண்டுள்ளம், அளவு கடந்த அன்பு - இவை மகிழ்ச்சிக் கொடியேற்றிக் காதல் முரசு முழக்கின - இன்பவிழா! முடியவில்லை !

### இரண்டு

ஒருநாள் அவர்கள் இந்த உலகில் இறங்கிவந்து பேசலுற்றார்கள்.

"மக்கள் தொடர்பில்லாதது. தென்றலில் சிலிர்க்கும் தழை மரங்கள் உள்ளது. ஊற்றிற் சிறந்த நீர் நிலையின் துறையில் அமைந்த நுழைவாயிலுள்ளது. அழகிய சிறு குடில்! நாம் அங்கே தங்கலாம் - இது என் அவா அத்தான்."

"ஆம்! குறைவற்ற தனிமை!"

பறந்தார்கள்.

### மூன்று

"நாயின் நாக்கைப் போன்ற சிவந்த மெல்லடியைத் தூக்கிவை குடிசையில்."

"நான் மட்டுமா?"

அதிர்ந்தது அவள் உள்ளம்!

இமைப்போதில் ஒன்றில் ஒன்று புதைந்த இரண்டுடல் குடிசையில் நுழைந்தன.

"விட்டுப் பிரிவேன் என்று அச்சப்பட்டாயா?"

"மன்னிக்க வேண்டும்!"

குடிசை சாத்தப்பட்டது.

# *17. The Glory of Love*

---

**One**

The Marriage was over.

Solitude, the two unbridled souls, infinite love. Hoisting the flag of bliss they beat the love-drum-the carnival, not yet coming to an end.

**Two**

One day they descended upon this world and began to converse.

"A place of solitude. There are shadowy trees trembling in the wind. On the banks of a spring, a lovely entrance. A beautiful hut. Let us stay there-this is my desire, my dear".

"Yes, This is solitude absolute!"

They took flight.

**Three**

"Set your tender red feet that is like the tongue of the dog into the hut"

"Only me?"

She felt a shock.

In a trice, the two bodies entered the hut, entwined as one.

"Were you scared I would leave you?"

"Excuse me."

The doors were shut.

நாவற்பழம் நீர்நிலையில் விழுந்துகொண்டிருக்கும் இச்சிச்சென்ற ஒலி குடிசைக்குள் சென்றது. அதே ஒலி குடிசையினின்றும் வெளிவந்தது. இது எதிரொலியன்று!

## நான்கு

‘‘தேக்கும், அதில் உடல் பின்னிய சீந்திற் கொடியும் பார், நம்மைப்போல!’’

‘‘இல்லை, அரண்மனை கசந்தால் அழகிய குடிலில் குடியேறத் தேக்கு நடவாது, சீந்தில் நகராது.’’

வானில் ஓர் ஒலி!

‘‘வைகையின் மங்கிய ஒளியில் மங்காத இன்னிசையை உதிர்த்தன வானப் புட்கள், ஆணும் பெண்ணுமாக!’’

‘‘நாமும் வானில்-அடடா சிறகில்லையே!’’

நீர்நிலை கட்டித் தழுவிக்கொண்டது இருவரையும்.

## ஐந்து

‘‘கெண்டைகள் துள்ளி விளையாடி நீரின் அடிமட்டத்தில் அள்ளி நுகர்வன இன்பத்தை!’’

‘‘நாமும் அங்கு இன்பம் நுகர்வோம்-அடடா, நாம் மீன்களல்லவே!’’

‘‘கண்ணிமைப்போது நான் நீருக்குள் ஒளிந்து கொள்கிறேன்! பிற்பகுதியும் கேள்.’’

‘‘நிறுத்துங்கள்! முற்பகுதியே என் பாதி உயிரைப் போக்கிவிட்டது!’’

மாற்றிச் சுவைக்கும் நான்கு விழிகள் தம்மிற் பிரியாமல் நீராடின.

## ஆறு

‘‘கரையேறுங்கள் என்னோடு.’’

‘‘மாலையின் குளிரும் நனைந்த சேலையின் குளிரும் உன் இன்பத்தைப் பெருக்கவில்லையா?’’

‘‘தவறு! நம் இருவர்க்கும் நடுவில் முயல் நுழையும் வெளி, இதற்கு நனைந்த ஆடை காரணம்.’’

‘‘அதோ நம்மை நோக்கி நம் வீட்டு ஆள்.’’

குடிசையில் மறைந்தார்கள் ஓடி!

The sound 'ich ich' produced by the dropping rose-apple into the pond, entered the shed. The same sound left the shed immediately. This is not the echo of the same.

**Four**

"See the teak wood and cindhil creeper entwining it-just like us".

"Nay, if the palace life is dull, the teak won't come to the hut..... nor will the cindhil move."

A cry in the sky.

"A pair of larks poured forth bright melody in the dim light of Vaigai."

"Shall we too.... in the sky.... O! No feathers!"

The placid waters embraced them both.

**Five**

"The fishes leap jubilantly and dive deep at the bottom of the water, drinking deep delight."

"Let us also enjoy the bliss. O! We are not fishes."

Within a minute, I shall hide myself into the waters. You listen to the rest."

"Stop it! the first half itself has killed me".

They bathed entwined, with two pairs of eyes devouring each other.

**Six**

"Come on, . . . . let us go"

"Would not the shivering cold and the wetness of the saree enhance your pleasure?"

"No, The wet saree has created a wide gap between us as though a rabbit can enter".

"There. . . Our servant is coming towards us."

They hide themself inside the hut.

## ஏழு

"அழைத்துவரச் சொன்னார்கள், அப்பா."

"ஏன்?"

"கப்பல் வந்திருக்கிறது!"

"மெல்லப் பேசு!"

"என்ன ஓசை குடிசையின் உட்கட்டில்? விட்டுவிட்டு இசைக்கும் ஒருவகைச் சிட்டுக்குரல்!"

"என்ன சொன்னார் அப்பா?"

"அனுப்ப வேண்டுமாம் உம்மை?"

"சிங்கைக்கா?"

"ஆம்! -என்ன அங்கே திட்டென்று விழுந்த உடலின் ஓசை!"

"நாலு நாட்கள் நீடிக்கலாமா?"

"இன்றைக்கே! -இதென்ன குடிசையில் வெள்ளம்?"

"நீ போ! இதோ வருகின்றேன்."

## எட்டு

"தேம்பி அழுது திட்டென்று வீழ்ந்து கண்ணீரை ஆறாய்ப் பெருக்கினை அன்புடையாளே!"

"இறக்கமாட்டேன் அத்தான், உனை விட்டுப் பிரியவில்லை என்று நீங்கள் உறுதி கூறுமட்டும்."

"கடமை என் வாயை அடைக்கிறது."

"என் மடமை கிடந்து துடிக்கிறது."

"மடமை அல்ல; உயிரின் இயற்கை."

"தந்தை சொற்படி நடக்கட்டும் என் அத்தான்' என்று என் நெஞ்சுக்குக் கூற என்னால் முடிகிறது; உயிருக்குச் சொல்லி நிறுத்த முடியவில்லை."

## ஒன்பது

"தோழி, நான் அப்பாவிடம் போகிறேன்."

"நீர் நிலையை அடுத்த குடிசையிலா அப்பா இருக்கிறார்?"

## Seven

"Father commanded me to bring you."

"Why?"

"The ship has returned."

"Speak softly."

"What is that sound inside the hovel? - like the chirping of young sparrows."

"What did father say?"

"They would like to send you"

"Where? To Singapore?"

"Yes! What is that noise as if somebody had suddenly fallen down?"

"Can I go on four days?"

"Right now . . . . O! the flood in the hut?"

"You just go! I would come".

## Eight

"O! my dear, you are shedding flood-like tears, bewailing ...."

"I will not die until you promise that you would not leave me"

"Duty makes me dumb"

"My folly causes to shake with fear."

"It is not the folly; it is the very nature of the soul."

"My dear, I could say to my heart that let things happen according to father's order. But I could not say to my soul and establish it".

## Nine

"O! my female companion, I am going to my father."

"Is your father at the hut beside the pond?"

''என் கால்கள் என்னை ஏமாற்றுகின்றன. என் பிரிவால் அவள் சாகிறாள்! சென்று காப்பாற்று.''

''எவ்வளவு நேரம்?''

''நேரமா?''

''எத்தனை நாள்?''

''நாளா? அடுத்த ஆண்டில் வந்துவிடுவேன்.''

''கால் நாழிகை சாக்காட்டின் கதவைச் சாத்திப் பிடித்துக் கொண்டிருக்க முடியும். ஐயா! அடுத்த ஆண்டில் அவள் உடலின் துகள் கலந்த மண்ணும் மட்கி வெளியுடன் வெளியாய்க் கலந்ததென்ற கதை பழமையாய் விடும்.''

''என் துன்ப உள்ளத்தைத் தந்தையிடம் கூறுகிறேன்.''

## பத்து

*(நூலேணியில் அழுகுரல், கண்ணீர்-அவன் கப்பலேறு கிறான்.)*

கப்பலுக்குள்-''இங்கே உட்கார வேண்டும் நீவிர்.''

''கணவனும் மனைவியும் தங்கும் இடமல்லவா இது?''

''இறந்திருப்பாளானால், அது அவள் செய்த முதல் குற்றம். இறந்த செய்தி என் காதில் எட்டாதிருக்க முயன்றிருப்பாளானால் அது இரண்டாவது குற்றம்.''

''இரண்டாவது குற்றத்திற்கு அவள் ஆளாகவில்லை. தன் நிலையை விளக்கும்படி என்னை அனுப்பினாள்.''

''பயனற்றது இவ்வுலகம்! ஒரு பற்று என்னை வாட்டுகின்றது. அவள் இறந்தாள்; ஆதலால் நான் இறந்தேன். இதை அவள் அறியாளே! நீவிர் சான்றாகக் கடலில் கலக்கிறேன்.''

சிரிப்பு! இரண்டு இளைஞர்கள் தோழியும் தலைவியு மாகிறார்கள்.

''அத்தான்! நாம் இருவரும் சிங்கைக்குப் போகி றோம்.''

''தோழி! என் மாமாவிடமும் அத்தையிடமும் உடலும் உயிருமாக இருவரும் செல்லுகின்றார்கள் என்று கூறு!''

வாழ்க, காதல் வாழ்வு!

"My legs let me down. She pines away owing to pangs of seperation! Go and comfort her".

"We can shut the door of death for a while. O! Lord, next year, it would become a very old tale that once she lived. Her body will became one with dust of the soil."

"I would tell my despair to my father."

## Ten

*(A voice of distress, tears. He is embarking the ship.)*

Inside the ship - "Your seat is there?"

"Is it not meant for husband and wife?"

"If she had died, it is the first fault; If she had tried to conceal the news of death not reaching me, it would be second fault committed by her."

"She had not committed the second fault; she sent me to explain her sorrowed state."

"The world is an illusion! One passion makes me mourn; she passed away; so I am also going to die. How could she had known this? In thy presence, I would finish my life drowning into the sea".

Laughter! two youths - become heroine and lady companion.

"O! my dear, we Two are going to Singapore".

"O my companion, tell my uncle and aunt, the two are going like the body and soul."

Hail! To a life of love!

*Translated by M. Ramalingam*

## 18. கதவு பேசுமா?

காதல் துரத்தக் கடிதுவந்த வேல்முருகன்,
ஏதும் உரையாமல் இருவிரலை வீட்டுத்
தெருக்கதவில் ஊன்றினான் "திறந்தேன்'' என்றோர் சொல்
வரக்கேட்டான். ஆஆ மரக்கதவும் பேசுமோ?

'என்ன புதுமை' எனஏங்க, மறுநொடியில்
சின்னக் கதவு திறந்த ஒலியோடு
தன்னருமைக் காதலியின் தாவுமலர்க் கைநுகர்ந்தான்!
புன்முறுவல் கண்டுள்ளம் பூரித்தான், "என்னேடி

தட்டுமுன்பு தாழ்திறந்து விட்டாயே'' என்றுரைத்தான்.
விட்டுப் பிரியாதார் மேவும்ஒரு பெண்நான்
பிரிந்தார் வரும்வரைக்கும் பேதை, தெருவில்
கருமரத்தாற் செய்த கதவு.

## *18. Will the Door Speak?*

---

Love-driven, Velmurukan came amain;
        In silence did he press his fingers two
On the door of the threshold; he heard a voice that said:
        "I have oped." What! Can the wooden door speak!

"What marvel is this?" As he mused thus, in a trice
        The little door clanged open, and he felt
The leaping flower-hand of his rare beloved
        His heart rejoiced at her smile, and he said:

"What may this be? Before I knocked, you have
                                        unbarred."
        She said: "I am a lass not to be parted from;
Till the return of my parted one, this lass, alas,
        Is but a door of blackwood in the threshold."

*Translated by T.N. Ramachandran*

# 19. எழுதாக் கவிதை

மேற்றிசையிற் சூரியன்போய் விழுந்துமறைந் திட்டான்;
மெல்லஇருட் கருங்கடலில் விழுந்த திந்தஉலகும்!
தோற்றியபூங் காவனமும் துளிரும்மலர்க் குலமும்
தோன்றவில்லை; ஆயினும்நான் ஏதுரைப்பேன் அடடா!
நாற்றிசையின் சித்திரத்தை மறைத்த இருள், என்றன்
நனவிலுள்ள சுந்தரியை மறைக்கவச மில்லை!
மாற்றுயர்ந்த பொன்னுருக்கி வடிவெடுத்த மங்கை
மனவெளியில் ஒளிசெய்தாள் என்னதகத் தகாயம்!

புன்னையின்கீழ்த் திண்ணையிலே எனைஇருக்கச் சொன்னாள்,
புதுமங்கை வரவுபார்த் திருக்கையிலே, அன்னாள்,
வன்னமலர்க் கூட்டத்தில், புள்ளினத்தில், புனலில்
வானத்தில், எங்கெங்கும் தன்னழகைச் சிந்திச்
சின்னவிழி தழுவும்வகை செய்திருந்தாள்! இரவு
சேர்ந்தவுடன் என்னுளத்தைச் சேர்ந்துவிட்டாள்! எனினும்
சன்னத்த மலருடலை என்னிருகை ஆரத்
தழுவுமட்டும் என்னுயிரில் தணிவதுண்டோ காதல்?

## *19. The Unwritten Poem*

---

The sun has gone down the west, and vanished;
Slowly the world has descended into the dark, black ocean!
The arbour with its tender shrubs and host of flowers
Visible till then, is no longer seen. But yet, how shall I describe the wondrous scene?
The darkness that concealed the picture of the four directions
Was powerless to conceal the damsel in my thought!
The maid moulded to shape, out of the finest molten gold
Lit up the plains of my mind-oh, what efflorescence!

She bade me wait on a pyal beneath a Punnai tree.
And as I lay waiting for the arrival of the virgin maid,
She had shed her loveliness everywhere
Enabling my little eyes to embrace her
In the host of colourful flowers,
In the flock of winged birds,
In the flowing waters,
And in the firmament.
With the night apporoaching she had apporached my heart.
But yet, will this pang of love in my heart decrease
Until I held fast in my arms, her flower - soft frame!

என்னுளத்தில் தன்வடிவம் இட்டஎழில் மங்கை,
இருப்பிடத்தில் என்னுருவம் தன்னுளத்திற் கொண்டாள்;
மின்னொளியாள் வராததுதான் பாக்கியிந்த நேரம்
வீறிட்ட காதலுக்கும் வேலிகட்டல் உண்டோ?
கன்னியுளம் இருளென்று கலங்கிற்றோ! கட்டுக்
காவலிலே சிக்கிஅவள் தவித்திடுகின் றாளோ!
என்னென்பேன் அதோபூரிக் கின்றதுவெண் ணிலவும்
எழில்நீல வான்எங்க ணும்வயிரக் குப்பை!

மாலைப்போதைத் துரத்திவந்த அந்திப் போதை
வழியனுப்பும் முன்னிருளை வழியனுப்பி விட்டுக்
கோலநிலா வந்திங்கே கொஞ்சுகின்ற இரவில்
கொலைபுரியக் காத்திருக்கும் காதலொடு நான்தான்
சோலைநடுவே மிகவும் துடிக்கின்றேன்; இதனைத்
தோகையிடம் போயுரைக்க எவருள்ளார்? அன்னாள்
காலிலணி சிலம்புதான் கலீரெனக் கேளாதோ?
கண்ணெதிரிற் காணேனோ பெண்ணரசை யிங்கே?

தண்ணிலவும் அவள் முகமோ! தாரகைகள் நகையோ!
தளிருடலைத் தொடும் உணர்வோ நன்மணஞ்சேர் குளிரும்!!
விண்ணீலம் கார்குழலோ! காணும் எழிலெல்லாம்
மெல்லியின்வாய்க் கள்வெறியோ! அல்லிமலர்த் தேனின்
வண்டின்ஒலி அன்னவளின் தண்டமிழ்த்தாய் மொழியோ!
வாழியஇங் கிவையெல்லாம் எழுதவரும் கவிதை!
கண்டெடுத்தேன் உயிர்ப்புதையல்! அதோ வந்துவிட்டாள்!
கண்டெழுத முடியாத நறுங்கவிதை அவளே!

The comely maid who carved her shape in my heart
Has in her stead recived my form into her heart.
What remains is only the non - arrival of the maid,
Bright as lightning. In such a time as this
Do they fence off love that swells up uncontrollably.
Was the young virgin's heart afraid of darkness?
Was she confounded caught in watchful vigil?
How shall I explain - Yonder the white moon waxes big,
The comely azure sky is all strewn with a rubble of
diamonds!

Having bidden farewell to the early hours of night,
That have bidden farewell to the twilight time,
Which came chasing the evening space.
I pine away in the middle of this arbour
In pangs of love that wait prompt to murder me,
In a night, when the beautiful moon has come
endearingly hither
Who is there to go and tell this to that long tressed - maid?
Won't I hear the clink of the anklets adorning her legs?
Won't I see here before my eyes the queen among women?

Is the cold moon her countenance? Are the stars her
smiles?
Is this embalmed coolness the softness of touching her
tender frame?
Is the dark blue of the skies her black tresses of hair?
Is all this beauty visible
The intoxicating ecstasy of the gentle maiden's lips?
Is the hum of bees in the honeyed lily bloom
Sweet Tamil, her mother tongue?
Let poesy live long that enables to indite all these here.
I have discovered the treasure of my life ! There, she has
come!
She alone is the sweetest poem unwritten.

*Translated by S. Raman*

## 20. தலைவி காதல்

---

சோலையிலோர் நாள் எனையே
தொட்டிழுத்து முத்தமிட்டான்
துடுக்குத்தனத்தை என்சொல்வேன்
மாலைப் பொழுதில் இந்த மாயம்புரிந்த செம்மல்
வாய்விட்டுச் சிரித்துப் பின்
போய்விட்டானேடி தோழி! (சோ)

ஓடி விழிக்குள் மறைந்தான் - ஆயினும் என்றன்
உள்ளத்தில் வந்து நிறைந்தான்!
வேடிக்கை என்ன சொல்வேன்
மின்னல்போல் எதிர் நின்றான்!
வேண்டித் தழுவச் சென்றேன்
தாண்டி. நடந்து விட்டான்! (சோ)

அகம் புகுந்தான் சேயோ - அவனை எட்டி
அணைக்க வழிசொல்வாயோ!
சகம்பெறும் அவன் அன்று தந்த துடுக்குமுத்தம்!
சக்ரவாகம் போல்வந்தான்;
கொத்திப்போக மறந்தான். (சோ)

## *20. The Heroine's Love*

---

One day in the sylvan woods
He held me fast and kissed me.
What shall I say of such forwardness?
The fair one who worked this magic in the even-tide
Has left, my friend, after peeling laughter.

He fled and vanished from my sight.
But yet he comes and resides in my heart.
What shall I tell you of this mockery!
He stood there before me like a flash of lightning
I stepped forward eager to embrace him.
He walked away from me.

Dear friend, he had entered my heart.
Won't you suggest a way
To clasp him in my arms and hold him.
The naughty kiss he gave that day
Is worth all the universe.
He came like a *chakkravaga* bird
But he forgot to take me away.

*Translated by S. Raman*

# 21. வழி நடத்தல்

---

மரங்கள் அடர்ந்திருக்கும் காடு — கரு
வானில் உயர்ந்த மலைமேடு — தம்மில்
பிரிந்து பிரிந்து செல்லும் வழியாய் — நாம்
பிரியத்துடன் நடப்போம் விரைவாய்.

பெருங் குரலில் பாட்டும்
பேச்சும் விளையாட்டும் — நம்மை
விரைவில் அவ்விடம் கொண்டு கூட்டும்!

இளமை தன்னில் வலிமை சேர்ப்போம் — நாம்
எதிலும் தைரியத்தைக் காப்போம், — நாம்
அளவில் லாதநாள் வாழ — உடல்
அழகும் உறுதியு முண்டாக,

ஆசை கொண்டு நடப்போம்
அச்சமதைத் தொலைப்போம் — நம்
நேசர் பலரும் மனங் களிப்போம்! (மரங்கள்)

## 21. Way Faring

---

In the thickly wooded jungle
And the mountain peak
Rising in the dark sky
Swiftly let's walk in friendship
Along the track branching off.

Talking, frolicking
And singing loudly
Will take us there swiftly.

Let's gain strength in youth
And be courageous in everything.
To live for endless days
To get firmness and grace.

Let's walk eagerly,
Get rid of fear,
And let all friends enjoy in company!

*Translated by Vanmukil*

## 22. சிரிப்பே முத்தைச் சீட்டு

சோலை வழியில்
    தொடுக்கும், மணிக்கிளைசூழ்
ஆலின் அடியில்
    அமைந்திட்ட திண்ணையிலே
நண்பன் வருகையினை
    நான்பார்த் திருக்கையிலே
வெண்பல்லைப் பூவிதழால்
    மூடியொரு மெல்லிதான்
போனாள் இடதுகை
    பொற்குடத்தைப் போட்டணைத்தே!
நானேஅப் பொற்குடமாய்
    நாட்டில் பிறந்தேனா?

தோகையவள் போகையிலே
    துள்ளும் வளர்ப்புமான்
பாகல் கடித்த
    படுகசப்பால் ஓடிவந்தே
அன்னாளை அண்டி
    அழகு முகம் எடுக்கப்
பொன்னான முத்தமொன்று
    பூவை கொடுத்தாளே,
அந்தமான் நானாய்
    அமைந்தேனோ? இல்லையே!
எந்த வகையிலே
    ஏந்திழையை நான் பிரிவேன்?

## *22. Smile, the Warranty!*

---

In a garden path,
When I sat under a banian tree,
With slender branches entwined,
A friend's arrival awaiting,
A dainty damsel passed by,
Her white teeth the soft lips enclosing,
A golden pail her left arm embracing.
Did I become
The golden pail myself?

As the beauty passed by,
A frolicking pet deer,
Running away from biting a bitter gourd,
Reached her, lifting its fine head.
The lithsome beauty gave a blissful kiss.
Did I become the deer? Alas, No!
How indeed shall I ever be away from her?

நீர்கொண்டு நேரில்வரும்
    நேரிழையைக் கண்டணைத்தாள்
பேர்கொண்ட நேரிழையாள்
    பெற்றதைநான் பெற்றேனா?
மங்கை வழிநடந்து
    சோலை மணிக்குளத்தில்
தங்குநீர் வெள்ளம்
    தழுவி மலர்மேனி
ஆழம் மறைக்க
    அவள்மூழ்கி னாள்அந்த
ஆழப் புனலும்தான்
    ஆனேனா? இல்லையே!

தாழ உடைஉடைத்துத்
    தண்ணீர்க் குடம்தாங்கி
வந்தாள், வரும் வழியில்
    வந்துநான் காத்திருந்தே
செந்தாழை பூத்துச்
    சிரிக்கச், சிரிப்பொலியாய்ப்
பொற்பொடியை உண்டள்ளிப்
    பூவை வழிமறைக்க
நற்கையால் தான்துடைத்தாள்,
    நான்நிற் பதைக்கண்டாள்
கொத்தெடுத்த கோவைப்
    பழஉதடு தான்திறந்தே
முத்தெடுத்து நான்மகிழ
    முன்வைத்தாள்! அன்பின்
இருப்பெல்லாம் நீ ஆள்க
    என்றாள்! அவளின்
சிரிப்பதற்குக் குத்தகைச்
    சீட்டு!

A slender beauty,

Coming straight with a pail of water

She embraced.

Did I get what she got?

The girl walked by.

At a garden - pond,

She let the waters embrace

And hide her soft body.

Did I become the deep waters? Alas, No!

Her dress hanging low,

She came with a pail of water.

I waited, hiding her way,

With *Thazhai* blooms, bright and golden;

Brushing them aside with her beautiful hands,

She saw me standing.

Her soft cherry lips she parted,

And smiled to my great delight,

And said, "May you have all my love."

Her smile was the warranty!

*Translated by R.Ganapathy*

# 23. சொல்லும் செயலும்

சொல்வதென்றால் வெட்கமடி தோழி-சொல்லச்
சொல்லுகின்றாய் என்துணைவன்
சொன்னதையும் செய்ததையும்
சொல்வதென்றால்...

முல்லைவிலை என்ன என்றான்
இல்லைஎன்று நான் சிரித்தேன்
பல்லைஇதோ என்று காட்டிப்
பத்துமுத்தம் வைத்து நின்றான்.
சொல்வதென்றால்...

பின்னலைப் பின்னே கரும்பாம்பென்றான்- உடன்
பேதை துடித்தேன் அணைத்துநின்றான்
கன்னல் என்றான் கனியிதழைக்
காதல்மருந் தென்று தின்றான்.
சொல்வதென்றால்...

நிறையிருட்டில் ஒருபுதிரைப் போட்டான்;
நிலவெறிப்ப தென்னவென்று கேட்டான்.
குறைமதியும் இல்லைஎன்றேன்.
குளிர்முகத்தில் முகம்அணைத்தான்.
சொல்வதென்றால்...

## 23. Word and Deed

---

I feel ashamed to narrate, oh friend!
You bid me say what my partner
Said and did.
I feel ashamed...

He asked: "What is the price of jasmine?"
Saying 'No', I laughed.
Pointing to the teeth, he said: "Here they are!"
And ten times kissed me.
I feel ashamed...

It was my plaited hair; but he said:
"Lo, the black serpent behind you!"
At this, I-the lass, trembled and he hugged me close.
He called my fruit - like lips sweetcane;
Saying it is love's medicament, he chewed them.
I feel ashamed...

In dense darkness, he plied me with a riddle.
"Wherefore does it shine - the moon?" said he.
I said: "Even the crescent isn't there".
He then pressed his face on my cool visage.
I feel ashamed...

*Translated by T.N. Ramachandran*

# 24. வண்டிக்காரன்

அதோ பாரடி அவரே என் கணவர்–
அதோ பாரடி!
புதுமாட்டு வண்டி ஓட்டிப்
போகின்றார் என்னை வாட்டி!
அதோ பாரடி!

இருப்பவர் உள்ளே முதலாளி செட்டி
ஏறுகால் மேல்தானென் சர்க்கரைக் கட்டி
தெரிய வில்லையோடி தலையில் துப்பட்டி?
சேரனே அவர் என்றால் அதில் என்ன அட்டி?
அதோ பாரடி!

ஐந்து பணத்தினை என்னிடம் தந்தார்
அடிசாயும் முன்னே வரவு மிசைந்தார்
அந்தி வராவிட்டால் பெண்ணே இந்தா
''ஆசைமுத்தம்'' என்று தந்து நடந்தார்!
அதோ பாரடி!

## *24. The Cartman*

---

Hullo!, my girl!
Behold him! There is my husband
Who goes driving the new bullock cart,
Causing me to suffer in anguish.
Behold him!

Seated inside is the Chettiyar landlord,
But on the yoke is seated my lover
Don't you see the turban on his head?
Who would doubt
Even if he were called a chera king?

Five coins he gave me as he left,
Promised his early return before sunset.
Take thou my loving kiss now
If I fail to return in the evening, here it is
So saying, he gave me a kiss and walked away!
Behold him!

*Translated by N. Shanmugasundaram*

# *25. ஒன்பது சுவை*

---

### 1

### உவகை

*(இரவு! அவள் மாடியில் நின்றபடி, தான் வரச் சொல்லியிருந்த காதலனை எதிர்பார்க்கின்றாள். அவன் வருகின்றான்.)*

**காதலன்**

என்மேல் உன்றனுக் கெத்தனை அன்படி!
என்உயிர் நீதான்! என்னுடல் நீதான்:
உன்னை யன்றிஇவ் வுலகின் ஆட்சியும்
பொன்னும் வேண்டேன், புகழும் வேண்டேன்.
காத்திருப் பேன்எனக் கழறினை வந்தேன்.
பூத்திருக் கும்உன் புதுமுகம் காட்டினை,
மாளிகை உச்சியின் சாளரம் நீங்கி
நூலே ணியினைக் கால்விரல் பற்றித்
தொத்தும் கிளிபோல் தொடர்ந்திறங் குவதாய்
முத்தெழுத் தஞ்சல் எழுதினை! உயிரே
இறங்கடி ஏந்தும் என்கை நோக்கி!

*(அவள் நூலேணி வழியாக இறங்குகிறாள்.)*

# *25. The Nine Sentiments*

---

**1**

**Love**

*(It is night. She awaits him from near the window upstairs. He comes)*

The Lover

How great is your love for me!
You are my life, you are my body.
Without you life has nothing to lure me
Nor gold, nor even heady fame.
You had said you would stand
Await for me and so I came
And your dear flower - like face
I see through the open window
Through which, you, my life have written
In letters that shine like gems inlaid
That you would come down from the room
upstairs
Putting your dainty feet on the rungs
Of a ladder made of ropes, like a parrot.
So come down now to my waiting arms
Eager, throbbing to welcome you!

*(She comes down the rope ladder)*

காதலன்

வா பறந்து! வா வா மயிலே!

*(அவளைத் தோளில் தாங்கி இறக்குகிறான்.)*

காதலன்

வளைந்தது கையில் மாம்பழக் குலைக்கிளை!
ஓரேஒரு முத்தம் உதவு . சரி! பற!

*(இருவரும் விரைந்து சென்று அங்கிருந்த ஓர் குதிரைமேல் ஏறிப் புறப்படுகிறார்கள்.)*

## 2

## வியப்பு

*(இருவரும் ஒரு சோலையை அடைகிறார்கள். குதிரையை ஒரு மரத்தில் கட்டி.)*

காதலன்

வந்து சேர்ந்தோம் மலர்ச்சோ லைக்கண்!

என்னிரு தோளும் உன்உடல் தாங்கவும்,

உன்னிரு மலர்க்கைகள் என்மெய் தழுவவும்

ஆனது! நகரினை அகன்றோம் எளிதில்!

*(இருவரும் உலாவுகின்றனர்.)*

காதலன்

சோம்பிக் கிடந்த தோகை மாமயில்

தழைவான் கண்டு மழைவான் என்று

களித்தாடு கின்றது காணடி! வியப்பிது!

*(சிறிது தொலைவில் செல்லுகிறார்கள்.)*

The Lover

Come to me the wings of love,
My own peahen, to my waiting arms!

*(He receives her coming down, on his shoulders)*

The Lover

The branch of the mango tree that bears
Luscious fruit has bent to my will.
Bless me dear with a single kiss.
Now let's hurry, let's flee like the wind!

*(They walk up quickly to a horse, get upon it and ride away)*

## 2

## Wonder

*(The lovers reach a bower and tie the horse to a tree)*

The Lover

We have reached a blossomed bower,
With my shoulders supporting you
And your flower-like hands around me!
What relief! Dear, we have with ease
Left behind us the bothersome city!

*(They walk about)*

The Lover

The peacock lying lazy with its
Spreading plumage,
Deluded now that the sky's cloudy
Dances away in frenzied joy.
Look my dearest, at the peacock's antics!
Do not they engender a sense of wonder!

## 3

## இழிப்பு

### காதலன்

குள்ளமும் தடிப்பும் கொண்ட மாமரத்
திருகிளை நடுவில் ஒருமுகம் தெரிந்தது!
சுருங்கிய விழியான்; சுருண்ட மயிரினன்;
இழிந்த தோற்றத்தன் என்னபார்க் கின்றான்?
நமைநோக்கி ஏனவன் நகரு கின்றான்?
உற்றுப்பார்! அவன் ஒருபெருங் கள்வன்.
காலடி ஓசை காட்டாது மெல்லஅக்
கொடியோன் நம்மேற் குறியாய் வருவதை
உணர்க!அன்புக் குரியாய் உணர்க!

*(தம்மை நோக்கி வரும் அத்தீயனை இருவரும் பார்க்கிறார்கள்.)*

## 4

## வெகுளி (கோபம்)

### காதலன்

வெகுளியை என்உளத்து விளைக்கின் றானவன்!
புலிபாய்ந் திடும்எனில் போய்ஒழிந் திடும்நரி!

*(காதலன் கண்ணிற் கனல் எழுகின்றது. தன் உள்ளங்கை மடங்குகின்றது. அந்தக் கள்வன் தன்னை நெருங்குவதையும் காதலன் காணுகின்றான். காதலி காணுகின்றாள்.)*

## 3

## Contempt

The Lover

I glimpsed a face betwixt two branches
Of the mango tree that's short and stout;
He has eyes like a slit; his hair is curly,
He is of a low, despicable aspect.
Why does he look so keenly at us?
Why does he move with us as his target?
Look at him closely! He is a bandit.
See how with silence and secrecy
This evil-doer creeps upon us
With deliberation! Understand,
The one object of all my love!
He doesn't mean any good to us!

*(They look keenly at the evil one who is moving towards them)*

## 4

## Anger

The Lover

This low person starts the fires
Of burning anger in my heart!
When the tiger pounces
The jackal cowers and slinks away!

*(The lover's eyes let out sparks of rage. His fist hardens. The lovers watch the brigand approach)*

## 5

## நகை

**காதலன்**

நட்டு வீழ்ந்தான் நடை தடுமாறி!
கள்ளுண் டான். அவ் வெள்ளத் திலேதன்
உள்ளம் கரைத்தான்; உணர்வி ழந்தான்.
உடைந்தது முன்பல் ஒழுகிற்று குருதி!

*(இருவரும் சிரிக்கிறார்கள்.)*

**காதலன்**

ஆந்தைபோல் விழித்தான். அடங்காச் சிரிப்பை
நமக்குப் பெண்ணே நல்விருந் தாக்கினான்.

*(இருவரும் மறுபுறம் செல்லுகிறார்கள்.)*

## 6

## மறம் (வீரம்)

**காதலன்**

என்ன முழக்கம்? யார் இங்கு வந்தனர்?
கால்பட்டுச் சருகு கலகல என்றது.

*(உறையினின்று வாளை உருவும் ஓசை கேட்கிறது)*

## 5

## Humour

The Lover

His legs weave in uncertainty.
Lo! He fumbles, crashes down
In a lump on the ground. He, sure, is drunk!
His consciousness is quite dissolved
And carried away in the frothy flood
Of alcohol! He knows nothing
And feels nothing! Look, his tooth
His front tooth is broken and, blood,
Crimson blood is making his face
One blotch of red!

*(The lovers laugh in amusement)*

The Lover

He is now puzzled, he looks around
In an alcoholic, unsure gaze!
He has been the cause, my dearest love,
For a pleasant moment of hilarious laughter

*(They go in a different direction)*

## 6

## Heroism

The Lover

Wherefrom the noise? Who's it that's coming?
The dry leaves crushed under walking feet
Make a tell-tale noise! Someone's about!

*(The sound of a sword being drawn from its scabbard is heard)*

காதலன்

எவனோ உறையினின் றுருவினான் வாளை,
ஒலிஒன்று கிலுக்கென்று கேட்டது பெண்ணே!
ஒருபுறம் சற்றே ஒதுங்கி நிற்பாய்.
நினது தந்தை நீண்முடி மன்னன்
அனுப்பிய மறவன் அவனே போலும்!

*(காதலி ஒரு புறம் மறைந்து, நடப்பதை உற்று நோக்கியிருக்கிறாள்.)*

காதலன்

*(தன்னெதிர் வந்து நின்ற மறவனை நோக்கி)*

அரசன் ஆணையால் அடைந்தவன் நீயோ?
முரசு முழங்கும் முன்றிலுக் கப்பால்
அரண்மனை புனைந்த அழகு மாடியில்
வைத்தீபூ மாலையை வாடாது கொணர்ந்தது-
இத்தோள்! உனைஇங் கெதிர்ப்பதும் இத்தோள்!
போர்மற வர்சூழ் பாரே எதிர்ப்பினும்
நேரில் எதிர்க்க நினைத்ததும் இத்தோள்!
உறையி னின்று வாளை உருவினேன்

The Lover

My dear, some one drew his sword
From his scabbard. I heard the sound,
The clinking sound of metal moving.
Please stand aside in a protected place.
It's possible your royal father
Has sent a warrior to intercept
His daughter and lover fleeing the city!

*(The girl stands concealed, watching keenly what is going on)*

The Lover

*(To the warrior who has come up and who now stands before him)*

You must be the minion come
As ordered by the king of the realm!
Know, then, fellow, that this is the arm
That carried here the wreath of blooms
From the first floor room of the stately mansion
Reached by crossing the open courtyard
Where the drums of the palace reverberate-
This is the arm that brought the garland
Fresh, unfaded! And this, the arm
That is going to offer battle to you
Without this girl there's no life for me;
She was brought that we may live,
Brought here by the strength and the dexterity
Of this same arm that is prepared to fight
The world of warriors if it stands before me!
Here I draw my sword for the fight!

தமிழ்நாட்டு மறவன்நீ தமிழ்நாட்டு மறவன்நான்
என்னையும் என்பால் அன்புவைத் தாளையும்
நன்று வாழ்த்தி நட வந்தவழி!
இலைஎனில் சும்மா இராதே; தொடங்கு போர்!

*(வாட்போர் நடக்கிறது.)*

**காதலன்**

மாண்டனை! என்வாள் மார்பில் ஏற்றாய்;
வாழி தோழா! நின் பெயர் வாழ!

*(வந்தவன் இறந்துபடுகிறான்.)*

## 7

## அச்சம்

*(காதலன் தன் காதலியைத் தேடிச் செல்கிறான்.)*

**காதலன்**

அன்பு மெல்லியல், அழகியோள் எங்கே?
பெருவாய் வாட்பல் அரிமாத் தின்றதோ!
கொஞ்சும் கிள்ளை அஞ்ச அஞ்ச
வஞ்சக் கள்வன் மாய்த்திட்டானோ!

*(தேடிச் செல்லுகின்றான். பல புறங்களிலும் அவன் பார்வை சுழல்கின்றது.)*

I am a fighter of the Tamil land
You, too, you are a Tamil warrior!
You now can bless me and the girl
Whose heart around me stands entwined.
You can bless us and go your way;
Or, if you want the taste of battle,
Do not tarry, let us fight!

*(A sword fight starts)*

### The Lover

You are dead, slain by a mortal wound
On your chest from my triumphant sword!
Long live, comrade! May your name
Live on, immortal, through the ages!

*(The warrior dies)*

## 7

## Fear

*(The lover goes searching for the girl)*

### The Lover

Where is she, my own darling,
The delicate beauty, my heart's objective?
Is it possible she has been killed
And eaten by a lion, big-mouthed, with teeth
Sharp and long like a warrior's sword?
Or has she been felled by a guileful bandit
While the lisping parrot was quaking in panic?

*(He goes seeking her. His eyes look everywhere, panic burgeoning)*

## 8

# அவலம்

*(காதலி ஒருபுறம் இறந்து கிடக்கிறாள். காதலன் காணுகிறான்.)*

**காதலன்**

ஐயகோ அவள்தான்! அவள்தான்! மாண்டாள்.
பொறிவிழிக் கள்வன் புயலெனத் தோன்றி
அழகு விளக்கை அவித்தான்! நல்ல
கவிதையின் சுவையைக் கலைத்தான் ஐயகோ!
என்றன் அன்பே, என்றன் உயிரே!
என்னால் வந்தாய், என்னுடன் வந்தாய்.
பொன்னாம் உன்னுயிர் போனது! குருதியின்
சேற்றில் மிதந்ததுன் சாற்றுச் சுவையுடல்!
கண்கள் பொறுக்குமோ காண உன்நிலை?
எண்ணம் வெடித்ததே! எல்லாம் நீஎன
இருந்தேன்; இவ்வகை இவ்விடம் இறந்தாய்?
தனித்தேன், உய்விலை; தையலே, தையலே
என்பால் இயற்கை ஈந்த இன்பத்தைச்
சுவைக்குமுன் மண்ணில் சுவர வைத்துக்
கண்ணீர் பெருக்கிநான் கதற வைத்ததே!
ஐயகோ பிரிந்தாய்? ஐயகோ பிரிந்தாய்!

## 8

## Anguish

*(The girl is lying dead. The lover comes across her body)*

### The Lover

Oh! It's she, my darling girl that lies
Slain by him, the thief with eyes that spit
Sparks of fire! O how the lamp of love
By the cyclone raging fierce is quenched!
How the flavour of vaulting poetry
Stands destroyed by the evil hand of man!
My dearest love, my pulsing life, you came
Because I called, because I brought you here.
Now your life, your precious life is gone
And your fragrant body lies athwart the mire
Of gurgling blood! O what a sight to see!
Can my eyes bear seeing you in this
Horrid state! My mind to a million pieces
Is shattered. Love! To me you always were
Everything. With you thus slain I stand
Orphaned, left alone. There seems to be
No hope in life of future joy for me.
O girl, my love, what nature gave to me
To taste has spilt to percolate in the earth
Before I ever could put my lips to it,
To sip a mouthful! Lament I in vain!
You are gone, my sweetest girl, my life,
Beyond recall! For ever are we parted!

9

# அறநிலை

கல்வி இல்லார்க்குக் கல்வி ஈகிலார்
செல்வம் இல்லார்க்குச் செல்வம் ஈகிலார்
பசிப்பிணி, மடமைப் பரிமேல் ஏறி
சாக்காடு நோக்கித் தனிநடை கொண்டது!
அன்போ அருளோ அடக்கமோ பொறுமையோ
இன்சொலோ என்ன இருத்தல் கூடும்?
வாழான் ஒருவன் வாழ்வானைக் காணின்
வீழஇடும்பை விளைக்கின் றானே!
வையம் உய்யு மாறு
செய்வன செய்து கிடப்பேன் இனிதே!

## 9

## Ethical Reflection

There are people who won't teach
Those that need it, who won't give
Wealth, sustenance to those that lack them.
Hunger mounted on ignorance
Rides in state towards a holocaust
In such hearts, can these exist, -
Can love be found, or grace, forbearance
Modesty or words of sweetness?
If one who has no life to live
Sees another who has it still
He throws impediments in the other's way,
He injures him all he can!
I shall take a vow to live
To remedy the evils seen
Besetting the world of men!
My days shall in future be
Spent in the service of my fellowmen!

*Translated by A.V. Subramanian*

# 26. ஆலைத் தொழிலாளி

---

ஆலையின் சங்கே நீ ஊதாயோ? மணி
ஐந்தான பின்னும் பஞ்சாலையின்...
காலைமுதல் அவர் நெஞ்சம் கொதிக்கவே,
வேலை செய்தாரே என்வீட்டை மிதிக்கவே
ஆலையின் சங்கே...

மேலைத் திசைதனில் வெய்யிலும் சாய்ந்ததே
வீதி பார்த்திருந்த என் கண்ணும் ஓய்ந்ததே
மேலும் அவர்சொல் ஒவ்வொன்றும் இன்பம் வாய்ந்ததே
விண்ணைப் பிளக்கும் உன் தொண்டையேன் காய்ந்ததே
ஆலையின் சங்கே...

குளிக்க ஒரு நாழிகை யாகிலும் கழியும்
குந்திப்பேச இரு நாழிகை ஒழியும்
விளைத்த உணவிற்கொஞ்ச நேரமும் அழியும்
வெள்ளி முளைக்குமட்டும் காதல்தேன் பொழியும்
ஆலையின் சங்கே...

## *26. The Factory Worker*

---

Oh! the siren of the factory
Why don't you sound even after five O'clock?
From morn he sweated there
With his heart aglow now to return here
Why don't you sound even after five
Oh! the siren of the factory.

The sun has sunk into the western horizon
My eyes are weary, watching the street for him
Every word of him is soaked in delight
Why is your thundering throat still remain silent?
Oh! the siren of the factory.

Some time is spent for him to bathe
Still more time to sit together and share
A little time to eat the cooked food
Till dawn to delight in the nectar of our love
Siren! why don't you sound even after five?

*Translated by N.Shanmugasundaram*

# 27. தபால்காரன்

வருகின்றார் தபால்காரர்-கடிதம்
தருகின்றாரோ இல்லையோ-
வருகின்றார் தபால்காரர்!

தருகின்றார் கடிதம் எனினும் அது எனக்
குரியதோ என் தந்தைக் குரியதோ
வருகின்றார் தபால்காரர்!

வரும் அக்கடிதம் அவர் வரைந்ததோ
மாமியார் வரைந்ததோ
திருமணாளர் வரைந்த தாயினும்
வருவதாய் இருக்குமோ இராதோ
வருகின்றார் தபால்காரர்!

அன்பர் அவர் வருவதாயினும்
ஆடி போக்கியோ, விரைவிலோ
இனறு போதல்நூ றாண்டு போதலே
அன்றி நாளைஎன் பதுவென் சாதலே
வருகின்றார் தபால்காரர்!

## 27. The Postman

---

The postman comes - letters
He delivers or not,
The postman comes!

Whether there is a letter
For me or for my father
The postman comes!

The letter that comes was it written by him?
Or by my mother-in-law?
Perhaps by my worthy husband?
Will the letter come, or not?
The postman comes!

Whether my beloved is coming,
After *Adi* month passes or sooner
A day's passing is like a century,
If defended, it is my death
The postman comes!

*Translated by N.Natarajan*

# 28. உழவன் பாட்டு

சென்று பொழுதுசாய-வரு
கின்றேனடி விரைவாக!
இன்று தவறினால் ஈரம் போகுமடி
இருட்டிப் போகுமுன் விதைக்கலாகுமடி- சென்று

வேலி முள்சுமந்த கூலிகொடடி
ஆள் வந்தால்-நீ
வேளை ஆகுமுன் கொண்டுவா
கூழிருந்தால்!

வேலைக்காகப் பகல் போதில்
உன்னைப் பிரிந்தால்
விடியுமட்டும் யார் கேட்பர்
காதல் புரிந்தால்- சென்று

சேவல் குரல்கிழியக் கூவல்
கேளடி கரும்பு! - நின்
ஆவல் தெரியுமடி போக
விடைகொடு! திரும்பு!

தேவையிருக்கையில் உன்றன்
நெஞ்சோ இரும்பு!
சிவலைப் பசுவுக்கோ தீனி
வைக்க விரும்பு- சென்று

## *28. The Song of the Ploughman*

---

Leaving you now I will hasten before sunset
If we miss today the moisture of the land will go dry
We shall sow the field before it is dark
Leaving you now.

Give him the wages for carrying the thorny fence,
If at all the labourer comes.
Before it is late
Bring me gruel if you have some!

For labour's sake only
I leave you now in day time,
But if we make love till dawn
Who is there to question us?

My sweet! Listen
To the cocks crowing,
Turn and bid me adieu!
Revealing your love!

When I need you eagerly,
You keep you harsh like steel!
Darling! Be intent
To feed our red-hued cow.

*Translated by N.Shanmugasundaram*

# 29. முதியோர் காதல்

---

## மூத்தபிள்ளை முதியவரோடு

வேடப்பன் தம்பி யான
வெற்றிவேல், மனைவி யோடு
வேடப்பன் வாழ்ந் திருந்த
வீட்டினில் வாழு கின்றான்.
வேடப்ப னோ, தன் தந்தை
வீட்டினிற் குடும்பத் தோடு
பீடுற வாழு கின்றான்,
பெற்றவர் முதுமை பெற்றார்.

## முதியோருக்கு மருமகள் தொண்டு

வேடப்பன் மனைவி யான
நகைமுத்து மிகவும் அன்பாய்
வேடப்பன் தந்தை தாய்க்கு
வேண்டுவ தறிந்தே அன்னார்
வாடுதல் சிறிதும் இன்றி
வாய்ப்புறத் தொண்டு செய்வாள்
ஆடிய பம்ப ரங்கள்
அல்லவா அம்மூத் தோர்கள்?

## *29. Love of the Old Couple*

---

**The old parents live with their first son**

With his wife, Vetrivel, the younger one

Dwells in Vedappan's abode, the elder

With family in his father's mansion

Lives an honouable life upright;

Pretty old their parents both have grown.

**The daughter-in-law's service**

Vedappan's wife Nagaimutthu with love

Infinite entertains his parents infirm

Knowing their needs, never leaving them sad,

Seeking them with service said and unsaid;

Aren't the old, tops that have stopped spinning?

### தலைக்கடை அறையில் மணவழகர் தங்கம்

தலைக்கடை அறைக்குள் அந்தத்
தளர்மண வழகர் ஓர்பால்
இலக்கியம் படிப்பார்! இன்பத்
துணைவியர் கேட்டி ருப்பார்!
உலர்ந்தபூங் கொடிபோல் தங்கத்(து)
அம்மையார் ஒருபால் குந்திப்
பலஆய்வார்; துணைவர் கேட்பார்;
துயிலுவார்; பழங்கா லத்தார்.

### மணவழகர் உடல்நிலை

மணவழ கர்க்கு முன்போல்
வன்மையோ தோளில் இல்லை!
துணைவிழி, ஒளியும் குன்றக்
கண்ணாடித் துணையை வேண்டும்
பணையுடல், சருகு! வாயிற்
பல்லில்லை! மயிர்வெண் பட்டே!
உணவெலாம்! பாலின் கஞ்சி!
உலவுதல் சிறிதே ஆகும்.

### தங்கத்தம்மையார் உடல்நிலை

நன்னிலாக் கதிர்போல் கூந்தல்
நரைத்தது. கொண்டை யிட்டு
முன்னிலா முகில்உண் டாற்போல்
முகத்தொளி குறைய லானார்!
அன்புடல் அறத்தால் தேய்ந்த
ஆயிரம் பிறைமூ தாட்டி
மன்னுசீர் அன்னாள் மெய்யோ
வானவில் போற்கூ னிற்றே!

## The old couple at the front room

In the room at front reads he, the aging
Manavazhagar, works magnanimous;
She, his pleasing support, with pleasure, listerns;
Discusses topics diverse this creeper dry;
Speak, hear and sleep, these people of the dead past.

## Manavazhagar's health

Gone is the shoulder he had as a youth!
Lost is the sight that needed no spectacles!
Drained is the body; decayed are the teeth;
Turned is the hair into white silk; porridge
Is his only food; limited is his stroll.

## Thangatthammaiyar's health

Her bundled hair turning white like lunar rays,
Face losing its lustre like a cloud-eaten moon,
She has lived to see a thousand crescents;
The grandam made weak by deeds glorious
Bore her body bent double like a rainbow!

### முதியோர் அறைக்கு மக்கள் பேரர் வந்து போவார்கள்

இருபெரு முதியோர் தம்மைத்
தலைக்கடை அறைசு மந்து
பெரும்பேறு பெற்ற தன்றோ!
பிள்ளைகள், அவர் மனைமார்
வருவார்கள்; அறங்கேட் பார்கள்.
மற்றுள பேர்த்தி பேரர்
வருவார்கள் அளவ ளாவி
மணியோடு பள்ளி செல்வார்.

### இருமுதியோர் நிரம்பிய உள்ளம்

மைந்தர்க்குக் கல்வி சேர்த்தோம்
மகள்மார்க்கும் அவ்வா றேயாம்
எம்தக்க கடன்மு டித்தோம்
இனிதாக வாழு கின்றோம்.
முந்துறச் சுற்றத் தார்க்கும்
செய்வன முழுதும் செய்தோம்
இந்தநாள் வரைக்கும் வாய்மை
இம்மியும் மறந்த தில்லை.

### நாட்டுக்கு நலம் செய்தோம்

இந்நாட்டின் நலனுக் காக
நல்லறம் இயற்றி வந்தோம்.
எந்நாளும் பிறர்க்குத் தீமை
எங்களால் நடந்த தில்லை.
சின்னதோர் நன்று செய்தார்
திறம்மறந் தறியோம் என்றே
இன்னிசை பாடும் அன்னார்
இரண்டுள்ளம் இன்பம் கொள்ளும்.

**The visitors to the front room**

Blessed with the presence of the famed pair
Fortunate was the front room frequented
By their sons, 'their' wives, who came for counsel,
And their charming offspring loquacious.
Who left for school on time after chattering.

**The two contented souls**

Sons and daughters we gave education;
Our duty discharged we live happily;
To our Kith and Kin we left little undone.
Till this day never have we swerved a little
From the cherished path of truth profound.

**Our service to the nation**

"All our deeds were done for this nation's good;
Never have we harmed other; never have
We ignored any little good done to us";
This was but the burden of the sweet song
That delighted the minds dear to each other.

### முதியோளே வாழ்கின்றாள் என் நெஞ்சில்

விதைத்திட்டேன் அவளின் நெஞ்சில்
என்றனை! நேற்றா? அல்ல;
இதற்குமுன் இளமை என்ப
தென்றைக்கோ அன்றைக் கேநான்!
கதையாகிக் கனவாய்ப் போகும்
நிகழ்ந்தவை; எனினும் அந்த
முதியோளே வாழு கின்றாள்
என்நெஞ்சில் மூன்று போதும்.

### இருக்கின்றாள் அது எனக்கின்பம்

புதுமலர் அல்ல; காய்ந்த
புற்கட்டே அவள்உ டம்பு!
சதிராடும் நடையாள் அல்லள்
தள்ளாடி விழும்மூ தாட்டி!
மதியல்ல முகம்அ வட்கு
வறள்நிலம்! குழிகள் கண்கள்!
எதுஎனக் கின்பம் நல்கும்?
"இருக்கின்றாள்" என்ப தொன்றே!

### நினைக்கின்றாள் நினைக்கிறேன் நான்!

இனிக்கின்ற தமிழை அன்னாள்
இசைக்கின்ற ஆற்றல் இல்லை
தனித்துள்ளேன் ஒருபால்! அன்னாள்
தனித்துள்ளாள் மறுபு றத்தே!
எனைக்கண்டும், என்னைத் தொட்டும்
பயில்கிலாள்; எனினும் என்னை
நினைக்கின்றாள் நினைக்கின் றேன்நான்:
நிலைக்கின்ற தென்பால் இன்பம்!

## She lives in my heart

"Did I sow myself in her heart yesterday?

No! It was done on the very day when

Youth came into being; everything else

May fade into a fable and a dream;

That old woman ever lives in my heart".

## My source of joy

Not a blossom, her body is but dried grass;

Not a damsel dancing, she is old and faltering;

Not a moon, her face is a fallow land;

Her eyes are only pits; What will please me?

The fact that she survives should sustain me.

## We think of each other

She cannot sing the sweet song of Tamil;

Alone I am here, alone she is there;

She cannot enjoy seeing me, touching me;

But she thinks of me and I think of her;

That effects in me delight eternal.

**அன்புள்ளம் காணுகின்றேன்**
**அகத்தின்பம் காணுகின்றேன்**

என்பும்நற் றோலும் வற்ற,
ஊன்றுகோல் இழுக்கி வீழத்
தன்புது மேனி, காலத்
தாக்கினால் குலைய லானாள்.
என்முது விழிகா ணற்கும்
இயலாதே! எனினும் அன்னாள்
அன்புள்ளம் காணுகின்றேன்!
அகத்தின்பம் காணு கின்றேன்!

**பேரர் அம்மாயி என்றழைப்பார்**
**அதுகேட்பேன் இன்பம் செய்யும்**

செம்மா துளைபி ளந்து
சிதறிடும் சிரிப்பால் என்னை
அம்மாது களிக்கச் செய்வாள்!
அதுவெலாம் அந்நாள்! இந்நாள்
அம்மணி நகைப்பும் கேளேன்
ஆயினும் பேரர் ஓர்கால்
"அம்மாயீ" என்பார்! கேட்பேன்
அமிழ்தினில் விழும்என் நெஞ்சம்!

**அன்னை என்றழைப்பார் மக்கள்**
**இன்புறும் என்றன் நெஞ்சம்**

இன்னிழை பூண்டி ருப்பாள்
அத்தான்என் றழைப்பாள் என்னை
நன்மொழி ஒன்று சொல்வாள்
நான்இசை யாழே கேட்பேன்;
அன்னவை அந்நாள்! இந்நாள்
அன்னவள் தன்னை நோக்கி
'அன்னாய்' என்றழைப்பார் மக்கள்
அதுகேட்பேன்; இன்பம் கொள்வேன்!

### Her golden heart and my inner joy

She has lost the sap of youth; her dry bones,

And wrinkled skin are ravages of time;

The stick she holds in hand cannot steady her;

My eyes can't see her but can see her heart;

That engulfs me in inner joy supreme.

### She is called grandame

Laughing like a opened pomegranate,

That woman used to thrill me in those days;

Now I cannot hear her laugh anymore:

But when our grandchildren call her granny,

My heart goes into raptures nectarean.

### She is called mother

Wearing jewels valuable she would call me

'*Atthan*' and add a sweet word alluring

Which would sound like the music of a lyre;

All these are things of the past; but today

I am moved most when she is called mother.

## அவள் உள்ள உலகம் எனக்கு உவப்பூட்டும்

உயிர்ப்பினை நிலைநி றுத்தும்
நன்மழை! உலக நூலைச்
செயிர்ப்பற நீத்தார் செய்வார்
செவ்வேஅவ் வறநூல் தன்னை
முயற்சியிற் காப்பார் மன்னர்.
எனக்கென்ன இனி? அம் மூதாட்டி
உயிர்வாழ்வாள் ஆத லாற்றான்
உவப்பூட்டும் எனக்கிவ் வையம்!

## அவர் வாழ்வாவது அவள்மேல் வைத்த காதல்

வாழாது வாழ்ந்து மூத்த
மணவழ குள்ளம் இஃதே!
ஆழாழிப் புனல் அசைவை,
ஆர்ப்பினை எண்ணி டாது
வீழுற அதனில் வீழ்த்தும்
இருப்பாணி போல்அ வள்மேல்
காமுற மனத்தில் வைத்த
காதலால் வாழு கின்றார்!

## என் நெஞ்ச மெத்தையில் துயிலுகின்றான்

காம்பரிந் திட்ட பூவைக்
கட்டிலில் பரப்பி, மேலே
பாம்புரி போலும் மேன்மைப்
பட்டுடை விரித்துப் போட்டால்
தீம்பாலைப் பருகி அன்பன்
சிறக்கவே துயில்வான், இன்றும்
மேம்பாட்டிற் குறைவோ? நெஞ்ச
மெத்தையில் துயிலு கின்றான்.

## Why I care for the world

Lives are nourished by rains favourable;
Famed works are authored by saints faultless;
Books didactic are preserved by kings' deeds;
What do I care about these? This world can
Delight me because that old woman lives.

## The sole concern of his life

Steady is the mind of Manavazhagu,
Who lived a full life, grew into a ripe age!
It knows only one ideal, one desire;
Like an iron nail, his love for her, firmly
Grounded in his heart gives him sustenance

## On the cushion of my heart

On a bed of flowers without thorny stems
Softened with a slough-like silk spread,
He would sleep sound after a cup of milk;
Even today he hasn't lost the state lofty;
Now the dear one rests on the cushion of my heart.

### நெஞ்சக் காட்டில் உலவும் மான்

பாங்குற மணியும் பொன்னும்
பதித்தபாண் டியன்தேர் போல
ஈங்கிந்தத் தாழ்வா ரத்தில்
எழிலுற உலவா நிற்பான்
ஏங்குமா றில்லை இன்றும்
என்னிரு கண்நி கர்த்தோன்
நீங்காமான் போல்என் நெஞ்சக்
காட்டினில் உலவு கின்றான்.

### என் நெஞ்சில் தேன்மழை அவன்

மெய்யுற வாய்சு வைக்க
விழி, அழ குண்ண, மூக்கு
வெய்யசந் தனத்தோள் மோப்ப,
விளைதமிழ் காது கேட்க,
ஐயன்பால் புலன்கள் ஐந்தால்
அமிழ்தள்ள வேண்டும்! இந்நாள்
பெய்கின்றான் என்நெஞ் சத்தில்
தேன்மழை, பிரித லின்றி!

### அவனைச் சுமக்க மனம் ஓயாது

அறம் செய்த கையும் ஓயும்
மக்களை அன்பால் தூக்கிப்
புறம்போன காலும் ஓயும்!
செந்தமிழ்ப் புலவர் சொல்லின்
திறம்கேட்ட காதும் ஓயும்!
செயல்கண்ட கண்ணும் ஓயும்!
மறவனைச் சுமக்கும் என்றன்
மனமட்டும் ஓய்த லில்லை.

## My heart is a forest for this deer

Like King Pandya's Chariot decked with gold,

He would in this very hall strut stylishly;

Even today I don't have to pine for this;

He, as dear to me as my twin eyes

Does roam like a hart in my heart-forest.

## The rain of honey in my heart

Would I derive delights ambrosial of

Sight, sound, smell, taste and touch from his body,

His Sandal-wood shoulders, his sweet Tamil;

Even today he does pour honey-heavy

Drops of rain in my heart, without departing!

## My heart bears him

The hand that gifts will grow tired of giving;

The legs that stir out to help children dear,

The ears that listen to Tamil chaste, eyes that see

May all seek rest; but the hero matchless

Doesn't become unbearable to my untiring mind.

**அயலவள் கண்படாமல் காத்து வந்தேன்**

வெயில்பட்டால் உருகிப் போகும்
மெழுகினால் இயன்ற பாவை!
பெயும்மழை பட்ட போதே
கரையும்கற் கண்டின் பேழை!
புயல்பட்டால் நிலைகொள் ளாத
பூம்பொழில்! என்ம ணாளன்
அயலவள் கண்பட் டால்சீர்
அழியும்என் றன்பால் காத்தேன்.

**தப்பொன்றும் இன்றி என் தமிழனைக் காத்தேன்**

தொப்பென்ற ஓசை கேட்டால்
துயருறும் என்றும், சாற்றில்
உப்பொன்று குறைந்தால் உண்ணல்
ஒழியுமே என்றும், ஒன்றை
ஒப்பெனில் ஒப்பா விட்டால்
உடைபடும் உள்ளம் என்றும்
தப்பொன்றும் இன்றி என்றன்
தமிழனை அன்பாற் காத்தேன்.

**எத்தீமை நேருமோ என்று நினைப்பாள் மூதாட்டி**

தற்காத்துத் தற்கொண் டானைத்
தான்காத்துத் தகைமை சான்ற
சொற்காத்துச் சோர்வி லாளே
பெண்என்று வள்ளு வர்தாம்
முற்சொன்ன படியே என்றன்
முத்தினைக் காத்து வந்தேன்.
எத்தீமை மனக்கு றைச்சல்
எய்துமோ எனநி னைப்பேன்!

## How I saved him from other women

A wax doll that will melt at the sun's sight,

A candy box that will dissolve in the rain,

A garden grand that a stormy wind will shake,

My husband wedded was guarded close by me

Lest a woman strange should sully his honour.

## My constant concerns

He shouldn't grieve hearing sounds slight and feeble;

He shouldn't starve because sauce lacks a little salt;

His heart shouldn't break when his word is not valued;

These were my concerns constant; this is how

I saved the Tamilian I own and love.

## The old woman's fear

She is great, who guards her virtue vital,

Tends her man with care and her tongue controls

With vigour never waning; the words wise

Valluvar uttered once, I value most;

My pearl I hid from harm and heart's worry.

**மணவழகர் இரவு நன்றாகத் துங்கினையோ என்றார்**

சேவல்கூ விற்று; வானம்
சிரித்தது; நூற்றைந் தாண்டு
மேவிய அழகர் கண்கள்
விரிந்தன! கிழவி யாரின்
தூவிழி மலர்ந்த! ஆங்கே
துணைவனார் துணையை நண்ணிப்
"பாவையே தூக்கப் பொய்கை
படிந்தாயோ இரவில்" என்றார்.

**அயர்ந்து தூங்கியதாகத் தங்கம் சாற்றினாள்**

குடித்தோமே பாலின் கஞ்சி!
குறட்பாவில் இரண்டு செய்யுள்
படித்தோமே. அவற்றி னுக்கு
விரிவுரை பலவும் ஆய்ந்து
முடித்தோமே! மொணமொ ணென்று
மணிப்பொறி சரியாய்ப் பத்தும்
குறித்தது துயின்றேன் இப்போ(து)
அழைத்தீர்கள் விழித்தேன் என்றாள்.

**தம் தூக்க நலம் சொல்வார் தள்ளாத கிழவர்**

நிறையாண்டு நூறும் பெற்ற
நெடுமூத்தாள் இதனைக் கூற
குறைவற்ற மகிழ்ச்சி யாலே
அழகரும் கூறு கின்றார்;
நிறுத்தினோம் நெடிய பேச்சை
பொறி,மணி பத்தே என்று
குறித்தது துயின்றேன் சேவல்
கூவவே எழுந்தேன் என்றார்.

## Did you sleep well?

The cock crew; the sky smiled; opened the eyes of
Azhagar one hundred and five year old!
Her eyes benign blossomed! Her support firm
Approaching his helpmate asked with anxiety,
"Did you sink in the river of slumber?"

## I had a sound sleep

We did drink milk porridge, read two kurals,
Studied them with commentaries Copious;
When the clock screeching struck ten right on time
Asleep I fell; as you called me now
I woke up sudden;" thus spoke she to him.

## He speaks of his sleep

Hearing this from the old woman ancient
who has lived one hundred years full and gay,
Azhagar, with joy extreme, answered thus;
"We ended our talk when the clock struck ten;
I slept and got up as the cock' 'gan to crow."

### கிழவன் உடனிருப்பதில் கிழவிக்கு நாணம்

புதுக்காலை; குளிர்ந்த காலைப்
போதிலே உனைநெ ருங்கி
இது பேசும் பேறு பெற்றேன்
என்றனன் கிழவோன்! அன்னாள்
எதிர்வந்த அமிழ்தே, அன்பே,
யான்பெற்ற இன்பம் போதும்
அதோ நகை முத்து வந்தாள்
நமைக்காண்பாள் அகல்வீர் என்றாள்.

### அவள் தூங்கவில்லை இரவுமணி பத்தாகியும்

மாநில மக்கள் எல்லாம்
தூங்கும்நள் ளிரவில், தங்கம்
ஏனின்னும் தூங்க வில்லை?
இருநுனி தொடவ ளைக்கக்
கூனல்வில் போலே மெய்யும்
கூனிக்கி டந்த வண்ணம்
ஆனதோ மணிபத் தென்றாள்
மணிப்பொறி அடிக்கக் கேட்டே.

### அவனிடம் நகர்ந்து செல்லுகிறாள்

"அவன் துயின் றானோ? என்னும்
ஐயத்தால் தான்தூங் காமல்
கவலைகொள் வாளை எங்கும்
காண்கிலோம் இவளை அல்லால்!
துவள்கின்ற மெய்யாள் தன்கைத்
துடுப்பினால் தரைது ழாவித்
தவழ்கின்றாள் தன்ம ணாளன்
படுக்கையைத் தாவித் தாவி.

## The old woman's coyness

"During a morning that is new and cold,
Bliss is it to be close and speak to you,"
Thus said the old man and got her reply curt,
"Nectar dear and near, enough is the pleasure
I had; see Nagaimutthu there and leave."

## She hasn't gone to sleep

At dead of night when the whole world is asleep,
Why is it Thangam hasn't yet gone to sleep?
Like a bent bow with the two ends touching
Her body lying crookedly on the floor,
Hearing the clock tick she asked, "Is it ten?"

## She goes to his bed

Fearing that he hasn't slept, she feels sleepless
We have never seen anywhere on earth
A woman who is so concerned save her;
Hands as oars help her move feeling the floor;
With a body limp, she limps to her man's bed.

### ஒரு தலையணையில் அருகருகு கிடந்தார்கள்

"வருகின்றா யோடி தங்கம்
வா" என்றோர் ஒலிகேட் கின்றாள்.
சருகொன்று காற்றால் வந்து
வீழ்ந்தது போலே தங்கப்
பெரியாளும் பெரியான் அண்டைத்
தலையணை மீது சாய்ந்தாள்.
அருகரு கிருவர்; மிக்க
அன்புண்டு; செயலே இல்லை!

### இருவர் களிப்பும் இயம்புமாறில்லை

ஒளிதரும் அறைவி ளக்கும்!
ஒளிக்கப்பால் இவர்கள் வாழ்வார்!
வெளியினை இருளும் கௌவும்
இருட்கப்பால் விளங்கு கின்றார்!
எளிதாகத் தென்றல் வீசும்
என்பயன்? அவர்அங் கில்லை
களித்தன மனம்இ ரண்டும்
கழறுமா றில்லை அஃதே.

### மனவுலகில் இருவர் பேச்சுக்கள்

இருமனம் அறிவு வானில்
முழங்கின இவ்வாறாக!
"பெரியோளே என்நி னைப்பால்
தூங்காது பிழைசெய் கின்றாய்"
"உரியானே, எனையே எண்ணி
உறங்காது வருந்து கின்றாய்"
"பெருந்தொல்லை தூக்க மின்மை"
"நற்றூக்கம் பெரிய இன்பம்!"

## A single pillow

"You are coming, Thangam dear, come near."
His voice she heard and like a dry leaf driv'n
By a wind the woman falls by the man;
With their heads on the same pillow they lie;
Abundant love within, deed outward none!

## Their joy is ineffable

The night lamp shines bright! They live beyond light!
Darkness drear engulfs the space infinite;
They glow beyond gloom; the two hearts rejoice;
There is breeze profuse; of what use is it?
They are not there! Their bliss is beyond words!

## The dialogue of the two souls

The two minds thundered thus to each other;
"You blunder, my lady dear, you won't sleep
Your concern for me keeping you awake."
"You don't sleep, man mine own, thinking of me "
"Sleeplessness is torture." "Sleep is rapture."

### என் நினைவைவிட்டுத் தூங்குக

அரைநாளின் தூக்க மேஇவ்
வாறின்பம் அளிக்கு மானால்
ஒருநாளின் முழுதும் தூங்கல்
ஒப்பிலா இன்பம் அன்றோ?
"அரிவையே என்றன் நெஞ்சை
அள்ளாதே தனியே தூங்கே.''
"உரியானே என்ம னத்தைப்
பறிக்காதே உறக்கங் கொள்வாய்."

### நெடிய தூக்கம் நீடிய இன்பம்

தூங்கினார் கனவும் அற்ற
தூக்கநல் லுலகில்! பின்னர்
ஏங்கினார் விழித்த தாலே!
இன்பமே விரும்ப லானார்!
தூங்குவோம்! நிலைத்த இன்பம்
துய்ப்போம்நாம் என்றார்! நன்றே
தூங்குகின் றார்நல் லின்பம்
தோய்கின்றார் வாழ்கின் றாரால்!

## Forget me and sleep

If half-a-day's sleep so much can delight
Should not the delight of a day's slumber
Be beyond compare? "Beloved lady,
Steal not my heart, sleep apart." "Husband dear,
Plunder not my mind, slumber you should."

## Bliss is that sleep that knows not breaking

They did sleep in a world devoid of dreams;
Frustrated they felt whenever they woke;
Their desire was to sleep; they decided
To seek delight eternal! sound they sleep
And so live for ever bathing in bliss!

*Translated by P. Marudhanayagam*

# 30. வேலனின் புலம்பல்

---

சன்னலிலே தென்றல்வந்து குளிர் விளைக்கும்;
தனியறையோ அமைதியினைச் செய்யும்; மிக்க
மென்மையுறு பஞ்சணையோ துயில்க என்று
விளம்பும்! அவன் உளம் அங்கே இருந்தால் தானே!
கன்னலிலே சாறெடுத்துத் தமிழ் குழைத்துக்
கனிஇதழாற் பரிமாறும் இனிய சொல்லாள்
அன்னத்தின் மேல்வைத்தான் நெஞ்சை வேலன்.
ஐயத்தை மேன்மேலும் உடையா னாகி.

விண்ணிடையே பன்னூறா யிரம்மீன் கட்கு
வெண்ணிலவு போல்அந்த மங்கை, அன்னம்
மண்ணிடையே பெண்ணினத்துக் கொருத்தி அன்றோ?
வாழ்விடையே பெருவாழ்வும் வாழ்ந்தாள்; என்றன்
கண்ணிடையே மலர்க்காடா னாளே! உள்ளக்
கருத்திடையே மணமானா ளேஎன் செய்வேன்!
நுண்ணிடையாள் எனக்குத்தா னோ அல்லாது
நோயிடையே சாகத்தான் பிறந்துள் ளேனோ!

## *30. Velan's Lament*

---

The breeze through the window brings coolness,
The lonely room in itself brings calmness,
The soft bed calls for a sleepy drowsiness,
But is his mind with him in such a place?
The essence from the sugar cane squeezed,
To be fully mingled with the language Tamil,
The sweetest language; she serves it with her sugar lips,
Velan gave all his heart to Annam,
His doubts increased more and more.

Like the full moon among the many thousands of stars
on the sky
That lass seems to be!
Isn't Annam the only woman to represent her race in the
whole world
Among so many lives, she had the great life;
In my eyes she blossomed like the garden of flowers!
In all my thoughts in mind, she was like the scent.
Now what to do?
Is the slim-waisted woman meant for me?
Or am I born to die with disease?

தேனைப்போல் மொழியுடையாள்; அன்ற லர்ந்த
செந்தா மரைமலர்போல் முகத்தாள்; கெண்டை
மீனைப்போல் விழியுடையாள் விட்ட திர்ந்த
மின்னைப்போல் நுண்ணிடையாள்! யாவுங் கொண்ட
வானைப்போல் உயர்வாழ்வு வாய்ந்தாள்; என்றன்
மகிழ்ச்சிக்கு மகிழ்ந்துநான் நைந்தால் நையும்
மானைப்போன் றாள்எனக்குத் தானோ அன்றி
வறிதேநான் சாகத்தான் பிறந்துள் ளேனோ!

பயிரடைந்த ஊட்டத்தி னூடு தோன்றும்
பச்சைப் பசுந்தோகை மயிலோ! நல்ல
உயிரடைந்த ஓவியமோ! அச்சில் வார்த்த
ஒளியடைந்த வடிவமோ! வைய மென்றும்
பெயரடைந்த பெருவாழ்வு வாய்ந்தாள்! என்மேல்
பெண்ணடைந்த மகிழ்ச்சிக்கோர் எல்லை யில்லை
உயர்வடை ந்தாள் எனக்குத்தா னோஅல் லாமே
ஊன்மெலிந்து சாகத்தான் பிறந்துள் ளேனோ!

திருந்தாதோ முல்லையெனச் சிரிப்பாள்! நன்றே
செழிக்காதோ வையமென அறங்கள் செய்வாள்!
அருந்தாதோ தும்பியென வாய்மலர் வாள்!
அடையாதோ அன்னம்எனும் நடையாள்! நாடு
வருந்தாதோ எனஆளும் வாழ்வு வாய்ந்தாள்!
வாய்க்காதோ என்அருள்தான் என்று நோக்கி
இருந்தாளே எனக்குத்தா னோஅல் லாமே
இடருற்றுச் சாகத்தான் பிறந்திட் டேனோ!

Her speech is like the honey,
Her face like the blossoming red lotus,
Her eyes like the long *Kendai* fish,
Her waist like the quick lightening,
Like the all possessing sky she too had a life,
She joyed with me and pained with me,
O my, deer-like woman!
Is she for me?
Or am I born to die of sheer despair?

Is it the green feathered peacock amidst the thick fertile corn?
Is it the painting newly gaining good breath?
Is it the sculpture acquiring new brightness?
She lived such a famous life in the whole world,
No bounds to her joys on me, for her greatness.
Is she for me?
Or am I born to lose flesh and die?

Her smile like the jasmine flower to make it perfect,
Her noble acts are to make the world bloom,
Her lips are spread to let the bees such honey,
Her tender walk so as to please the swan,
Her life so great to rule the nation without sorrow,
She waited and longed for my blessings.
Is she for me?
Or am I born to die in sorrow?

கொம்பென்றால் அவள்மெய்யைத், தார்வ ருந்தும்!
கொடிஎன்றால் அவளிடையை மின்வ ருந்தும்!
அம்பென்றால் அவள்விழியை மீன்வ ருந்தும்!
அலைஎன்றால் அவள் குழலை முகில்வ ருந்தும்!
செம்பென்றால் பொன்ஈயும் வாழ்வு வாய்ந்தாள்
செயல்என்றால் "உளம்வாய்மெய் உனக்கே ஆகும்
நம்பென்பாள்!" எனக்குத்தா னோஅல் லாது
நலிவுற்றுச் சாகத்தான் பிறந்திட்டேனோ!

பொன்னிழையால் பூப்போட்ட நீலப் பட்டுப்
புடைவையொடு நடையழகி கண்டேன் ஆங்கோர்
புன்னைமரம் மலர்குலுங்க நடந்த தென்ன
புதுமையென நான்வியந்தேன்! இவ்வை யத்தில்
மன்னுமிள வரசினும் வாழ்வும் வாய்ந்தாள்
மலர்விழியால் அருட்பிச்சை கேட்பாள் என்னை!
அன்னமவள் எனக்குத்தா னோஅல் லாமே
அகம்நொந்து சாகத்தான் பிறந்துள்ளேனோ!

ஆடப்போம் புனலிலெலாம் அவளே, காற்றில்
அசையப்போம் பொழிலிலெலாம் அவளே! கண்ணால்
தேடப்போம் பொருளிலெலாம் அவளே! நேரில்
தின்னப்போம் சுவையியெலாம் அவளே, வண்டு
பாடப்போம் மலரிலெலாம் அவளே! மேற்கில்
படுகதிரில் அவள்வடிவே காண்பேன் என்று
வாடக், கண் துயிலாமல் இருந்தான் வேலன்
மலர்ந்திட்ட காலையிலும் அவளைக் கண்டான்.

(பாண்டியன் பரிசு)

To name her body a branch, the garland will be pained!
To name her hip a creeper, the lightning will be pained!
To name her eye an arrow, the fish will be pained!
To name her hair a wave, the cloud will be pained!
When asked for a copper, in her life she could donate gold
For action she would say, 'Mind, mouth, body
All belong to you, believe me'
Such a lass is she for me!
Am I born to die by becoming weak?

I saw a walking beauty clad in a blue silk sari flowered with golden stripes
It seemed as the fully blossomed mast-wood tree walking there!
What a strange beauty? What a wonder!
She lived as the princes in this world
With her flower like eyes she begged for my grace,
Is such Annam for me?
Or am I born to die in my despair?

When dived to bathe, she lives in all the waters
When the wind blows, she is in all swinging beauties
When searched with eyes, she appears in all the things
When eatables brought before me, she is in all the tastes,
When bees buzz along, she is in all the flower
When the Sun sets in the west, she is in its rays
So did he pine for her and was sleepless
When the daylight blossomed in the dawn
He could see her in the morning light.

(Excerpt from "Pandian Parisu")

*Translated by N.Subramanian*

# 31. தமிழின் இனிமை

கனியிடை ஏறிய சுளையும்-முற்றல்
கழையிடை ஏறிய சாறும்.
பனிமலர் ஏறிய தேனும்-காய்ச்சுப்
பாகிடை ஏறிய சுவையும்,
நனிபசு பொழியும் பாலும்-தென்னை
நல்கிய குளிரிள நீரும்,
இனியன என்பேன் எனினும்-தமிழை
என்னுயிர் என்பேன் கண்டீர்!

பொழிலிடை வண்டின் ஒலியும், -ஓடைப்
புனலிடை வாய்க்கும் கலியும்,
குழலிடை வாய்க்கும் இசையும், -வீணை
கொட்டிடும் அமுதப் பண்ணும்,
குழவிகள் மழலைப் பேச்சும், -பெண்கள்
கொஞ்சிடும் இதழின் வாய்ப்பும்,
விழைகுவ னேனும், தமிழும்-நானும்
மெய்யாய் உடலுயிர் கண்டீர்'

## 31. Sweetness of Tamil

---

The succulent pulp inside the fruit,
The juice of full-grown sugar-cane,
The honey in the dew-moistened flower,
The sweetness of well-heated syrup,
The milk yielded by the wholesome cow,
The cool juice given by the tender coconut
Are pleasant, I say; but still
I maintain Tamil is my life - ye know!

The hum of bees in the garden,
The gurgle of flowing waters in a rivulet,
The music residing in the flute,
The nectarine notes that the Veena poursforth,
The babbling speech of little babes,
The beauty of women's lips lisping love,
Though these I love, still, in truth,
Tamil and I are body and soul - ye know!

பயிலுறும் அண்ணன் தம்பி, -அக்கம்
பக்கத் துறவின் முறையார்,
தயைமிக உடையாள் அன்னை, -என்னைச்
சந்ததம் மறவாத் தந்தை,
குயில்போற் பேசிடும் மனையாள், -அன்பைக்
கொட்டி வளர்க்கும் பிள்ளை,
அயலவ ராகும் வண்ணம், -தமிழ் என்
அறிவினில் உறைதல் கண்டீர்!

நீலச் சுடர்மணி வானம்-ஆங்கே
நிறையக் குளிர்வெண் ணிலவாம்,
காலைப் பரிதியின் உதயம், -ஆங்கே
கடல்மேல் எல்லாம் ஒளியாம்,
மாலைச் சுடரினில் மூழ்கும், -நல்ல
மலைகளின் இன்பக் காட்சி,
மேலென எழுதும் கவிஞர், -தமிழின்
விந்தையை எழுதத் தரமோ?

செந்நெல் மாற்றிய சோறும்-பசுநெய்
தேக்கிய கறியின் வகையும்,
தன்னிகர் தானியம் முதிரை, -கட்டித்
தயிரொடு மிளகின் சாறும்,
நன் மதுரஞ்செய் கிழங்கு-காணில்
நாவிலினித்திடும் அப்பம்,
உன்னை வளர்ப்பன தமிழா!-உயிரை
உணர்வை வளர்ப்பது தமிழே!

Elder and younger brothers familiar grown,
Ties of kinship in the neighbourhood,
Mother of abundant affection,
Father who forgets me not for a moment,
Wife who speaks like the cuckoo,
Children that I bring up showering love
As if to render these as strangers,
Tamil dwells close to my mind - ye know!

The blue, bright-gemmed sky
And there, the white moon, full cool,
The rising of the morning sun -
And there, the light all over the seas,
The sweet spectacle of fine hills
Sinking in the evening splendour,
Poets who scribble high of these -
Are they fit to indite the magic of Tamil?

Rice from reddish brown paddy grain
And variegated dishes savouring cow's ghee,
Pulses paralleled by their own taste
And thick slices of curd with pepper water
And roots of wholesome sweetness
And cakes watering the tongue but when seen -
These nourish you Tamilian - but still
It is Tamil alone that nurtures your life and heart.

*Translated by S.Raman*

# 32. இன்பத் தமிழ்

தமிழுக்கும் அமுதென்று பேர்!-அந்தத்
தமிழ் இன்பத் தமிழ்எங்கள் உயிருக்கு நேர்!
தமிழுக்கு நிலவென்றுபேர்!-இன்பத்
தமிழ் எங்கள் சமுகத்தின் விளைவுக்கு நீர்!
தமிழுக்கு மண மென்றுபேர்-இன்பத்
தமிழ் எங்கள் வாழ்வுக்கு நிருமித்த ஊர்!
தமிழுக்கு மதுவென்று பேர்!-இன்பத்
தமிழ் எங்கள் உரிமைச்செம் பயிருக்கு வேர்!

தமிழ் எங்கள் இளமைக்குப்பால்!-இன்பத்
தமிழ் நல்ல புகழ்மிக்க புலவர்க்குவேல்!
தமிழ் எங்கள் உயர்வுக்கு வான்!-இன்பத்
தமிழ் எங்கள் அசதிக்குச் சுடர்தந்த தேன்!
தமிழ் எங்கள் அறிவுக்குத் தோள்!-இன்பத்
தமிழ் எங்கள் கவிதைக்கு வயிரத்தின் வாள்!
தமிழ் எங்கள் பிறவிக்குத்தாய்!-இன்பத்
தமிழ் எங்கள் வலமிக்க உளமுற்ற தீ!

## 32. Sweet Tamil

---

Tamil too is named nectar! - That
Tamil, sweet Tamil is as dear as ourlife!
Tamil is the moon! - Sweet
Tamil is our society's sap!
Tamil is our fragrance! - Sweet
Tamil is our life's ordained destinations!
Tamil is our liquor! - Sweet
Tamil is the root of life's rights!

Tamil is our youth's milk! - Sweet
Tamil is the spear of famed poets!
Tamil is our aspirations sky! - Sweet
Tamil is our quickening honey
Tamil is our learning's support! - Sweet
Tamil is our lyric's adamantine steel!
Tamil is our Being's Mother! - Sweet
Tamil is our enriching and inspiring fire!

*Translated by D. Albert*

# 33. தமிழ்ப் பேறு

ஏடெடுத்தேன் கவி ஒன்று வரைந்திட
'என்னை எழு' தென்று சொன்ன துவான்!
ஓடையுந் தாமரைப் பூக்களும் தங்களின்
ஓவியந் தீட்டுக, என்றுரைக்கும்!
காடும் கழனியும் கார்முகிலும் வந்து
கண்ணைக் கவர்ந்திட எத்தனிக்கும்!
ஆடுமயில் நிகர் பெண்களெல்லாம் உயிர்
அன்பினைச் சித்திரம் செய்க, என்றார்!

சோலைக் குளிர்தரு தென்றல் வரும், பசுந்
தோகை மயில் வரும், அன்னம் வரும்,
மாலைப்பொழுதினில் மேற்றிசையில் விழும்
மாணிக்கப் பரிதி காட்சிதரும்
வேலைச் சுமந்திடும் வீரரின் தோள் 'உயர்
வெற்பென்று சொல்லி வரைக' எனும்
கோலங்கள் யாவும் மலைமலையாய் வந்து
கூவின என்னை!-இவற்றிடையே,

இன்னலிலே, தமிழ் நாட்டினிலேயுள்ள
என் தமிழ் மக்கள் துயின்றிருந்தார்.
அன்னதோர் காட்சி இரக்கமுண் டாக்கியென்
ஆவியில் வந்து கலந்ததுவே!
'இன்பத் தமிழ்க் கல்வி யாவரும் கற்றவர்
என்றுரைக்கும் நிலை எய்திவிட்டால்-
துன்பங்கள் நீங்கும், சுகம் வரும் நெஞ்சினில்
தூய்மையுண்டாகிடும், வீரம் வரும்'.

# *33. Tamil: A Unique Heritage*

---

I took a leaf to write a poem
"Write about me" said the sky!
Rivulets and Lotus flowers too
said, "Draw our picture",
The woods, the fields and dark clouds came
And seek to draw my attention!
Women, much like the dancing peacock,
Said, make a picture of dear love!

The cool arbour breeze comes, green
Feathered peacock and the swan appear
In the evening falling into the west
The diamond sun comes on the scene
High shoulders of the heroes bearing the spear
Saying, "Sketch us, we are like hills"
All such scenes came in hectic profusion
Calling me out - amidst these.

Those in Tamil Nadu, my Tamil people
Are wallowing in unhappiness.
Such a sight kindles great pity
And it becomes a party of my soul!
If we attain the stage where
We can say all had sweet Tamil education
Misery vanishes, much comfort reaches the heart,
Purification dawns and heroism comes.

*Translated by D.Albert*

# 34. தமிழ்க் கனவு

தமிழ்நாடெங்கும் தடபுடல்! அமளி!!
பணமே எங்கணும் பறக்குது விரைவில்
குவியுது பணங்கள்! மலைபோற் குவியுது!!
தமிழின் தொண்டர் தடுக்கினும் நில்லார்,
ஓடினார், ஓடினார், ஓடினார் நடந்தே!
ஆயிரம் ஆயிரத் தைந்நூறு பெண்கள்
ஒளிகொள் விழியில் உறுதி காட்டி
இறக்கை கட்டிப் பறக்கின்றார்கள்!
ஐயோ, எத்தனை அதிர்ச்சி, உத்ஸாகம்!
சமுத்திரம் போல அமைந்த மைதானம்!
அங்கே கூடினார் அத்தனை பேரும்!
குவித்தனர் அங்கொரு கோடிரூபாய்!
வீரத் தமிழன் வெறிகொண் டெழுந்தான்!
உரக்கக் கேட்டான், 'உயிரோ நம்தமிழ்?'
அகிலம் கிழிய 'ஆம்! ஆம்!' என்றனர்!!
'ஒற்றுமை' என்றான்; 'நற்றேன்' என்றனர்!
உள்ளன்பு ஊற்றி ஊற்றி ஊற்றித்
தமிழை வளர்க்கும் சங்கம்ஒன்று
சிங்கப் புலவரைச் சேர்த்தமைத் தார்கள்!
உணர்ச்சியை, எழுச்சியை, ஊக்கத்தையெலாம்
கரைத்துக் குடித்துக் கனிந்த கவிஞர்கள்
சுடர்க்கவி தொடங்கினர்! பறந்தது தொழும்பு!
கற்கண்டு மொழியில் கற்கண்டுக் கவிதைகள்,
வாழ்க்கையை வானில், உயர்த்தும் நூற்கள்;

## *34. A Tamil Dream*

---

Bedlam and brawl all over Tamilnadu!!
Money sallies everywhere fast
Money is heaped heaped like a mountain!!
Devotees of Tamil won't stay though stopped
They ran and ran and ran walking
A thousand, a thousand five hundred women
Marking firmness in their shining eyes
Fly with wings to their sides!
Oh what disturbance, what enthusiasm!
Grounds made out like the sea!
There gathered all and the many!
Heaped there a crore of rupees!
The heroic Tamil rose in great fury!
Asked aloud: 'Is not Tamil our life?'
Tearing the universe yes! yes! they said!!
What comparison 'Sweet honey' they said.
Pouring, pouring and pouring heart's love
Founded an academy for the progress of Tamil
Assembling all the leonine poets!
Poets matured drinking to lees
Feelings and emotions and fervour, began
Their auroral poetry! Slavery disappeared!
In sweet language, sweet poems

தொழில்நூல், அழகாய்த் தொகுத்தனர் விரைவில்!
காற்றிலெல்லாம் கலந்தது கீதம்!
சங்கீத மெலாம் தகத்தகாயத் தமிழ்!
காதலெலாம் தமிழ் கனிந்த சாறு!
கண்ணெதிர் தமிழக் கட்டுடல் வீரர்கள்!
காதல் ததும்பும் கண்ணாளன்றனைக்
கோதை ஒருத்தி கொச்சைத் தமிழால்
புகழ்ந்தாளென்று, பொறாமல் சோர்ந்து
வீழ்ந்தான்! உடனே திடுக்கென விழித்தேன்.
அந்தோ! அந்தோ! பழைய
நைந்த தமிழரொடு நானிருந்தேனே!

Works that lift life to the skies
And technical works were compiled quickly!
Melody came in the air!
All music is the sparkling beats of Tamil!
All love is the juice of ripening Tamil!
Close to sight the Tamil heroes of perfect form!
Because a woman hailed fondly
Her dear lover in poor Tamil,
He flinched, Crest-fallen
I woke up suddenly. Alas! Alas!
I was indeed with the old dispairing Tamils!

*Translated by D. Albert*

# 35. தமிழ்க் காதல்

கமலம் அடுக்கிய செவ்விதழால்-மலர்க்
காட்டினில் வண்டின் இசைவளத்தால்
கமழ்தரு தென்றல் சிலிர்சிலிர்ப்பால்-கருங்
கண்மலரால் முல்லை வெண்ணகைப்பால்
அமையும் அன்னங்களின் மென்னடையால்-மயில்
ஆட்டத்தினால் தளிர் ஊட்டத்தினால்
சமையும் ஒருத்தி-அப் பூஞ்சோலை-எனைத்
தன்வசம் ஆக்கிவிட்டாள் ஒருநாள்.

சோலை அணங்கொடு திண்ணையிலே-நான்
தோளினை ஊன்றி இருக்கையிலே
சேலை நிகர்த்த விழியுடையாள்-என்றன்
செந்தமிழ்ப் பத்தினி வந்துவிட்டாள்!
சோலையெலாம் ஒளி வானமெலாம்-நல்ல
தோகையர் கூட்ட மெலாம் அளிக்கும்
கோல இன்பத்தை யென் உள்ளத்திலே-வந்து
கொட்டி விட்டாள் எனைத் தொட்டிழுத்தாள்!

## 35. *Tamil Love*

---

By her ruby lips of lotus, lay on layer,
By the rich melody of the bees of the woods,
By the excitement of the fragrant breeze,
By the sable eyes, flowerlike, and smiles radient,
By the settling swan's soft gait,
By the inspiring dance of the peacock.
The maturing maiden, the lady of the garden,
She made me her own one day.

With the amourous maiden in the porch
I was leaning on her shoulder.
The maiden with salmon-like eyes
My chaste glorious Tamil maid came!
All the good maiden company's joy
All the arbour's and all the bright sky's
She came pouring into my heart
And drew me then by her touch.

*Translated by D. Albert*

# 36. எந்நாளோ?

என்னருந் தமிழ்நாட்டின் கண்
எல்லோரும் கல்விகற்றுப
பன்னருங் கலைஞானத்தால்,
பராக்கிரமத்தால், அன்பால்,
உன்னத இமமலை போல்
ஓங்கிடும் கீர்த்தி யெய்தி
இன்புற்றார் என்று மற்றோர்
இயம்பக் கேட்டிடல் எந்நாளோ?

கைத்திறச் சித்திரங்கள்,
கணிதங்கள் வான நூற்கள்
மெய்த்திற நூற்கள், சிற்பம்,
விஞ்ஞானம், காவியங்கள்
வைத்துள தமிழர் நூற்கள்
வையத்தின் புதுமை என்னப்
புத்தகசாலை எங்கும்
புதுக்குநாள் எந்தநாளோ?

## *36. Oh! When!*

---

When shall we hear others
Say, in my dear Tamilnadu
All happy for
All had their schooling, with
Knowledge in many arts
With bravery and with kindness
Achieve high acclaims
Like the lofty Himalayan mountains?

When shall we hear Tamil works
That have dexterous drawings,
Studies in Mathematics, Astronomy,
Thesis on Philosophy, Sculpture,
Treatise in Science and epics too!
Being wondrous creations
Enter libraries everywhere?

தாயெழிற் றமிழை, என்றன்
    தமிழரின் கவிதை தன்னை
ஆயிரம் மொழியிற் காண
    இப்புவி அவாவிற் றென்ற
தோயுறும் மதுவின் ஆறு
    தொடர்ந்தென்றன் செவியில் வந்து
பாயுநாள் எந்தநாளோ?
    ஆரிதைப் பகர்வார் இங்கே?

பார்த்தொழில் அனைத்தும் கொண்ட
    பயன் தரும் ஆலைக்கூட்டம்
ஆர்த்திடக் கேட்பதென்றோ?
    அணிபெறத் தமிழர்கூட்டம்
போர்த்தொழில் பயில்வதெண்ணிப்
    புவியெலாம் நடுங்கிற்றென்ற
வார்த்தையைக் கேட்டு நெஞ்சு
    மகிழ்ந்து கூத்தாடல் என்றோ?

வெள்ளம்போல் தமிழர்கூட்டம்
    வீரங்கொள் கூட்டம்; அன்னார்
உள்ளத்தால் ஒருவரே மற்
    றுடலினால் பலராய்க் காண்பார்;
கள்ளத்தால் நெருங்கொணாதே
    எனவையம் கலங்கக்கண்டு
துள்ளும்நாள் எந்நாள்? உள்ளம்
    சொக்கும்நாள் எந்தநாளோ?

When shall flow
Incessantly into my ear
The river of unabated honey
That this world had wished to see
My lovely mother Tamil
And Tamil Poetry
In a thousand languages?
Who shall tell me this here?

What day shall I hear
The clangour of active factories
That do all the world's jobs?
When shall my bosom dance
In joy listening to the words
That the whole world termbles
Seeing the practice of the arts of war
By the arrays of crowds of Tamils?

Crowds of Tamils like floods
Crowds of sterling heroes
Though several forms
Their heart beats as one.
Malice cannot approach them.
When comes the day
When I watch in ecstasy
At the worlds' bewilderment
On watching this scene?

தறுக்கினாற் பிறதேசத்தார்
தமிழன்பால்-என்-நாட்டான்பால்
வெறுப்புறும் குற்றஞ்செய்தா
ராதலால் விரைந்தன்னாரை
நொறுக்கினார் முதுகெலும்பைத்
தமிழர்கள் என்ற சேதி
குறித்தசொல்கேட் டின்பத்திற்
குதிக்கும்நாள் எந்த நாளோ?

நாட்டும்சீர்த் தமிழன் இந்த
நானில மாயக் கண்டு
காட்டிய வழியிற் சென்று
கதிபெற வேண்டும் என்றே
ஆட்டும்சுட்டுவிரல் கண்டே
ஆடிற்று வையம் என்று
கேட்டுநான் இன்ப ஊற்றுக்
கேணியிற் குளிப்ப தெந்நாள்?

விண்ணிடை இரதம் ஊர்ந்து
மேதினி கலக்கு தற்கும்
பண்ணிடைத் தமிழைச் சேர்த்துப்
பாரினை மயக்குதற்கும்
மண்ணிடை வாளை யேந்திப்
பகைப்புலம் மாய்ப்பதற்கும்
எண்ணிலாத் தமிழர் உள்ளார்
எனும்நிலை காண்பதென்றோ?

கண்களும் ஒளியும் போலக்
கவின்மலர் வாசம் போலப்
பெண்களும் ஆண்கள் தாமும்
பெருந்தமிழ் நாடு தன்னில்,
தண்கடல் நிகர்த்த அன்பால்
சமானத்தர் ஆனார் என்ற
பண்வந்து காதிற் பாயப்
பருகுநாள் எந்த நாளோ?

Impelled by pride
Foreigners came to the Tamil land
And assaulted them.
Swift came retribution
From Tamils who splintered
The spines of the aggressors!
When comes the day
Of my dance to such news!

When shall I bathe
In the spring of joy
That the world follows the finger
Of the Tamilian
Who shows the way
For the world's resurgence
From its present decay?

When shall I know
There are countless Tamils
Who can stir the worlds
By piloting in the sky;
Mesmerize the world
Linking Tamil to music;
And to destroy enemy hordes
Bearing killer-swords.

When shall flow in my ears
The music sweet
That our men and women
Have become equal partners
Like the eye and its gleam
Like the scent and flower
United in Oceanic love.

*Translated by D.Albert*

# 37. சங்க நாதம்

எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு!
எங்கள் பகைவர் எங்கோ மறைந்தார்,
இங்குள்ள தமிழர்கள் ஒன்றாதல் கண்டே!

திங்களொடும் செழும்பரிதி தன்னோடும்
விண்ணோடும் உடுக்க ளோடும்
மங்குல் கடல் இவற்றோடும் பிறந்ததமிழுடன்
பிறந்தோம் நாங்கள், ஆண்மைச்
சிங்கத்தின் கூட்டமென்றும் சிறியோர்க்கு
ஞாபகம்செய், முழங்கு சங்கே!

சிங்களஞ்சேர் தென்னாட்டு மக்கள்
தீராதி தீரரென் றூதூது சங்கே!
பொங்கு தமிழர்க் கின்னல் விளைத்தால்
சங்காரம் நிசமெனச் சங்கே முழங்கு!

## *37. The Clarion Call*

---

Trumpet, Oh Conch,
That our life and our wealth
Is glorious Tamil.
Our enemies have vanished out of sight
On seeing the Tamils here as one unite.

Trumpet, Oh Conch
And remind the little folk
That we are born with Tamils
Whose birth was with the moon,
With the ruddy sun itself,
With the sky, the stars
And the murky seas,
A manly leonine lot they are!

Trumpet, Oh Conch,
That the people of the South
And Sri Lanka
Are the bravest of the brave.
Trumpet, Oh Conch,
That death is certain
If any harm were done
To the Tamils that rise.

வெங்கொடுமைச் சாக்காட்டில் விளையாடும்
 தோளெங்கள் வெற்றித் தோள்கள்!
கங்கையைப் போல் காவிரிபோல் கருத்துக்கள்
 ஊறுமுள்ளம் எங்கள் உள்ளம்!
வெங்குருதி தனிற்கமழ்ந்து வீரஞ்செய் கின்ற
 தமிழ் எங்கள் மூச்சாம்! (எங்)

Ours are the victorious shoulders -
shoulders that play in the field of gruesome death.
Ours are the hearts
Where thoughts do spout as the Ganges and the
Cauvery.

Our breath of existence is Tamil
Which, in the fragrance,
Fraught with hot gore
Has wrought heroism.

*Translated by S. Raman*

# 38. தமிழ் வளர்ச்சி

எளிய நடையில் தமிழ்நூல் எழுதிடவும் வேண்டும்;
இலக்கண நூல் புதிதாக இயற்றுதலும் வேண்டும்.
வெளியுலகில் சிந்தனையில் புதிது புதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெல்லாங் கண்டு
தெளிவுறுத்தும் படங்களோடு சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும் வேண்டும்.
எளிமையினால் ஒரு தமிழன் படிப்பில்லை யென்றால்
இங்குள்ள எல்லோரும் நாணிடவும் வேண்டும்!

உலகியலின் அடங்கலுக்கும் துறைதோறும் நூற்கள்
ஒருத்தர் தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்
சலசலெென எவ்விடத்தும் பாய்ச்சிவிட வேண்டும்!
தமிழ்மொழியை மதங்களிலே சாய்க்காமை வேண்டும்!
இலவச நூற் கழகங்கள் எவ்விடத்தும் வேண்டும்!
எங்கள் தமிழ் உயர்வென்று நாம் சொல்லிச் சொல்லித்
தலைமுறைகள் பலகழித்தோம்; குறைகளைந்தோமில்லை.
தகத்தகாயத் தமிழைத் தாபிப்போம் வாரீர்!

## *38. Tamil Development*

---

Works in Tamil should be written in simple style.
Works of grammar too should be newly made.
By making books on whatever had cropped
Newly in the minds , in the world at large
Naming them, illustrating them in pictures,
We should make the classical Tamil rich Tamil.
If a Tamil has no schooling because he is poor
All of us here should feel ashamed too.

For all the disciplines of World in every department
Without anybody's help, in easily understood Tamil,
Books should flow spreading everywhere!
The Tamil language should not be made to lean on religion.
Free reading halls should be found in all places.
Many generations we have spent,
Repeating our Tamil is great.
We have not removed our faults.
Come! let us establish our Scintillating Tamil.

*Translated by D. Albert*

## 39. தமிழ்த்தாய்

வாழ்வினில் செம்மையைச் செய்பவள் நீயே
மாண்புகள் நீயே என்தமிழ்த் தாயே
வீழ்வாரை வீழாது காப்பவள் நீயே
வீரனின் வீரமும், வெற்றியும் நீயே

தாழ்ந்திடு நிலையினில் உனைவிடுப் பேனோ
தமிழன்எந் நாளும் தலைகுனி வேனோ
சூழ்ந்தின்பம் நல்கிடும் பைந்தமிழ் அன்னாய்
தோன்றுடல் நீஉயிர் நான்மறப்பேனோ

செந்தமிழே! உயிரே! நறுந் தேனே
செயலினை மூச்சினை உனக்களித் தேனே!
நைந்தா யெனில் நைந்து போகுமென் வாழ்வு
நன்னிலை உனக்கெனில் எனக்குந் தானே

முந்திய நாளினில் அறிவும்இ லாது
மொய்த்தநன் மனிதராம் புதுப்புனல் மீது
செந்தாமரைக் காடு பூத்தது போலே
செழித்தஎன் தமிழே ஒளியே வாழி

## 39. *Mother Tamil*

---

Mother Tamil,
You are the one
Who will exalt our lives.
All glory is yours.
You save us from downfall;
Valour and victory come from you.

I will never allow you
To languish in serfdom.
I am a Tamil, my head
Will never be bent in shame.
O Mother, our source of joy,
You are the life in my body.
How can I forget you?

My life, and my life's fragrance,
I dedicate to you
My body and my soul.
If you come to harm,
My life would go to pieces;
And if you are raised to eminence,
I'd become exalted.

Like a host of lotuses you bloomed
On the lake of humanity
Which lay in utter ignorance
In ages past.
You illumined them, O Tamil,
All hail to you.

*Translated by M.L. Thangappa*

## 40. வரிப்புலியே, தமிழ் காக்க எழுந்திரு!

ஒண்டமிழ்த்தாய் சிலம்படியின்
முன்னேற்றம் ஒவ்வொன்றும்
உன்முன் னேற்றம்!
கண்டறிவாய்! எழுந்திரு நீ!
இளந்தமிழா, கண்விழிப்பாய்!
இறந்தொ ழிந்த
பண்டைநலம் புதுப்புலமை
பழம்பெருமை அனைத்தையும் நீ
படைப்பாய்! இந்நாள்
தொண்டுசெய்வாய்! தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
துடித்தெ ழுந்தே!

உயர் தமிழ்த்தாய் இந்நிலத்தில்
அடைகின்ற வெற்றியெலாம்
உன்றன் வெற்றி!
அயராதே! எழுந்திரு நீ!
இளந்தமிழா அறஞ்செய்வாய்!
நாமடைந்த
துயரத்தைப் பழிதன்னை
வாழ்வினிலோர் தாழ்மையினைத்
துடைப்பாய் இந்நாள்
செயல்செய்வாய் தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும
சீறி வந்தே

## *40. Brindled Tiger, Arise and Save Tamil!*

---

Every inch of progress of anklet feet
of graceful mother Tamil
        is your progress !
Understand, learn thus ! and arise !
Oh young Tamil, open your eyes !
        Create anew
The yester year glory all dead and gone
new talents and ancient pride !
        This day
You shall render service to Tamil
in every sort of department
        awakening in a spur !

All the victories the great Mother
Tamil wins on this earth are
        Your victories
Do not be down cast ! Arise you !
Oh young Tamil. Do the righteous !
        Erase to day
What we had come to suffer from
the sorrows indictment and, the plight
        plaguing our life !
Be doing be active for Tamil
in discipline after discipline
        come raging.

வாழிய நீ! தமிழ்த்தாய்க்கு
வரும்பெருமை உன்பெருமை!
வயிற்றுக் கூற்றக்
கூழின்றி வாடுகின்றார்;
எழுந்திருநீ! இளந்தமிழா,
குறைத விர்க்க
ஆழிநிகர் படைசேர்ப்பாய்!
பொருள்சேர்ப்பாய்! இன்பத்தை
ஆக்கு விப்பாய்!
ஊழியஞ்செய் தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
உணர்ச்சி கொண்டே.

உணர்ந்திடுக தமிழ்த்தாய்க்கு
வருந்தீமை உனக்குவரும்
தீமை அன்றோ!
பிணிநீக்க எழுந்திருநீ
இளந்தமிழா, வரிப்புலியே,
பிற்றை நாளுக்
கணிசெய்யும் இலக்கியம்செய்!
அறத்தைச் செய்! விடுதலைகொள்
அழகு நாட்டில்!
பணிசெய்வாய்! தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
பழ நாட்டானே.

May you live ! The glories that come
to Mother Tamil are your glories.
To fill the stomach
They wither without the gruel.
Arise ! you, young Tamil
to redress grievance.
Gather armies like the deep sea !
Let material comforts and happiness
be collected !
Render service unto Tamil in
every possible department
with feelings.

Understand dangers that come
to Mother Tamil; aren't they your
dangers too !
Rise, ye, remove the disease
Oh! young Tamil brindled tiger !
Create literature
Ornamental to later days !
Perform the righteous! Have freedom
in this beautiful land !
You will do service to Tamil
in every possible department
You of an old land!

எதுசெய்ய நாட்டுக்கே
எனத்துடித்த சிங்கமே!
இன்றே, இன்னே
புதுநாளை உண்டாக்கித்
தமிழ்காப்பாய் புத்துணர்வைக்
கொணர்வாய் இங்கே
அதிர்ந்தெழுக! தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
அழகு காப்பாய்
இதுதான் நீ செயத்தக்க
எப்பணிக்கும் முதற்பணியாம்
எழுக நன்றே.

Oh tiger! anxiously asking
What shall I do for the country
        to day this day,
Creating the new era
Save Tamil, bring here
        a new spirit.
Arise agitated ! To Tamil
in departments after departments
        add beauty.
This is the first service of all
services you can do
        Well, arise.

*Translated by D.Albert*

# 41. எல்லோரும் வாருங்கள்

இந்திக்குத் தமிழ்நாட்டில் ஆதிக்கமாம்-நீங்கள்
எல்லோரும் வாருங்கள் நாட்டினிரே!
செந்தமிழ்க்குத் தீமை வந்தபின்னும்-இந்தத்
தேகமிருந்தொரு லாபமுண்டோ? (இந்)

விந்தைத் தமிழ்மொழி எங்கள்மொழி-அது
வீரத் தமிழ்மக்கள் ஆவிஎன்போம்,
இந்திக்குச் சலுகை தந்திடுவார்-அந்த
ஈனரைக் கான்றேயு மிழ்ந்திடுவோம்! (இந்)

இப்புவி தோன்றிய நாள்முதலாய்-எங்கள்
இன்பத் தமிழ்மொழி உண்டுகண்டீர்
தப்பிழைத் தாரிங்கு வாழ்ந்ததில்லை-இந்தத்
தான்தோன்றி கட்கென்ன ஆணவமோ? (இந்)

எப்பக்கம் வந்துபு குந்துவிடும்-இந்தி
எத்தனை பட்டாளம் கூட்டிவரும்?
அற்பமென் போமந்த இந்திதனை-அதன்
ஆதிக்கந் தன்னைப்பு தைத்திடுவோம்! (இந்)

எங்கள் உடல்பொருள் ஆவியெல்லாம்-எங்கள்
இன்பத் தமிழ்மொழிக் கேதருவோம்
மங்கை ஒருத்தி தரும்சுகமும்-எங்கள்
மாத்தமிழ்க் கீடில்லை என்றுரைப்போம்! (இந்)

## *41. Let's All Unite*

---

Hindi besieges Tamil Nadu - friends
Let's muster our strength!
What boots it to possess a robust body,
If we can't defend our dear, dear Tamil.

Marvellous language is our Tamil;
And Tamil is the soul of the mighty Tamils.
Let's spit on those traitors
who harabour Hindi.

Hark! Our ambrosia - Tamil has persisted
Right from the birth of this earth
Whither came your arrogance, culprits?
We shall never let you live here.

Beware! How will Hindi infiltrate?
How strong is its army - let's encounter!
Let's fight its illegitimate emergence
And bury its dominance.

Let's dedicate our heart, soul and all
To the hilt, to our mellifluous Tamil.
Even the pleasure of a bewitching woman
Is nothing to the supreme joy, that is Tamil.

சிங்கமென் றேஇளங் காளைகளே-மிகத்
தீவிரம் கொள்ளுவீர் நாட்டினிலே!
பங்கம் விளைந்திடில் தாய்மொழிக்கே-உடற்
பச்சைரத் தம்பரி மாறிடுவோம் (இந்)

தூங்குதல் போன்றது சாக்காடு-பின்னர்த்
தூங்கி விழிப்பது நம்பிறப்புத்
தீங்குள்ள இந்தியை நாம்எதிர்போம்-உயிர்
தித்திப்பை எண்ணிடப் போவதில்லை! (இந்)

மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை-நமை
மாட்டநி னைக்குஞ்சி றைச்சாலை!
ஏங்கவி டோம்தமிழ்த் தாய்தனையே-உயிர்
இவ்வுட லைவிட்டு நீங்கும்வரை! (இந்)

The valiant youth of the nation!
Brace up to meet the challenge.
Let's shed our buoyant blood
In the face of any insult to our Mother-tongue.

Life is short -
Sleeping is almost death: awakening is birth -
Let's combat the evil Hindi
Even at the cost of our precious life.

Even a prison of painful bars
Would become a comely garden of cooing cuckoos
When we think of saving the honour of Mother Tamil.
We won't let her languish till we breathe our last.

*Translated by V.Ayothi*

## 42. தமிழன்

தாயின்மேல் ஆணை! தந்தைமேல் ஆணை!
தமிழகமேல் ஆணை
தூய என் தமிழ்மேல் ஆணையிட்டே நான்
தோழரே உரைக்கிறேன்:

நாயினும் கீழாய்ச் செந்தமிழ் நாட்டார்
நலிவதை நான் கண்டும்,
ஓயுதல் இன்றி அவர் நலம் எண்ணி
உழைத்திட நான் தவறேன்

தமிழரின் மேன்மையை இகழ்ந்தவ னைஎன்
தாய் தடுத் தாலும் விடேன்
எமை நத்துவா யென எதிரிகள் கோடி
இட்டழைத்தாலும் தொடேன்

"தமக்கொரு தீமை" என்று நற்றமிழர்
எனை அழைத்திடில் தாவி
இமைப்பினில் ஓடித் தரக்கடவேன் நான்
இனிதாம் என் ஆவி!

மானமொன்றே நல்வாழ்வெனக்கொண்டு
வாழ்ந்த என் மறவேந்தர்
பூனைகள் அல்லர்; அவர் வழி வந்தோர்
புலிநிகர் தமிழ்மாந்தர்!

ஆன என்தமிழர் ஆட்சியை நிறுவ
அல்லல்கள் வரின் ஏற்பேன்!
ஊனுடல் கேட்பினும் செந்தமிழ் நாட்டுக்
குவப்புடன் நான் சேர்ப்பேன்

## *42. The Tamil*

---

Swearing in the name of my mother and father,
Vowing on my Tamil Land,
And taking this pledge on my pure Taṃil
I declare this my comrades:

I will not fail to persevere
Spurning rest and relaxation
For the welfare of the people of Tamil Land
Who are suffering worse than dogs.

I won't spare any that mocks the glory of Tamils
Even if my mother forbids me;
Enemies of Tamil may flatter me
With billion offers; but I'll touch them not.

Caught in the mire of evil harms
When my Tamil Kinsfolk call on me,
Within winking-time I'll rush to redeem them
Even by laying down my precious life.

Our powerful and mighty kings of Yore
Who held honour as jewel of life
Were not just cats; and sprung from their loins
We, Tamils are true tiger-like men.

I'll bear on my shoulders all sufferings
To establish the rule of my Tamil men
And I'll joyously offer my flesh and blood
For my dear and glorious Tamil land.

*Translated by M. Balasubramanian*

## 43. எங்கள் தமிழ்

---

இனிமைத் தமிழ் மொழி எமது-எமக்
கின்பந் தரும்படி வாய்த்தநல் அமுது!
கனியைப் பிழிந்திட்ட சாறு-எங்கள்
கதியில் உயர்ந்திடயாம்பெற்ற பேறு!
தனிமைச் சுவையுள்ள சொல்லை-எங்கள்
தமிழினும் வேறெங்கும் யாங்கண்டதில்லை!
நனியுண்டு நனியுண்டு காதல்-தமிழ்
நாட்டினர் யாவர்க்குமே தமிழ் மீதில் (இனிமைத்)

தமிழ் எங்கள் உயிர்என்ப தாலே-வெல்லுந்
தரமுண்டு தமிழருக் கிப்புவி மேலே
தமிழ் என்னில் எம்முயிர்ப் பொருளாம்-இன்பத்
தமிழ் குன்றுமேல் தமிழ்நாடெங்கும் இருளாம்
தமிழுண்டு தமிழ்மக்க ளுண்டு-இன்பத்
தமிழுக்கு நாளும் செய்வோம் நல்ல தொண்டு
தமிழ் என்று தோள்தட்டி ஆடு!நல்ல
தமிழ் வெல்க வெல்க என்றே தினம்பாடு! (இனிமைத்)

## *43. It is Our Tamil*

---

Sweet Tamil, You are ours!
Happiness, thy name is Tamil! It's ambrosia!
The very juice of sweet fruits crushed are you
You are the blessed gift that raises us!
Nowhere have we found that unparalelled sweetness
which is Tamil
You have in you fullness and completeness to the
fullest brim
This is your greatness which makes you everyone's
beloved

Sweet Tamil Language! You are our very life and blood,
Perhaps you have an all-conquering force on this earth;
Tamil Language! You are our very Life!
Darkness will enshroud the land of the Tamils,
If Tamil pales out;
Tamil is very much alive; the Tamils are ever-vibrating
in their spirit.
Let us all do good service unto the Tamil Language
Let the word Tamil burst out in pride and joy
And dance the dance of Victory,
Let your daily song be 'VICTORY FOR TAMIL'

*Translated by T.S. Shanmugasundaram*

## 44. பெண்களைப்பற்றிப் பெர்னாட்ஷா

புவிப்பெரியான் ஜார்ஜ்பெர்னார்ட் ஷாவுரைத்த
பொன்மொழியைக் கேளுங்கள் நாட்டில்உள்ளீர்!
"உவந்தொருவன் வாழ்க்கைசரி யாய்நடத்த
உதவுபவள் பெரும்பாலும் மனைவிஆவாள்!
அவளாலே மணவாளன் ஒழுங்குபெற்றான்;
அவளாலே மணவாளன் சுத்திபெற்றான்!"
குவியுமெழிற் பெண்களுக்கே ஊறுசெய்யும்
குள்ளர்களே, கேட்டீரோ ஷாவின்பேச்சை!

அவனியிலே ஒருவனுக்கு மனைவியின்றேல்
அவனடையும் தீமையையார் அறியக்கூடும்?
கவலையுற ஆடவர்கள் நாளும்செய்யும்
கணக்கற்ற ஊழல்களை யெல்லாம்அந்த
நவையற்ற பெண்களன்றோ விலக்குகின்றார்!
நானிலத்தில் மார்தட்டும் ஆடவர்கள்
சுவைவாழ்விற் கடைத்தேறத் தக்கதான
சூட்சுமமும் பெண்களிடம் அமைந்ததன்றோ!

கல்வியில்லை உரிமையில்லை பெண்களுக்குக்
கடைத்தேற வழியின்றி விழிக்கின்றார்கள்!
புல்லென்றே நினைக்கின்றீர் மனைவிமாரைப்
புருஷர்களின் உபயோகம் பெரிதென்கின்றீர்!
வல்லவன்பே ரறிஞன்ஷா வார்த்தைகேட்டீர்-
மனோபாவம் இனியேனும் திருந்தவேண்டும்.
இல்லையெனில் எதுசெயலாம் பெண்ஆண்என்ற
இரண்டுருளை யால்நடக்கும் இன்பவாழ்க்கை!

## *44. Bernard Shaw on Women*

---

The world's greatest man, Bernard Shaw,
Has spoken golden words. Hear, my countrymen!
"It is the wife who almost always
Helps a man lead a good life.
Because of her, the husband walks straight.
Because of her, he lives faultless!"
Dwarfs who harms the interests of lovely women,
Did you hear Shaw's meaningful message?

Countless the ills for a man in this world
When he lives without a wife.
Men pile up mistakes upon wrong deeds
Oh, countless these! Only women
Generous-hearted, saves them from all this!
Besides, women alone know the secret
That leads to a life of fulfilment.

No literacy, no rights, women suffer
With no pathways to emancipation.
You consider wives as so much grass
Meant only for brute man's use!
Having now heard the scholarly Shaw's words
You must change your ways of thinking.
What other path is there? A happy life
Is made by two wheels: man and woman!

*Translated by Prema Nandakumar*

# 45. கைம்மைப் பழி

கோரிக்கைஅற்றுக் கிடக்குதண்ணே இங்கு
வேரிற் பழுத்த பலா-மிகக்
கொடியதென் றெண்ணிடப் பட்டதண்ணே குளிர்
வடிகின்ற வட்ட நிலா!

சீரற் றிருக்குதையோ குளிர் தென்றல்
சிறந்திடும பூஞ் சோலை-சீ
சீஎன் றிகழ்ந்திடப் பட்டதண்ணே நறுஞ்
சீதளப் பூ மாலை!

நாடப்படா தென்று நீக்கி வைத்தார்கள்
நலஞ்செய் நறுங் கனியைக்-கெட்ட
நஞ்சென்று சொல்லிவைத் தார்எழில்வீணை
நரம்புதரும் தொனியை!

சூடப் படாதென்று சொல்லிவைத் தார் தலை
சூடத்தகும் க்ரீ டத்தை-நாம்
தொடவும் தகாதென்று சொன்னார் நறுந்தேன்
துவைந்திடும் பொற் குடத்தை!

இன்ப வருக்கமெல் லாம்நிறை வாகி
இருக்கின்ற பெண்கள் நிலை-இங்
கிவ்விதமாக இருக்குதண்ணே! இதில்
யாருக்கும் வெட்க மிலை!

## *45. The Bane of Widowhood*

---

Untended lies here, dear elders,
Ripe at the root, the jack - fruit !
The cool round moon
Is considered to be something terrible.

Alas ! unkempt lies the flower garden
Famed for its cool southern breeze !
The garland of fragrant flowers,
Lies rejected.

They tabooed as unworthy of being sought
The supple fruit that savours health,
They proscribed as vile venom the vibrating notes
Given by the graceful veena strings.

They proclaimed as unworthy of being worn
The crown most fit to don the head ;
They forbade that we should not even touch
The golden pot of curdled wholesome honey !

Women in whom are perfected
All the categories of joy, their status,
Here, is like this, dear elders,
And none is ashamed of this !

தன்கண வன்செத்து விட்டபின் மாது
தலையிற்கைம் மையென ஓர்-பெருந்
துன்பச் சுமைதனைத் தூக்கிவைத் தார்; பின்பு
துணைதேட வேண்டாம் என் றார்.

துணைவி இறந்தபின் வேறு துணைவியைத்
தேடுமோர் ஆடவன் போல்-பெண்ணும்
துணைவன் இறந்தபின் வேறு துணைதேடச்
சொல்லிடு வோம்புவி மேல்.

கணை விடு பட்டதும் லட்சியம் தேடும் நம்
காதலும் அவ் வாறே-அந்தக்
காதற் கணைதொடுக் காத உயிர்க்குலம்
எங்குண்டு சொல் வேறே?

காதல் இல்லாவிடம் சூனியமாம் புவி
காதலினால் நடக்கும்! -பெண்கள்
காதலுளத்தைத் தடுப்பது, வாழ்வைக்
கவிழ்க்கின்றதை நிகர்க்கும்.

காதல் சுரக்கின்ற நெஞ்சத்திலே கெட்ட
கைம்மையைத் தூர்க்கா தீர்!-ஒரு
கட்டழகன் திருத் தோளினைச் சேர்ந்திடச்
சாத்திரம் பார்க்கா தீர்!

On the death of her husband, on the woman's head,
They put the onerous burden of widowhood ;
And they forbade her, thereafter,
Never to seek for her a companion.

Just as man, on the death of his wife, seeks
A different spouse, so, too, should women
Seek a different partner, on the death
Of her husband. So let's proclaim to the world.

"As soon as the shaft is freed, it seeks
Its target", and so does our love ; Tell me
If there exists anywhere else a race
Alive that hasn't shot its arrows of love.

Empty the space that is void of love
And the earth moves because of love!
Baulking the loving hearts of women
Is like turning life upside down.

Do not stop with vile widowhood
The heart where love wells up
Do not consult the holy scriptures
To join the shoulders of a handsome mate.

*Translated by S. Raman*

# 46. எழுச்சியுற்ற பெண்கள்

மேற்றிசையில் வானத்தில் பொன்னுருக்கு
வெள்ளத்தில் செம்பரிதி மிதக்கு நேரம்!
வேற்கண்ணி யாளொருத்தி சோலைதன்னில்
விளையாட நின்றிருந்தாள் மயிலைப் போலே!
காற்றடித்த சோலையிலே நேரம் பார்த்துக்
கனியடித்துக் கொண்டு செலும் செல்வப்பிள்ளை
ஆற்றுவெள்ளம் போலாசை வெள்ளம் தூண்ட
அவளிடத்தே சில சொன்னான் பின்னுஞ் சொல்வான்:

விரிந்தஒரு வானத்தின் ஒளிவெள்ளத்தை
விரைந்துவந்து கருமேகம் விழுங்கக்கூடும்!
இருந்தவெயில் இருளாகும் ஒருகணத்தில்!
இது அதுவாய் மாறிவிடும் மறுகணத்தில்.
தெரிந்ததுதான்; ஆனாலும் ஒன்றேயொன்று!
தெளிந்தஓர் உள்ளத்தில் எழுந்த காதல்
பருந்துவந்து கொத்துமென்றும் தணிவதில்லை;
படைதிரண்டு வந்தாலும் சலிப்பதில்லை!

## *46. The Awakened Women*

---

On the Western horizon
The russet sun floated in a golden flood.
A damsel with gleaming eyes
Stood there like a dancing peacock.
A boy belonging to a rich family
Came hither to pluck fruits
Overwhelmed by spasms of passion
He launched upon a speech:

"The brilliance of the light beyond
May be eaten up by dark clouds:
Sunshine may vanish in a moment!
It is well known that a change
Comes the very next moment!
But the love that springs in a clear heart
Does not fear the swoop of a vulture!
It does not dry up when an army attacks it.

கன்னத்தில் ஒரு முத்தம் வைப்பாய் பெண்ணே,
கருதுவதிற் பயனில்லை தனியாய் நின்று.
மின்னிவிட்டாய் என்மனதில்! பொன்னாய்ப் பூவாய்
விளைந்துவிட்டாய் கண்ணெதிரில்! என்று சொன்னான்
கன்னியொரு வார்த்தையென்றாள் என்னவென்றான்;
கல்வியற்ற மனிதனை நான் மதியேன என்றாள்.
பன்னூற் பண்டிதனென்று தன்னைச் சொன்னான்.
பழச்சுளையின் வாய்திறந்து சிரித்துச் சொல்வாள்:

பெருங்கல்விப் பண்டிதனே! உனக்கோர் கேள்வி;
பெண்களுக்குச் சுதந்தரந்தான் உண்டோ? என்றாள்.
தரும்போது கொள்வதுதான் தருமம் என்றான்.
தராவிடில்நான் மேற்கொண்டால் என்னவென்றாள்.
திருமணமா காதவள்தன் பெற்றோரின்றிச்
செயல்ஒன்று தான்செய்தல் அதர்மம் என்றான்.
மருவ அழைக் கின்றாயே, நானும் என்றன்
மாதா பிதாவின்றி விடை சொல்வேனோ?

என்றுரைத்தாள். இதுகேட்டுச் செல்வப்பிள்ளை
என்னேடி, இதுஉனக்குத் தெரியவில்லை,
மன்றல்செயும் விஷயத்தில் ஒன்றில்மட்டும்
மனம்போல நடக்கலாம் பெண்கள் என்றான்.
என்மனது வேறொருவன் இடத்திலென்றே
இவனிட்ட பீடிகையைப் பறக்கச் செய்தாள்.
உன் நலத்தை இழக்கின்றாய் வலிய நானே
உனக்களிப்பேன் இன்பமென நெருங்கலானான்!

Just lend me a kiss, darling,
What is the use of living alone!
You have entered my heart! As gold,
As flower, you stand before me!" he said.
"Just a word", she replied. "what may it be?"
"I care not for an illiterate yokel".
"Oh, I am a scholar several times ever".
She laughed and proceeded:

"O fine scholar! A question to you.
Have women freedom?" she asked.
"They must wait till it is given".
"What if it is wrested by me?"
"That is contrary to Dharma
For a maic. .o act without parental consent".
"You ask me for an embarace.
How then shall I act without asking them?"

That spoilt son of the rich said:
"You are ignorant. In this matter
Of choosing one's groom, women can act
As their heart leades them".
"Then my heart is given elsewhere",
She cut short his preamble.
"You are missing pleasure. I shall give
All the joy'" and he drew closer.

அருகவளும் நெருங்கி வந்தாள்; தன்மேல் வைத்த
ஆர்வந்தான் எனநினைத்தான்! இமைக்குமுன்னே
ஒருகையில் உடைவாளும் இடது கையில்
ஓடிப்போ! என்னுமொரு குறிப்புமாகப்
புருவத்தை மேலேற்றி விழித்துச் சொல்வாள்;
புனிதத்தால் என்காதல் பிறன்மேலென்று,
பரிந்துரைத்தேன்! மேற்சென்றாய்! தெளிந்த காதல்
படைதிரண்டு வந்தாலும் சலியாதென்றாள்.

ஓடினான் ஓடினான் செல்வப்பிள்ளை
ஓடிவந்து மூச்சுவிட்டான் என்னிடத்தில்,
கூடிஇரு நூறுபுலி எதிர்த்ததுண்டோ?
கொலையாளி யிடமிருந்து மீண்டதுண்டோ?
ஓடிவந்த காரணத்தைக்கேட்டேன். அன்னோன்
உரைத்துவிட்டான்! நானவற்றைக் கேட்டுவிட்டேன்
கோடிஉள்ளம் வேண்டுமிந்த மகிழ்ச்சிதாங்கக்
குலுங்கநகைத் தேயுரைத்தேன் அவனிடத்தில்;

செல்வப்பிள்ளாய்! இன்றுபுவியின் பெண்கள்
சிறுநிலையில் இருக்கவில்லை: விழித்துக் கொண்டார்!
கொல்லவந்த வாளைநீ குறைசொல்லாதே!
கொடுவாள் போல் மற்றொருவாள் உன்மனைவி
மெல்லிடையில் நீ காணாக் காரணத்தால்,
விளையாட நினைத்துவிட்டாய் ஊர்ப்பெண்கள்மேல்!
பொல்லாத மானிடனே, மனச்சான்றுக்குள்
புகுந்து கொள்வாய்! நிற்காதே! என்றேன்; சென்றான்.

She too approached him.
He mistook it for acquiescence.
In a flash with sword in her right hand,
Her left gesturing immediate dismissal,
Brows raised high, fiery-eyed, she spoke,
"I told you my heart is set
Upon another! You dared to trespass!
Come an army, pure love never alters!"

Our pampered young man took to his heels
And came to me to breathe in peace
"Did a hundred tigers chase you?
Are you escaped from an assassin?
Why have you been running fast?" I asked him
He related his tale. Having heard
I needed ten million hearts to contain
My joy. Laughing, I then said:

"Pampered fool! Today women
Are not underprivileged. They are awake!
Don't speak ill of that killer-sword!
As you could not discern another rapier
In your own lovely, docile wife,
You wished to play with other girls!
Evil fellow, get thee gone
Enter your conscience, go!" He slunk away

*Translated by Prema Nandakumar*

# 47. குழந்தை மணத்தின் கொடுமை

ஏழு வயதே எழிற்கருங் கண்மலர்!
ஒருதா மரைமுகம்! ஒருசிறு மணியிடை!!
சுவைத் தறியாத சுவைதருங் கனிவாய்!
இவற்றை யுடைய இளம்பெண்-அவள்தான்,
கூவத் தெரியாக் குயிலின் குஞ்சு,
தாவாச் சிறுமான், மோவா அரும்பு!
தாலி யறுத்துத் தந்தையின் வீட்டில்
இந்தச் சிறுமி யிருந்திடு கின்றாள்;
இவளது தந்தையும் மனைவியை யிழந்து
மறுதார மாய்ஓர் மங்கையை மணந்தான்.
புதுப்பெண் தானும் புதுமாப் பிளையும்
இரவையே விரும்பி ஏறுவர் கட்டிலில்
பகலைப் போக்கப் பந்தா டிடுவார்!
இளந்தலைக் கைம்பெண் இவைகளைக் காண்பாள்!
தனியாய் ஒருநாள் தன்பாட் டியிடம்
தேம்பித் தேம்பி அழுத வண்ணம்
ஏழு வயதின் இளம்பெண் சொல்லுவாள்;
'என்னை விலக்கி என் சிறு தாயிடம்
தந்தை கொஞ்சுதல் தகுமோ? தந்தை
அவளை விரும்பி, அவள் தலை மீது
பூச்சூடு கின்றார்; புறக்கணித்தார் எனை!
தாமும் அவளும் தனியறை செல்வார்;
நான் ஏன் வெளியில் நாய்போற் கிடப்பது?

## *47. The Cruelty of Child Marriage*

---

Seven year old, dark beautiful and flowery eyes,
A lotus face, a slender handsome waist,
An untasted, but tasty mouth ripe,
All these aspects, the girl has.
Only she is like the offspring, of the cuckoo,
That does not know how to coo,
A deer small that can't jump, a bud unblossomed;
She is a widow rusting in her father's home,
Her father too, lost his wife
And married a wife second,
The new bride and the bridegroom
Prefer the night only and go to bed
They play with the ball to while away the day
The widow young, sees these all.
Alone one day, the seven-year old girl young
Asks her grandma,
Copiously weeping and shedding tears,
Is it right for father to fondle my step - mother after deserting me?
Father is infatuated, he puts the flowers on to her head.
He has deserted me.
He and she go to the bed-room
Why should I wait outside like a dog?

அவருக்கு நான் மகள்! அவர் எதிர்ச் சென்றால்
நீ போ! என்று புருவம் நெறிப்பதோ?'
பாட்டி மடியிற் படுத்துப் புரண்டே
இவ்வாறு அழுதாள் இளம்பூங் கொடியாள்.
இந்நிலைக்கு இவ்வாறு அழுதாள்-இவளது
பின்நிலை எண்ணிப் பாட்டி பெரிதும்
அழுத கண்ணீர் வெள்ளம், அந்தக்
குழந்தை வாழ்நாட் கொடுமையிற் பெரிதே.

After all, daughter am I to him.
When I go to him, is it right for him
To say 'get out' and to lift his eye-brows?
That girl young, lay on the lap
Of her grand mother and tossed
Herself here and there all the time weeping
Even at this stage, she wept like this,
Musing over her plight future,
Grandma wept and shed tears
Copious. Those floods of tears
Were more cruel to look at,
Than even the cruel life of the child.

*Translated by N. Sankaran*

# 48. பெண்ணுக்கு நீதி

கல்யாணம் ஆகாத பெண்ணே!-உன்
கதிதன்னை நீநிச் சயம் செய்க கண்ணே! (கல்)

வல்லமை பேசியுன் வீட்டில்-பெண்
வாங்கவே வந்திடு வார்கள் சிலபேர்கள்;
நல்ல விலை பேசுவார்-உன்னை
நாளும் நலிந்து சுமந்து பெற்றோர்கள்,
கல்லென உன்னை மதிப்பார்-கண்ணில்
கல்யாண மாப்பிள்ளை தன்னையுங் காட்டார்;
வல்லி உனக்கொரு நீதி-'இந்த
வஞ்சகத் தரகர்க்கு நீ அஞ்சவேண்டாம்' (கல்)

பெற்றவ ருக்கெஜ மானர்-எதிர்
பேசவொண் ணாதவர் ஊரினில் துஷ்டர்
மற்றும் கடன் கொடுத்தோர்கள்-நல்ல
வழியென்று ஜாதியென் றேயுரைப் பார்கள்;
சுற்றத்திலே முதியோர்கள்-இவர்
சொற்படி உன்னைத் தொலைத்திடப் பார்ப்பார்,
கற்றவளே ஒன்று சொல்வேன்-'உன்
கண்ணைக் கருத்தைக் கவர்ந்தவன் நாதன்!' (கல்)

## *48. Justice for Women*

---

Virgin dear! You be the judge
Of your future!

Some people will enter your house
Pride-ridden, to get a bride.
They will speak in terms of wealth.
The parents who gave you birth
And brought you up amid worries
Will consider you a piece of stone.
They will not even show you the groom.
Girls are always discriminated against.
'Don't you fear these wicked brokers'.

Office bosses of the parents,
People whom one cannot overrule,
The heavyweights of the place
Creditors - these severally
Will speak of the 'best way' and 'caste'
Why, they will try to dispose you off
As per the will of the elders at home.
You are educated, I tell you.
Your groom is the one
Whom your eyes and heart have chosen.

தனித்துக் கிடந்திடும் லாயம்-அதில்
தள்ளியடைக்கப் படுங்குதி ரைக்கும்
கனைத்திட உத்தர வுண்டு-வீட்டில்
காரிகை நாணவும் அஞ்சவும் வேண்டும்;
கனத்த உன் பெற்றோரைக் கேளே!-அவர்
கல்லொத்த நெஞ்சையுன் கண்ணீரினாலே
நனைத்திடுவாய் அதன் மேலும்-அவர்
ஞாயம் தராவிடில் விடுதலை மேற்கொள்! (கல்)

மாலைக் கடற்கரை யோரம்-நல்ல
வண்புனல் பாய்ந்திடும் மாநதிதீரம்
காலைக் கதிர் சிந்து சிற்றூர்-கண்
காட்சிகள் கூட்டங்கள் பந்தாடு சாலை
வேலை ஒழிந்துள்ள நேரம்-நீ
விளையாடுவாய் தாவி விளையாடு மான்போல்!
கோலத்தினைக் கொய்வதுண்டோ?-'பெண்கள்
கொய்யாப் பழக்கூட்டம்' என்றே உரைப்பாய்.

There is the stable. Even the horse
That is locked up within
Has the right to neigh. But the girl
Should be shy and shake with fear
Even inside the home.
Question your obdurate parents.
Bathe their stony hearts
With your tears. If they are adamant,
Come on! Walk into freedom!

May you skip around in joy
Like the free, free deer!
Enjoy life in leisure time
On the sea-beach in the evenings!
Or the banks of a flowing river;
Or the village fresh at dawn;
In exhibitions, meetings, play grounds!
Who dare destroy radiance?
Exclaim: "Women are not for slaving!"

*Translated by Prema Nandakumar*

# 49. இறந்தவன்மேற் பழி

---

அந்திய காலம் வந்ததடியே!-பைந்தொடியே!
-இளம்பிடியே!-பூங்கொடியே!

சிந்தை ஒன்றாகி நாம் இன்பத்தின் எல்லை
தேடிச் சுகிக்கையில் எனக்கிந்தத் தொல்லை
வந்ததே இனி நான் வாழ்வதற் கில்லை
மனத்தில் எனக்கிருப்ப தொன்றே-அதை-இன்றே-
குணக்குன்றே!-கேள் நன்றே! (அந்திய)

கடும்பிணி யாளன்நான் இறந்தபின், மாதே
கைம்பெண்ணாய் வருந்தாதே, பழி என்றன் மீதே!
அடஞ் செய்யும் வைதிகம் பொருள்படுத் தாதே
ஆசைக் குரியவனை நாடு-மகிழ்வோடு-தார்சூடு-
நலம்தேடு! (அந்திய)

## *49. Blame on the Dead!*

---

Darling girl, alas!
Lovely as a flower-creeper
You are: listen.
My end is not far away.

With hearts entwined
We happily explored
The parameters of joy!
Then fell this bombshell.
My days are numbered.
One desire alone remains.
Receptacle of good qualities!
Hear me express my last wish.

Afflicted with terminal sickness
I am to die: do not grieve.
Put the blame on me.
Do not care for the tradition-mongers.
Approach the man you love.
Do it with joy. Garland him.
Get your future assured.

கற்கண்டு போன்றபெண் கணவனை இழந் தால்
கசந்த பெண் ஆவது விந்தைதான் புவி மேல்!
சொற் கண்டு மலைக்காதே உன் பகுத் தறிவால்
தோஷம், குணம் அறிந்து நடப்பாய்-துயர் கடப்பாய்
-துணைபிடிப்பாய்-பயம் விடுப்பாய்.

This is a wonder passing strange!
Why should a sweet young girl
Become a bitter maid when the husband dies?
Do not start at my words.
Use your common sense.
Find out the good and evil in man.
Cross the sea of sorrow!
Marry the man of your choice.
Be you fearless!

*Translated by Prema Nandakumar*

## 50. பெண் குழந்தை தாலாட்டு

---

ஆராரோ ஆரரிரோ ஆரரிரோ ஆராரோ
ஆராரோ ஆரரிரோ ஆரரிரோ ஆராரோ

சோலை மலரே! சுவர்ணத்தின் வார்ப்படமே!
காலைஇளஞ் சூரியனைக் காட்டும் பளிங்குருவே!

வண்மை உயர்வு மனிதர் நலமெல்லாம்
பெண்மையினால் உண்டென்று பேச வந்த பெண்ணழகே!

நாய்என்று பெண்ணை நவில்வார்க்கும் இப்புவிக்குத்
தாய்என்று காட்டத் தமிழர்க்கு வாய்த்தவளே!

வெண்முகத்தில் நீலம் விளையாடிக் கொண்டிருக்கும்
கண்கள் உறங்கு! கனியே உறங்கிடுவாய்!

அன்னத்தின் தூவி அனிச்ச மலரெடுத்துச்
சின்ன உடலாகச் சித்திரித்த மெல்லியலே!

மின்னல் ஒளியே, விலைமதியா ரத்தினமே!
கன்னல் பிழிந்து கலந்த கனிச்சாறே!

## *50. Lullaby for a Female Child*

---

Hush my darling! Hush-a bye!

Fresh blossom! Image in gold!
Marble form that reflects the morning sun!

Charming girl come to proclaim:
The strength and increasing good of man
Are due to .. omanhood.

You are born in Tamil land
To show purblind man
That woman is no whelp but a mother!

My darling, rest, closing your eyes
That gleams as azure blue
In your fair face!

Soft of body, tinily made,
As with swan feathers
And flowers of the sensitive plant!

Lightning-glow, jewel priceless,
You are the fruit juice
Mixed with sugar sweet!

மூடத் தனத்தின் முடைநாற்றம் வீசுகின்ற
காடு மணக்கவரும் கற்பூரப் பெட்டகமே!

வேண்டாத சாதி இருட்டு வெளுப்பதற்குத்
தூண்டா விளக்காய்த் துலங்கும் பெருமாட்டி!

புண்ணிற் சரம்விடுக்கும் பொய்ம்மதத்தின் கூட்டத்தைக்
கண்ணிற் கனல்சிந்திக் கட்டழிக்க வந்தவளே!

தெய்விகத்தை நம்பும் திருந்தாத பெண்குலத்தை
உய்விக்க வந்த உவப்பே! பகுத்தறிவே!

எல்லாம் கடவுள்செயல் என்று துடைநடுங்கும்
பொல்லாங்கு தீர்த்துப் புதுமைசெய வந்தவளே!

வாயில்இட்டுத் தொப்பை வளர்க்கும் சதிக்கிடங்கைக்
கோயிலென்று காசுதரும் கொள்கை தவிர்ப்பவளே!

சாணிக்குப் பொட்டிட்டுச் சாமிஎன்பார் செய்கைக்கு
நாணி உறங்கு; நகைத்துநீ கண்ணுறங்கு!

You are a pocket of camphor
Come to spread scent
In a superstition-stinking society!

Heroine who shines
As a self-sustaining lamp
To eradicate the dark niches of caste!

You have come with fiery eyes
To destroy the myopic religious sects
That add insult to injury.

Incarnate common-sense! O joy
Who has come to save mankind
From believing in false divinity!

You have come to initiate
The New Age: no more blind faith
That everything is an act of God.

You have turned away from buildings
That are filled by greedy men
In the name of temples.

Hush-a-bye! Sleep with a smile!
Laugh at the swindler ascetics
Who daub dung with saffron as God!

*Translated by Prema Nandakumar*

## 51. கைம்மை நீக்கம்

நீ எனக்கும், உனக்கு நானும்-இனி
நேருக்கு நேர் தித்திக்கும் பாலும், தேனும் (நீ)

தூய வாழ்வில் இதுமுதல் நமதுளம்
நேய மாக அமைவுற உறுதிசொல்! அடி! (நீ)

கைம்பெண் என்றெண்ணங் கொண்டே
கலங்கினா யோ கற் கண்டே?
காடு வேகு வதை ஒரு மொழியினில்
மூடு போட முடியுமோ உரையடி? ததி (நீ)

பைந்தமி ழைச்சீ ராக்கக்
கைம்மைஎன் னும்சொல் நீக்கப்

பறந்து வாடி அழகிய மயிலே!
இறந்த கால நடைமுறை தொலையவே, (நீ)

பகுத்தறிவான மன்று
பாவை நீ ஏறி நின்று
பாரடீ உன் எதிரினிற் பழஞ் செயல்
கோரமாக அழிந்தொழி குவதையே (நீ)

கருத்தொரு மித்த போது
கட்டுக்கள் என்ப தேது?

கைம்மை கூறும் அதிசய மனிதர்கள்
செம்மை யாகும் படிசெய மனதுவை! அடி! (நீ)

## *51. Eradication of Widowhood*

---

You for me: I am for you.
As milk and honey,
Equally sweet, oh sweet!

My love! Give me your word.
Henceforth, our hearts in love
Shall have in life's purity.

Sugar-candy in your ways!
Were you feeling troubled
Because you were a widow?
Can a word snap down as a lid
The waves of emotion
That blaze as a forest fire?

Peacock-loveliness! Fly hither
To weed out the word widow
From the Tamil language.
Let the past be gone!

Maiden glorious! Ascend
The platform of rationalism
And watch the annihiliation
Of all the past habits!

How can bonds remain
When thoughts have fused together?
Welcome as you proceed
To transform the strange men
Who still speak of widowhood.

*Translated by Prema Nandakumar*

# 52. காதலைத் தீய்த்த கட்டுப்பாடு

வேற்றூர் போய் நள்ளிரவில் வீடுவந்த
 வேலனிடம், ஆள்ஒருவன் கடிதம் தந்தான்,
ஏற்றதனை வாசிக்க லுற்றான் வேலன்:
 'என்னருமைக் காதலரே, கடைசிச் சேதி:
நேற்றிரவு நாமிருவர் பூந்தோட் டத்தில்
 நெடுநேரம் பேசியதை என்தாய் கண்டாள்!
ஆற்றாத துயரால்என் தந்தை, அண்ணன்
 அனைவரிடமும் சொல்லி முடித்துவிட்டாள்.

குடும்பத்தின் பெயர்கெடுக்கத் தோன்றிவிட்டாய்
 கொடியவளே! விஷப்பாம்பே! என்று தந்தை
தடதடவென் றிருகையால் தலையில் மோதித்
 தரையினிலே புரண்டழுதார்; அண்ணன் அங்கு
மடமடவென் றேகொல்லைக் கிணற்றில்வீழ்ந்தே
 மாய்வார்போல் ஓடிப்பின் திரும்பி வந்து,
படுபாவி தாலியற்ற பிறகும் இந்தப்
 பழுதுநடை கொள்வதுண்டோ என்று நைந்தார்.

## *52. Restriction That Ruined Love*

---

Velan returned home one night
And was given a letter: opening it
He read as follows: "Dear love,
My last message. Yesterday
Our sojourn in the garden
And our converse were discovered by mother.
She lost control and described all
To my father, brother, everybody.

"Poisonous snake! Evil woman
Come to destroy the family's name!"
Screaming, my father beat his head
And writhed on the floor. My brother
Ran to the backyard well
As if to jump in but came back
And cursed me: "Wearing widow's badge
How should you follow ruinous paths?"

தாயோஎன் எதிர்வந்து, தாலியோடு
சகலமும் போயினஏடி இன்னும்என்ன!
தீயாகிக் கொளுத்திவிட்டாய் எம்மையெல்லாம்!
தெருவார்கள் ஊரார்கள் இதையறிந்தால்
ஓயாமல் தூற்றிடுவார்! யாம்இவ்வூரில்
உயர்ந்திருந்தோம்; தாழ்த்திவிட்டாய் அந்தோ, நீதான்
பாயேனும் விரித்ததிலே படுப்பதுண்டா,
பதியிழந்தால்? மூதேவி! என்று சொன்னாள்.

தந்தையார் 'அடிஉன்னைக் கொன்றுபோட்டுத்
தலையறுத்துக் கொள்ளுகின்றேன்' என்பார்; அண்ணன்
அந்தமதி யற்றவனைக் கொல்வேன் என்றே
அருகிருக்கும் கொடுவாளைப் பாய்ந்தெடுப்பான்!
இந்தவிதம் கொதித்தார்கள் இரவுமட்டும்
இனிஎன்னால் அவர்கட்குத் தொல்லைவேண்டாம்;
சுந்தரனே, என்காதல் துரையே! உன்னைத்
துறக்கின்றேன் இன்றிரவில் கடலில்வீழ்ந்தே!'

காதலியின் கடிதத்தில் இதைவாசித்தான்!
கதறினான்! கடல்நோக்கிப் பறந்தான்வேலன்!
ஈதறிந்தார் ஊரிலுள்ளார்! ஓடினார்கள்!
எழில்வானம், முழுநிலவு, சமுத்திரத்தின்
மீதெல்லாம் மிதக்கும்ஒளி, அகண்டாகாரம்
மேவுபெருங் காட்சியில்ஓர் துன்பப்புள்போல்
மாதுகடற் பாலத்தின் கடைசிநின்று
வாய்விட்டுக் கதறுகின்றாள் வசமிழந்தாள்:

My own mother: "You lost everything
With the auspicious wedding thread.
You have now burnt us to ashes.
Should our neighbours, the townsmen know,
They will snap at us. We held our heads high.
Now our pride has touched the dust.
Alas who heard of matrimonial bliss
For a widow! Accursed one!"

My father: "I shall first kill you
And then end myself". My brother:
"I shall murder that hapless fellow.
Here is a sharpened sword!"
The whole night spent in such passion.
I shall plague them no more!
My love, my lord, I give you up!
Yes, by entering the sea tonight!"

Such was the message from his beloved.
Lamenting Velan ran towards the sea.
The townspeople also followed him.
Beautiful sky, full moon, a brilliant light
All over the sea! as a sorrowing bird
In a delightful painting of space,
The lady is standing on the pier's edge
Giving vent to her pent-up sorrows:

"எனைமணந்தார் இறந்தார்; என்குற்றமல்ல;
இறந்தவுடன் மங்கலநாண், நல்லாடைகள்,
புனைமலர்குங்குமம் அணிகள் போனதுண்டு,
பொன்னுடலும் இன்னுயிரும் போனதுண்டோ?
எனைஆளும் காதலுக்கோர் இலக்கியத்துக்
கிசைந்ததெனில் உயிரியற்கை; நான்என்செய்வேன்?
தனையடக்கிக் காதலினைத் தவிர்த்துவாழும்
சகம்இருந்தால் காட்டாயோ நிலவேநீதான்!

கண்படைத்த குற்றத்தால் அழகியோன்என்
கருத்தேறி உயிர்ஏறிக் கலந்துகொண்டான்!
பெண்படைத்த இவ்வுலகைப் பல்லாண்டாகப்
பெற்றுயர்ந்த நெடுவானே! புனலே! கூறீர்,
மண்படைப்பே காதலெனில், காதலுக்கு
மறுப்பெதற்குக் கட்டுப்பா டெதற்குக் கண்டார்?
புண்படைத்த என்நாடே, கைம்மைக் கூர்வேல்
பொழிகின்றாய் மங்கையர்மேல்! அழிகின்றாயே!

ஆடவரின் காதலுக்கும், பெண்கள்கூட்டம்
அடைகின்ற காதலுக்கும், மாற்றமுண்டோ?
பேடகன்ற அன்றிலைப்போல், மனைவிசெத்தால்
பெருங்கிழவன் காதல்செயப் பெண்கேட்கின்றான்
வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள்
மணவாளன் இறந்தால்பின் மணத்தல்தீதோ?
பாடாத தேனீக்கள், உலவாத் தென்றல்,
பசியாத நல்வயிறு, பார்த்ததுண்டோ?

"My bridegroom died: it was not my fault.
the auspicious thread, soft silks,
Fresh blossoms, saffron mark are all gone.
But not this golden body and dear life.
The love that came upon me follows
The grammar of nature: what can I do?
O moonlight, show me the world
Where love can be overcome by self-control!

Because of my sin in possessing eyes
The noble young man has entered my heart.
O wide sky that has been watching
This earth create Woman! O water!
If love is the result of nature's law,
Why should it be controlled or rejected?
Afflicted motherland, why will you pierce
Woman alone with the lance of widowhood?

Is there any difference between the love
That blossoms in men and women?
Should the wife die, like a male bird widowed,
The old man wants to wed a girl soon!
What harm if a young maiden
Wants to re-marry, after the husband's death?
Heard of a dry breeze, bees that don't buzz,
A healthy stomach that is never hungry?

இளமைதந்தாய், உணர்வுதந்தாய், இன்பங்காணும்
இன்னுயிரும் தந்திட்டாய் இயற்கைத்தேவி,
வளமையற்ற நெஞ்சுடையார் இந்நாட்டார்கள்
மறுக்கின்றார் காதலினைக் கைம்மைகூறித்
தளைமீற வலியில்லேன்! அந்தோ, என்றன்
தண்டமிழின் இனிமைபோல் இனியசொல்லான்
உளமாரக் காதலித்தான் என்னை! அன்னோன்
ஊர்நிந்தை ஏற்பதனைச் சகிப்பேனோநான்!

ஓருயிரும் இரண்டுடலும் நாங்கள்! எம்மை
உளிகொண்டு வெட்டிவிட்ட கட்டுப்பாடே,
தீராத காதலினை நெஞ்சத்தோடு
தீய்த்துவிட்டாய்!" என்றாள்-பின் ஓடிவந்து
சீராளன் தாவினான்!-வீழ்ந்தாள்!-வீழ்ந்தான்!
தேம்பிற்றுப் பெண்ணுலகு! இருவர் தீர்ந்தார்!
ஊரார்கள் பார்த்திருந்தார் கரையில்நின்றே
உளம்துடித்தார்; எனினும்அவர் உயிர்வாழ்கின்றார்.

Mother Nature, you gave me youth,
Emotion, life to seek happiness.
The hapless people of this land
Deny love in the name of widowhood!
I have no will power to cut my bonds.
Alas, the youth sweet as honeyed Tamil
Loved me in truth! How can I bear
The society spitting upon his face?

We are two figures, one heart.
Blind tradition, you have cut us asunders;
You have burnt up the eternal love
In our hearts!" she wept piteously.
Seeraalan rushed to hold her. Both fell.
Womanhood mourned. The two died.
The people of the place stood on the beach
And expressed shock. But they are alive still.

*Translated by Prema Nandakumar*

## 53. பெண் கல்வி

பெண்கட்குக் கல்வி வேண்டும்
குடித்தனம் பேணு தற்கே!
பெண்கட்கு கல்வி வேண்டும்
மக்களைப் பேணு தற்கே!
பெண்கட்குக் கல்வி வேண்டும்
உலகினைப் பேணு தற்கே!
பெண்கட்குக் கல்வி வேண்டும்
கல்வியைப் பேணு தற்கே!

கல்வியில்லாத பெண்கள்
களர்நிலம்! அந்நிலத்தில்
புல்விளைந் திடலாம்; நல்ல
புதல்வர்கள் விளைதல் இல்லை!
கல்வியை உடைய பெண்கள்
திருந்திய கழனி, அங்கே
நல்லறி வுடைய மக்கள்
விளைவது நவில வோநான்?

## *53. Women's Education*

---

Women need literacy
 To run the household.
They ought to be educated
 To bring up children well.
Women should acquire knowledge
 To guard the world
Learning helps women
 Widen the arc of scholarship.

Illiterate women
 Are barren land! Grass may grow
On this surface:
 But not ideal children.
The educated woman
 Is a field well prepared.
Wise progeny spring up here:
 I need not repeat this truth.

வானூர்தி செலுத்தல் வைய
மாக்கடல் முழுத ளத்தல்
ஆனஎச் செயலும் ஆண்பெண்
அனைவர்க்கும் பொதுவே! இன்று
நாநிலம் ஆட வர்கள்
ஆணையால் நலிவ டைந்து
போனதால் பெண்க ளுக்கு
விடுதலை போன தன்றோ!

இந்நாளில் பெண்கட் கெல்லாம்
ஏற்பட்ட பணியை நன்கு
பொன்னேபோல் ஒருகை யாலும்
விடுதலை பூணும் செய்கை
இன்னொரு மலர்க்கை யாலும்
இயற்றுக! கல்வி இல்லா
மின்னாளை வாழ்வில் என்றும்
மின்னாள் என்றே உரைப்பேன்.

சமைப்பதும் வீட்டுவேலை
சலிப்பின்றிச் செயலும் பெண்கள்
தமக்கேஆம் என்று கூறல்
சரியில்லை! ஆட வர்கள்
நமக்கும்அப் பணிகள் ஏற்கும்"
என்றெண்ணும் நன்னாள் காண்போம்!
சமைப்பது தாழ்வா? இன்பம்
சமைக்கின்றார் சமையல் செய்வார்!

Remember, it is common skill
    For man and woman
To pilot an aeroplane,
    Survey the vast ocean.
Male chauvenism
    Has weakened the globe today.
No wonder then,
    Women find their freedom gone.

Come forward to execute
    With a golden hand
The jobs assigned to you.
    At the same time
Press forward to gain freedom
    With the other flower-like hand.
Such is my conviction:
    The illiterate woman will never glow.

It is wrong to say
    That women alone should drudge
As cooks at home
    And cleaners all day.
That would be a happy day
    When men too take up such tasks.
Is it shameful to cook?
    The cook creates enjoyment!

உணவினை ஆக்கல் மக்கட்(கு)
உயிர்ஆக்கல் அன்றோ? வாழ்வு
பணத்தினால் அன்று வில்வாட்
படையினால் காண்ப தன்று
தணலினை அடுப்பில் இட்டுத்
தாழியில் சுவையை இட்டே
அணித்திருந் திட்டார் உள்ளத்(து)
அன்பிட்ட உணவால் வாழ்வோம்.

சமைப்பது பெண்க ளுக்குத்
தவிர்க்கொணாக் கடமை என்றும்,
சமைத்திடும் தொழிலோ, நல்ல
தாய்மார்க்கே தக்க தென்றும்
தமிழ்த்திரு நாடு தன்னில்
இருக்குமோர் சட்டந் தன்னை
இமைப்போதில் நீக்க வேண்டில்
பெண்கல்வி வேண்டும் யாண்டும்.

Cooking food is indeed
    The nurturing of precious life.
Life is not mere money:
    Nor is it martial prowess.
Stoking ;the stove fire
    And creating taste in the pot,
They serve food with love.
    Such food is vital to existence.

There is an unwritten law
    In Tamil Nadu that cookery
Is the inalienable duty
    Of the poor housewife.
Alas, that such drudgery
    Is fit only for mothers.
Universal women's education
    Alone can remove this unfair rule.

*Translated by Prema Nandakumar*

# 54. உரையாடல்

"பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாம்என் கின்றீரோ?
மண்ணுக்கும் கேடாய் மதித்தீரோ பெண்ணினத்தை?
பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு
மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே!
ஊமைஎன்று பெண்ணை உரைக்குமட்டும் உள்ளடங்கும்
ஆமை நிலைமைதான் ஆடவர்க்கும் உண்டு!
புலன்அற்ற பேதையாய்ப் பெண்ணைச்செய் தால்அந்
நிலம்விளைந்த பைங்கூழ் நிலைமையும் அம்மட்டே!
சித்ரநிகர் பெண்டிர்களைச் சீரழிக்கும் பாரதநற்
புத்ரர்களைப் பற்றியன்றோ பூலோகம் தூற்றுவது?
சற்றுந் தயங்கேன் தனியாய்ச்சஞ் சீவிமலை
உற்றேறி மூலிகையின் உண்மை அறிந்திடுவேன்;
மூலிகையைத் தேட முடியாவிட்டால் மலையின்
மேலிருந்து கீழே விழுந்திறக்க நானறிவேன்!
ஊரிலுள்ள பெண்களெல்லாம் உள்ளத்தைப் பூர்த்திசெயும்
சீரியர்க்கு மாலையிட்டுச் சீரடைந்து வாழ்கின்றார்.
தோகை மயிலே! இதைநீகேள் சொல்லுகின்றேன்.
நாகம்போல் சீறுகின்ற நாதரிடம் சொல்லிவிடு.
பச்சிலைக்குச் சஞ்சீவி பர்வதம்செல் வேன்." என்றாள்

0 0 0

"அச்சுப் பதுமையே! ஆரணங்கே! நில்லேடி!
நானும் வருகின்றேன் நாயகியே! நாயகியே!"
ஏனிந்தக் கோபம்? எழிலான காதலியே!'

## 54. *A Conversation*

---

"You say women should be denied
Freedom of speech.
Are women cheaper than dust?
As long as woman is not emancipated
This nation will remain enslaved.
Tortoise-like the men will live
As long as they keep their women dumb.
If the woman is kept unintelligent
The crops too will yield very little.
The world speaks ill of Indian men
Who look down upon their lovely women.
I shan't tarry further: alone I will go
To the Sanjivi hill and gain the herb.
In case I fail to get the secret
I know how to jump off the mountain peak.
My friends are happily married
To menfolk who satisfy their whims.
O lovely peacock: tell this message
To my beloved hissing like a snake.
I am going to the Sanjivi hill for the herb"

O O O

"Lovely statue! Maiden graceful! Stop!
I am coming with you. My love, my wife!
Why this anger, my gentle beloved?"

என்றுகுப்பன் ஓடி இளவஞ்சியைத் தழுவி
நின்றான். இளவஞ்சி நின்று மகிழ்வுற்றாள்.
''அவ்விரண்டு மூலிகையில் ஆரணங்கே நீஆசை
இவ்வளவு கொண்டிருத்தல் இப்போதுதான் அறிந்தேன்.
கூட்டிப்போய்ப் பச்சிலையைக் கொய்து தருகின்றேன்;
நீட்டாண்மைக் காரி! எனக்கென்னநீ தருவாய்?''
என்று மொழிந்தான் எழுங்காத லால்குப்பன்.
''முன்னே இலைகொடுத்தால் முத்தம் பிற''கென்றாள்.
''என்கிளியே நீமுத்தம் எத்தனைஈ வாய்?'' என்றான்.
''என்றன் கரத்தால் இறுக உமைத்தழுவி,
நோகாமல் முத்தங்கள் நூறுகொடுப் பேன்''என்றாள்.
''ஆசையால் ஓர் முத்தம் அச்சாரம்போ''டென்றான்.
''கேலிக்கு நேரம் இதுவல்ல, கேளுங்கள்;
மூலிகைக்குப் பக்கத்தில் முத்தம் கிடைக்கும்''என்றாள்.

*('சஞ்சீவி பர்வதத்தின் சாரல்' எனும் பாட்டில் இடம்பெறும் ஒரு பகுதி)*

Kuppan ran and embraced the creeper-image.
She was happy and stood still
"Only now I realise your passion
For those two herbs, my love.
I shall take you myself,
And gather for you the leaves.
Talkative wench! What shall I get in return?"
So gasped the love-lorn Kuppan.
"First the leaves, then the kiss", she firmly said.
"How many kisses, my parrot?"
"I will hug you with my arms
And painlessly kiss you hundred times."
"Come, an advance in the name of love."
"No time for fun, Listen to me.
You will get kisses in return for the herbs."

*(An extract from 'Sanjivi Parvatathin Saral')*

*Translated by Prema Nandakumar*

## 55. புதிய உலகு செய்வோம்

புதியதோர் உலகம் செய்வோம்-கெட்ட
போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம். (புதிய)

பொதுஉடைமைக் கொள்கை திசையெட்டும் சேர்ப்போம்
புனிதமோ டதைஎங்கள் உயிரென்று காப்போம். (புதிய)

இதயமெலாம் அன்பு நதியினில் நனைப்போம்
'இதுஎனதெ' ன்னுமோர் கொடுமையைத் தவிர்ப்போம்.
(புதிய)

உணர்வெனும் கனலிடை அயர்வினை எரிப்போம்
'ஒருபொருள்தனி' எனும் மனிதரைச் சிரிப்போம்! (புதிய)

இயல்பொருள் பயன்தர மறுத்திடில் பசிப்போம்
ஈவதுண்டாம் எனில் அனைவரும் புசிப்போம். (புதிய)

## *55. We shall make a New World*

---

Come, We'll make a new world
        and do away with the warring world;

Come, We'll take the gospel of communism to eight
                                                                directions
        and preserve it chaste as our life;

Come, We'll wet our hearts
        in the river of love
        and bane 'this is mine'.

Come, We'll burn our indolence
        in the flames of awareness
        and laugh at the men who shout 'this belongs to me'

Denied of our rightful dues to fruits of nature, let us starve
        Granted, we share it with all.

*Translated by Bala*

# 56. உலக ஒற்றுமை

தன்பெண்டு தன்பிள்ளை சோறுவீடு
சம்பாத்யம் இவையுண்டு தானுண் டென்போன்
சின்னதொரு கடுகுபோல் உள்ளங் கொண்டோன்
தெருவார்க்கும் பயனற்ற சிறிய வீணன்!
கன்னலடா! என்சிற்றூர் என்போ னுள்ளம்
கடுகுக்கு நேர்மூத்த துவரை யுள்ளம்!
தென்னையுள்ளம் ஒன்றுண்டு தனது நாட்டுச்
சுதந்தரத்தால் பிறநாட்டைத் துன்பு றுத்தல்!

ஆயுதங்கள் பரிகரிப்பார், அமைதி காப்பார்;
அவரவர்தம் வீடுநகர் நாடு காக்க
வாயடியும் கையடியும் வளரச் செய்வார்!
மாம்பிஞ்சி யுள்ளத்தின் பயனும் கண்டோம்!
தூயஉள்ளம் அன்புள்ளம பெரிய உள்ளம்
தொல்லுலக மக்களெலாம் 'ஒன்றே' என்னும்
தாயுள்ளம் தனிலன்றோ இன்பம்! ஆங்கே
சண்டையில்லை தன்னலந்தான் தீர்ந்த தாலே.

## 56. World Unity

---

"My wife, my children, my food, my home,
My income - only these and my dear self exist for me".
He who says so
Has a heart
Small as the mustard seed -
A wee-sized wastrel
Of no use even to his street - mates.
He who says: "Sweet is my little native town"
Has a heart
Of the size of the lentil seed
The direct elder to the mustard.
There is a coconut sized heart
Using the freedom of one's own land
To afflict the other nations.

Weapons they disown
And peace they maintain and yet
To guard his home, or town, or country
Each one will permit to grow
Violence of hand and tongue
Here we see
The heart of a green unripe mango.
Real joy is only
In the heart of purity, In the heart of charity
In the heart of greatness, In the heart of a mother
That affirms as one
All the people of this ancient world.
There is no fight there,
For all selfish love has been spent.

*Translated by S.Raman*

# 57. உலகப்பன் பாட்டு

பகுத்தறிவு மன்றத்தில் உலகம் என்ற
பழயமுத லாளியினை நிற்கவைத்து
மிகுத்திருந்த உன்நன்செய், புன்செய் யாவும்
வெகுகாலத் தின்முன்னே, மக்கள்யாரும்
சுகித்திருக்கக் குத்தகைக்கு விட்டதுண்டோ?
சொல்! என்றேன்; உலகப்பன் ஆம் ஆம் என்றான்.
வகுத்தஅந்தக் குத்தகைக்குச் சீட்டுமுண்டோ
வாய்ச்சொல்லோ என்றுரைத்தேன். வாய்ச்சொல்
என்றான்.

குத்தகைக்கா ரர்தமக்குக் குறித்த எல்லை
குறித்தபடி உள்ளதுவா என்று கேட்டேன்.
கைத்திறனும் வாய்த்திறனும் கொண்டபேர்கள்
கண்மூடி மக்களது நிலத்தையெல்லாம்
கொத்திக்கொண் டேப்பமிட்டு வந்த தாலே
கூலிமக்கள் அதிகரித்தார், என்னசெய்வேன்!
பொத்தல் இலைக் கலமானார் ஏழைமக்கள்
புனல்நிறைந்த தொட்டியைப்போல் ஆனார் செல்வர்;

## 57. *The Song of the Common Man*

---

After placing the world, the old capitalist,
In the rationalist forum, "please tell me
Oh! The common man! Have the
Excess of wet and dry lands
Been let on lease, long time back,
To enable all people to enjoy". Said I.
The comman man said, "Yes, Yes".
For the settled lease is there any
Receipt or was it merely oral? I said.
He said it was only oral.

I asked whether the line demarcated was according
to the records of the lease-holder.
Since persons who were skilled physically
And orally, grabbed the lands of the
People ignorant and devoured,
The working class people increased. What can I do?
The poor people became a vessel
Of hole-ridden eating leaf.
The rich became like a tub full of water.

அதிகரித்த தொகைதொகையாய்ச் செல்வமெல்லாம்
அடுக்கடுக்காய்ச் சிலரிடம்போய் ஏறிக்கொண்டு
சதிராடு தேவடியாள் போல்ஆடிற்று!
தரித்திரரோ புழுப்போலே துடிக்கின்றார்கள்;
இதுஇந்நாள் நிலைஎன்றான் உலகப்பன் தான்!
இந்நிலையி லிருப்பதனால் உலகப்பா நீ!
புதுக்கணக்குப் போட்டுவிடு, பொருளைஎல்லாம்
பொதுவாக எல்லார்க்கும்நீ குத்தகைசெய்.

ஏழைமுத லாளியென்ப தில்லாமற்செய்,
என்றுரைத்தேன். உலகப்பன் எழுந்து துள்ளி,
ஆழமப்பா உன் வார்த்தை! உண்மையப்பா;
அதற்கென்ன தடையப்பா, இல்லையப்பா;
ஆழமப்பா உன்கருத்து, மெய்தானப்பா,
அழகாயும் இருக்குதப்பா, நல்லதப்பா,
தாழ்வுயர்வு நீங்குமப்பா, என்று சொல்லித்
தகதகென ஆடினான், நான்சிரித்து,

ஆடுகின்றாய் உலகப்பா! யோசித்துப்பார்!
ஆர்ப்பாட்டக் காரர்இதை ஒப்பாரப்பா!
தேடப்பா ஒருவழியை என்று சொன்னேன்,
செகத்தப்பன் யோசித்துச் சித்தம்சோர்ந்தான்.
ஓடப்ப ராயிருக்கும் ஏழையப்பர்
உதையப்ப ராகிவிட்டால், ஓர்நொடிக்குள்
ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி
ஒப்பப்பர் ஆய்விடுவார் உணரப்பாநீ!

Multiplied blocks and blocks of wealth
Reached a few people
And danced like a prancing dancer!
But poor people suffer like worms.
This is the present situation, so said the common man.
Since this condition prevails
Please evolve a new arithmetic
And lease all the property calculating
Commonly and equally to one and all.

See there is no capitalist or poor
So I said. The common man jumped up
And said, your word is deep! It is true.
There is no obstacle to your word,
Thought provoking ideas, really true, also countering, good
The low and high will go away
And danced spiritedly.

I laughed and said, Oh! Common man,
You dance! You contemplate,
The agitators will not accept it. Find a way out.
The common man thought over and lost his spirit.
The poorman who is on the run,
If he becomes violent and begins to hit, at no time
The low and high men will all change
And become equal. You realise this, said I.

*Translated by N.Shankaran*

## 58. நீங்களே சொல்லுங்கள் !

---

சித்திரச் சோலைகளே! உமை நன்கு
திருத்த இப் பாரினிலே-முன்னர்
எத்தனை தோழர்கள் ரத்தம் சொரிந்தன
ரோ! உங்கள் வேரினிலே.

நித்தம் திருத்திய நேர்மையி னால்மிகு
நெல்விளை நன்னிலமே! - உனக்
கெத்தனை மாந்தர்கள் நெற்றி வியர்வை
இறைத்தனர் காண்கிலமே.

தாமரை பூத்த தடாகங்களே! உமைத்
தந்தஅக் காலத்திலே-எங்கள்
தூய்மைச் சகோதரர் தூர்ந்து மறைந்ததைச்
சொல்லவோ ஞாலத்திலே.

மாமிகு பாதைகளே! உமை இப்பெரு
வையமெ லாம்வகுத்தார் அவர்
ஆமை எனப்புலன் ஐந்தும் ஒடுங்கிட
அந்தியெலாம் உழைத்தார்.

ஆர்த்திடும் யந்திரக் கூட்டங்களே! - உங்கள்
ஆதி அந்தம் சொல்லவோ? - நீங்கள்
ஊர்த் தொழிலாளர் உழைத்த உழைப்பில்
உதித்தது மெய் அல்லவோ?

## *58. Reveal All!*

---

Oh! Groves Picturesque!
To cultivate, refine you well
On this earth, how many comrades
Shed blood at your roots?

By means of the operations, daily refined
Oh! fertile land, producing much paddy,
We do not know how many people sweated for you.

Oh! Tanks with lotus blossoms,
At the time you were constructed,
Shall we tell the world, how our brothers
Of purity, were buried in the dust.

Oh! The highways, they constructed you all over the earth,
The workers toiled all the time,.
Controlling their senses as a tortoise
Draws inside its limbs.

Oh! Noisy machines, always in motion,
Shall I tell you of your evolution?
Is it not true that you were born
Of the labour of the workers of the town?

கீர்த்தி கொள் போகப் பொருட்புவியே! உன்றன்
கீழிருக்கும் கடைக்கால் - எங்கள்
சீர்த்தொழி லாளர் உழைத்த உடம்பிற்
சிதைந்த நரம்புகள் தோல்!

நீர்கனல் நல்ல நிலம்வெளி காற்றென
நின்ற இயற்கைகளே! - உம்மைச்
சாரும் புவிப்பொருள் தந்ததெவை? தொழி
லாளர் தடக்கைகளே!

தாரணியே! தொழிலாளர் உழைப்புக்குச்
சாட்சியும் நீயன்றோ? — பசி
தீரும் என்றால் உயிர்போகும் எனச்சொல்லும்
செல்வர்கள் நீதி நன்றோ?

எலிகள் புசிக்க எலாம் கொடுத்தே சிங்க
ஏறுகள் ஏங்கிடுமோ? - இனிப்
புலிகள் நரிக்குப் புசிப்பளித்தே பெரும்
புதரினில் தூங்கிடுமோ?

கிலியை விடுத்துக் கிளர்ந்தெழுவார் இனிக்
கெஞ்சும்உத் தேசமில்லை - சொந்த
வலிவுடையார் இன்ப வாழ்வுடையார் இந்த
வார்த்தைக்கு மோசமில்லை.

Oh! The famous world of luxurious goods,
Your foundation is laid by the refined
Labour of the workers, which
Shattered their nerves and skin.

Oh! Natural phenomena of water, fire,
Good land,space and wind,
Which gave the earthly material dependent on you?
It's only the arms long of the labourers.

Oh! The world, are you not a witness to the labour of the workman?
Is the ethics of the rich good
If they say 'die' to the workman,
When they ask the rich to feed them.

Will the lions valiant pine away,
After giving the rats all to eat?
Hereafter will the tigers feed
The fox and sleep in the bush large.

They will shed fear and rise up spiritedly,
Hence no idea to beg, flatter and cringe,
They are strong personally and are happy,
There's nothing amiss about this world.

*Translated by N.Shankaran*

# 59. பலிபீடம்

மத-ஓடத்திலேறிய மாந்தரே-பலி
பீடத்திலே சாய்ந்தீரே!

பாடுபட்டீர்கள் பருக்கையில்லா தொரு
பட்டியில் மாடென வாழ்கின்றீர் - மதக்
கேடர்கள் காலினில் வீழ்கின்றீர் - ஒண்ட
வீடுமில் லாமலே தாழ்கின்றீர்! (மத)

பாதிக்குதே பசி என்றுரைத்தால், செய்த
பாபத்தைக் காரணம் காட்டுவார்-மத
வாதத்தை உம்மிடம் நீட்டுவார்-பதில்
ஓதிநின்றால் படை கூட்டுவார். (மத)

வாதனை சொல்லி வணங்கி நின்றால் தெய்வ
சோதனை என்றவர் சொல்லுவார் - பணச்
சாதனையால் உம்மை வெல்லுவார் - கெட்ட
போதனையால் தினம் கொல்லுவார். (மத)

பேதிக்கும் நோய்க்கும் பெரும்பசிக்கும் பல
பீதிக்கும் வாய்திறப் பீர்களோ! - இழி
சாதியென்றால் எதிர்ப்பீர்களோ? - செல்வர்
வீதியைத் தான் மதிப்பீர்களோ? (மத)

## *59. The Sacrificial Altar*

---

O Men who sail in the bark of religion!
Alas! thou art fallen on the sacrificial altar!

Thou toiled hard but without a morsel of food
Thou live like cattle lodged in a fold!
At the feet of men thou prostrate
Who do evils in the name of religion
And sink low without even a place of shelter, O men!

If thou complain to them of thy hunger
They'll call it the result of thy sins of the past;
And talk at length to support their stand!
If thou counter their views, they'll unite and fight!

If thou bow before and speak of your sufferings
'Divine Trial' they'll proclaim;
By power of money they'll triumph,
With evil preaching they'll kill! O men!

Can thou open thy mouth
Against Cholera, ills, hunger acute and fears countless?
Will thou protest if called low-born?
Can thou even tread the street of the wealthy? O men!

கூடித் தவிக்கும் குழந்தை மனைவியர்
கூழை நினைத்திடும் போதிலே - கோயில்
வேடிக்கையாம் தெரு மீதிலே-செல்வர்
வாடிக்கை ஏற்பீரோ காதிலே? (மத)

தொட்டிடும் வேலை தொடங்கலு மின்றியே
தொந்தி சுமக்கும்பு ரோகிதர் - இட்ட
சட்டப்படிக்கு நீரோ பதர் - அவர்
அட்டகாசத்தினுக் கேதெதிர்? (மத)

மூடத்தனத்தை முடுக்கும் மதத்தை நீர்
மூலப்படுத்தக்கை ஓங்குவீர்-பலி
பீடத்தை விட்டினி நீங்குவீர்-செல்வ
நாடு நமக்கென்று வாங்குவீர். (மத)

When thy kids and spouses in groups
Are famished and crave for gruel
There are temple festivities in the streets,
Will thou pay heed to the customary words of the wealthy?
O men!

Pot bellied prohits strut about
Without even a job to begin!
Before their law thou art mere chaff!
Then, what force can resist their atrocities? O men!

Raise thy arms to annihilate
Religion that nourishes superstition
Free yourself of the sacrificial altar
And win for thyself this prosperous land, O men!

*Translated by A. Dakshinamurthy*

## 60. சிறுத்தையே வெளியில் வா!

---

பூட்டிய இருப்புக் கூட்டின் கதவு
திறக்கப் பட்டது! சிறுத்தையே வெளியில்வா!
எலிஎன உன்னை இகழ்ந்தவர் நடுங்கப்
புலிஎனச் செயல்செய்யப் புறப்படு வெளியில்!
நம்பினை பகலினை நள்ளிருள் என்றே
சிம்புட் பறவையே சிறகை விரி,எழு!
சிங்க இளைஞனே திருப்புமுகம்! திறவிழி!
இங்குன் நாட்டுக் கிழிகழுதை ஆட்சியா?
கைவிரித் துவந்த கயவர் நம்மிடைப்
பொய்வி ரித்துநம் புலன்கள் மறைத்துத்
தமிழுக்கு விலங்கிட்டுத் தாயகம் பற்றி
நமக்குள உரிமை தமக்கென் பார்எனில்,
வழிவழி வந்தஉன் மறத்தனம் எங்கே?
மொழிப்பற் றெங்கே? விழிப்புற் றெழுக!
இகழ்ச்சி நேர்ந்தால் இறப்போம் என்றும்
புகழ்ச்சி யேஎம் பூணாம் என்றும்
வையம் ஆண்ட வண்டமிழ் மரபே
கையி ருப்பைக் காட்ட எழுந்திரு!

## *60. Come out O Panther!*

---

The door of the iron cage locked
Is opened! Out you come O Panther!
Like tiger set out to act so that
They that scorned and called you mouse
May tremble!
You took the day for darkened night
Ah *cimpul* bird, outstretch your wings, arise!
Leonine youth, you turn your face! Open your eyes!
Should wretched ass this land of yours rule?
If empty - handed men so base
That came amidst us, spread the lie
And muffled the senses and bound in chains
The Tamil tongue, seized our land
And claimed our rights to be all theirs
What of the traditional valour of yours?
What of the love for your tongue? Awake, arise!
O the famed and rich tradition
Of Tamil that ruled the world,
That proudly perished at a slight
And wore the ornament of praise,
Arise to show what you have in you!

குறிக்கும் உன் இளைஞர் கூட்டம் எங்கே?
மறிக்கொணாக் கடல்போல் மாப்பகை மேல்விடு!
நன்மொழிக்கு விடுதலை நல்கிட எழுந்திரு!
பொன்மொ ழிக்குநீ புதுமை ஏற்றுவாய்!
மக்களை ஒன்றுசேர்! வாழ்வை யுயர்த்துக!
கைக்குள திறமை காட்ட எழுந்திரு!
வாழ்க இளைஞனே, வாழ்க நின்கூட்டம்!
வாழ்க திராவிட நாடு!
வாழ்க நின்வையத்து மாப்புகழ் நன்றே!

Where is the youthful band that distingushes it?
Set 'em upon the mighty foe
Like sea that can't be shored at all!
To set fair language free, arise!
May you the golden tongue make new!
Rally the people! Let you exalt life!
To show the prowess of the arm, arise!
Hail youth, hail your band
Hail the Dravidian land!
Hail so well your great fame in the world!

*Translated by Nirmal Selvamani*

# 61. தொழிலாளர் விண்ணப்பம்

காடு களைந்தோம்-நல்ல
கழனி திருத்தியும் உழவு புரிந்தும்
நாடுகள் செய்தோம்-அங்கு
நாற்றிசை வீதிகள் தோற்றவும் செய்தோம்
வீடுகள் கண்டோம்-அங்கு
வேண்டிய பண்டங்கள் ஈண்டிடச் செய்தோம்
பாடுகள் பட்டோம் - புவி
பதமுறவே நாங்கள் நிதமும் உழைத்தோம்.

மலையைப் பிளந்தோம் - புவி
வாழவென் றேகடல் ஆழமும் தூர்த்தோம்
அலைகடல்மீதில் - பல்
லாயிரங் கப்பல்கள் போய்வரச் செய்தோம்
பல தொல்லையுற்றோம் - யாம்
பாதாளம் சென்று பசும்பொன் எடுத்தோம்
உலையில் இரும்பை - யாம்
உருக்கிப்பல் யந்திரம் பெருக்கியுந் தந்தோம்.

## *61. Appeal of the Labourers*

---

We weeded thick growths -
    set right and ploughed the fields!
Developed cities -
    paved streets on directions four!
Constructed tenements -
    caused them to be filled with necessities all!
Toiled a lot -
    day in and day out for world's betterment!

Broke the hillocks-
    filled up the deep ocean for world's welfare
Enabled ships in thousands -
    to sail on the wavy oceans
Suffered a lot and -
    We went to abyssmal depths and dug out pure gold
Melted iron in the forge -
    to provide many a machine.

ஆடைகள் நெய்தோம் - பெரும்
ஆற்றைவ ளைத்துநெல்நாற்றுக்கள் நட்டோம்;
கூடைகலங்கள் - முதல்
கோபுரம் நற்சுதை வேலைகள் செய்தோம்.
கோடையைக் காக்க - யாம்
குடையளித் தோம்நல்ல நடையன்கள் செய்தோம்.
தேடிய பண்டம் - இந்தச்
செகத்தில் நிறைந்திட முகத்தெதிர் வைத்தோம்.

வாழ்வுக்கொவ்வாத-இந்த
வையத்தை இந்நிலை எய்தப் புரிந்தோம்.
ஆழ்கடல், காடு, - மலை
அத்தனை யிற்பல சத்தை யெடுத்தோம்.
ஈழை, அசுத்தம்-குப்பை
இலை என்னவே எங்கள் தலையிற் சுமந்தோம்.
சூழக்கிடந்தோம் - புவித்
தொழிலாளராம் எங்கள் நிலைமையைக் கேளீர்!

கந்தை யணிந்தோம்-இரு
கையை விரித்தெங்கள் மெய்யினைப் போர்த்தோம்.
மொந்தையிற் கூழைப்-பலர்
மொய்த்துக் குடித்துப் பசித்துக் கிடந்தோம்.
சந்தையில் மாடாய் - யாம்
சந்ததம் தங்கிட வீடுமில்லாமல்
சிந்தை மெலிந்தோம் - எங்கள்
சேவைக் கெலாம் இதுசெய் நன்றிதானோ?

We Wove in plenty the garments -
    harnessed water from rivers to cultivate paddy!
From making utensils and baskets -
    to plastering of temple towers we did
To avoid the scorching summer -
    made umbrellas in plenty! good footwear too!
We displayed before the world
    all products sought after.

The world that was of little use-
    We made of attain this state!
Deep ocean, wild forest and steep hillocks-
    We harnessed them to the core.
Waste, dirt and garbage-
    We carried on our head to wipe them out
We were surrounded by these
    Labourers of the world! Heed to our plight!

We wore rags -
    covered our body with our naked arms
Gruel in a flagon-
    together we drank but stayed hungry
As cattle in a fair-
    always without shelter!
Agonised we were-
    Is this the gratitude for all our service?

மதத்தின் தலைவீர்! - இந்த
மண்ணை வளைத்துள்ள அண்ணாத்தைமாரே!
குதர்க்கம் விளைத்தே - பெருங்
கொள்ளை யடித்திட்ட கோடீ சுரர்காள்!
வதக்கிப் பிழிந்தே - சொத்தை
வடிகட்டி எம்மைத் துடிக்க விட்டீரே!
நிதியின் பெருக்கம் - விளை
நிலமுற்றும் உங்கள் வசம்பண்ணி விட்டீர்.

செப்புதல் கேட்பீர்! இந்தச்
செகத்தொழி லாளர்கள் மிகப்பலர் ஆதலின்,
சுப்பல்களாக-இனித்
தொழும்பர் களாக மதித்திட வேண்டாம்!
இப்பொழுதே நீர் - பொது
இன்பம் விளைத்திட உங்களின் சொத்தை
ஒப்படைப்பீரே - எங்கள்
உடலில் இரத்தம் கொதிப்பேறுமுன்பே
(ஒப்படைப்பீரே!)

Heads of religions!
O, brethren who have grabbed the lands!
Millionaires! who swindled wealth-
by unfair means!
You ground and squeezed us-
deprived of our property and shook us!
And amassed wealth and land arable-
acquired as of your own!

Listen to what we say -
as the labour-force is vast
Let them not be considered-
as slaves and vassals
Now itself for a common weal-
hand-over your assets!
Hand them over soon-
before our blood boils!

*Translated by Palany Arangasamy*

# 62. சமத்துவப் பாட்டு

புவியிற் சமூகம் இன்பம்
பூணல் சமத்துவத்தால்
கவிழ்தல் பேதத்தாலடி - சகியே
கவிழ்தல் பேதத்தாலடி!

புவிவேகம் கொண்டு செல்லும்
போதில்உடன் செல்லாதார்!
அவிவேகம் கொண்டாரடி - சகியே
அவிவேகம் கொண்டாரடி!

தாழ்வென்றும் உயர்வென்றும்
சமூகத்திற் பேதங்கொண்டால்
வாழ்வின்பம் உண்டாகுமோ? - சகியே
வாழ்வின்பம் உண்டாகுமோ?

தாழ்ந்தவர் என்றுநீக்கிச்
சமுதாயச் சீர்தேடி
வாழ்ந்தது காணேனடி-சகியே
வாழ்ந்தது காணேனடி!

பிறப்பி லுயர்வுதாழ்வு
பேசும் சமூகம்மண்ணில்
சிறக்குமோ சொல்வாயடி - சகியே
சிறக்குமோ சொல்வாயடி?

பிறந்த முப்பது கோடிப்
பேரில் ஐங்கோடி மக்கள்
இறந்தாரோ சொல்வாயடி - சகியே
இறந்தாரோ சொல்வாயடி?

## *62. Songs of Equality*

---

Society attains bliss on the earth by equality
And slips down by inequality - O, Dear!
And slips down by inequality.

Those who accompany not the speed of earth -
They do get retarded - O, Dear!
They do get retarded.

Should there be the high and the low in society
Can there be happiness in life? - O, Dear!
Can there be happiness in life?

Ignoring some as the low we can't aspire for social welfare
We can't even live - O, Dear!
We can't even live.

A society that speaks of differences by birth -
Will it prosper on earth? Tell me - O, Dear!
Will it prosper on earth? Tell me.

Five crores of the Thirty crores -
Are they dead? Tell me - O, Dear!
Are they dead? Tell me.

இதந்தரும் சமநோக்கம்
 இல்லா நிலத்தில் நல்ல
சுதந்தரம் உண்டாகுமோ? - சகியே
 சுதந்தரம் உண்டாகுமோ?

பதம்பெறப் பணிசெய்வோர்
 பகைகொண்டார் எனில்எந்த
விதம் அஃது கொள்வாரடி - சகியே
 விதம்அஃது கொள்வாரடி?

சோதர பாவம் நம்மில்
 தோன்றாவிடில் தேசத்தில்
தீதினி நீங்காதடி - சகியே
 தீதினி நீங்காதடி!

பேதம் பாராட்டி வந்தோம்
 பிழைசெய்தோம் பல்லாண்டாக
மீதம் உயிர்தானுண்டு-சகியே
 மீதம் உயிர்தானுண்டு!

அற்பத் தீண்டாதார் என்னும்
 அவரும் பிறரும் ஓர்தாய்
கர்ப்பத்தில் வந்தாரன்றோ - சகியே
 கர்ப்பத்தில் வந்தாரன்றோ?

பொற்புடை முல்லைக்கொத்தில்
 புளியம்பூ பூத்த தென்றால்
சொற்படி யார்நம்புவார் - சகியே
 சொற்படி யார்நம்புவார்?

தீண்டும் மக்களின் அன்னை
 தீண்டாரையும் பெற்றாளோ?
ஈண்டிதை யார்நம்புவார் - சகியே
 ஈண்டிதை யார்நம்புவார்?

In the land without the comforting equality
Can there be freedom? - O, Dear!
Can there be freedom?

When the working people revolt against
In what form would it outburst? - O, Dear!
In what form would it outburst?

If fraternity arises, not among us
Evil will never leave the country - O, Dear!
Evil will never leave the country.

We cherished inequality and erred so long -
Life alone remains yet - O, Dear!
Life alone remains yet.

The poor untouchables and the other previleged
Are born in a single Mother's womb - O, Dear!
Are born in a single Mother's womb.

The tamarind flower blossomed in the graceful *mullai* bunch !
Who can believe this saying? - O, Dear!
Who can believe this saying?

Mother of the touchables gave birth to the untouchables!
Who will believe this here? - O, Dear!
Who will believe this here?

தீண்டாமை ஒப்புகின்றார்
தீண்டாரிடம் உதவி
வேண்டாமல் இல்லையடி-சகியே
வேண்டாமல் இல்லையடி!

அடிமை கொடியதென்போர்
அவர்சோத ரர்க்கிழைக்கும்
மிடிமையை எண்ணாரடி-சகியே!
மிடிமையை எண்ணாரடி!

கொடியோர் பஞ்சமர் என்று
கூடப் பிறந்தோர்க்கிவர்
சுடும்பேர் வைத்திட்டாரடி-சகியே
சுடும்பேர் வைத்திட்டாரடி!

தீண்டாதார் பழங்கீர்த்தி
தெரிந்தால் தீண்டாமைப்பட்டம்
வேண்டாதார் இல்லையடி-சகியே
வேண்டாதார் இல்லையடி!

ஆண்டார் தமிழர் இந்நா
டதன்பின் ஆரியர் என்போர்
ஈண்டுக் குடியேறினார்-சகியே
ஈண்டுக் குடியேறினார்!

வெள்ளை யுடம்புகாட்டி
வெறும்வாக்கு நயம்காட்டிக்
கள்ளங்கள் செய்தாரடி-சகியே
கள்ளங்கள் செய்தாரடி!

பிள்ளைக்குக் கனிதந்து
பின்காது குத்தல்போல்தம்
கொள்கை பரவச் செய்தார்-சகியே
கொள்கை பரவச் செய்தார்!

They adopt untouchability, and the help of the untouchables,
They are not devoid of - O, Dear!
They are not devoid of.

Those who pronounce that slavery is treacherous, treat their brothers cruelly,
Yet they never think of it - O, Dear!
Yet they never think of it.

They call their brothers wicked and pauper,
Thus they have given them wounding names - O, Dear!
Thus they have given them wounding names.

When the past glory of the untouchables becomes obvious
None shall deny that title - O, Dear!
None shall deny that title.

The Tamils ruled over the country; then the ones called Aryans,
Came and inhabited here - O, Dear!
Came and inhabited here.

Exposing fair skinned bodies and exhibiting artful deception in speech,
They committed acts of treason - O, Dear!
They committed acts of treason.

Like presenting fruits to a child and then pricking its ears-
They spread their own customs - O, Dear!
They spread their own customs.

கொல்லா விரதம் கொண்டோர்
கொலைசெய்யும் ஆரியர்தம்
சொல்லுக் கிசைந்தாரடி-சகியே
சொல்லுக் கிசைந்தாரடி!

நல்லதமிழர் சற்றும்
நலமற்ற ஆரியர்தம்
பொல்லாச்சொல் ஏற்றாரடி-சகியே
பொல்லாச்சொல் ஏற்றாரடி!

ஏச்சும் எண்ணார் மானம்
இல்லாத ஆரியர்
மிலேச்சர்என் றெண்ணப்பட்டார்-சகியே
மிலேச்சர்என் றெண்ணப்பட்டார்!

வாய்ச்சாலத் தால்கெட்ட
வஞ்சகத்தால் கலகத்தால்
ஏய்ச்சாள் வந்தாரடி-சகியே
ஏய்ச்சாள வந்தாரடி!

மன்னர்க் கிடையில் சண்டை
வளர்த்தார் தம் வசமானால்
பொன்னாடு சேர்வார் என்றார்-சகியே
பொன்னாடு சேர்வார் என்றார்!

பொன்னாட்டு மாதர் போலும்
பூலோகத் தில்லை யென்று
மன்னர்பால் பொய்கூறினார்-சகியே
மன்னர்பால் பொய்கூறினார்!

வான்மறை எனத்தங்கள்
வழக்கம் குறித்தநூலைத்
தேன்மழை என்றாரடி-சகியே
தேன்மழை என்றாரடி!

Those who lived with the virtue of non-violence
Accepted the path of Aryan violence - O, Dear!
Accepted the path of Aryan violence.

The cultured Tamils heard the ill-natured Aryans
And their venomous words they accepted - O, Dear!
And their venomous words they accepted.

Aryans thought not of rebuke nor had they prestige.
They were named as barbarians - O, Dear!
They were named as barbarians.

By cunning words, treason and rebellion,
They came to deceive and rule - O, Dear!
They came to deceive and rule.

They grew quarrels among Kings and if they believed,
They assured seats in Heaven - O, Dear!
They assured seats in Heaven.

There are none in the earth like the heavenly women -
Thus they lied to the Kings - O, Dear!
Thus they lied to the Kings.

They called their book of customs as spiritual scriptures-
And described them as rain of honey - O, Dear!
And described them as rain of honey.

ஏன்மறை எங்கட்"கென்றே
இசைத்தால் ஆரியர் நீங்கள்
வான்புகத் தானென்றனர்-சகியே
வான்புகத் தானென்றனர்!

மேலேழு லோகம் என்றார்
கீழேழு லோகம் என்றார்
நூலெல்லாம் பொய்கூறினார்-சகியே
நூலெல்லாம் பொய்கூறினார்!

மேலும் தமை நிந்திப்போர்
மிகுகஷ்டம் அடைவார்கள்
தோலோதோல் கூடாதென்றார்-சகியே
தோலோதோல் கூடாதென்றார்!

சுவர்க்கத்தில் தேவர் என்போர்
சுகமாய் இருப்பதுண்டாம்
அவர்க்குத்தாம் சொந்தம்என்றார்-சகியே
அவர்க்குத்தாம் சொந்தம்என்றார்!

துவக்கத்தில் ஆரியரைத்
தொழுதார் இறந்தபின்பு
சுவர்க்கஞ்செல் வார்என்றனர்-சகியே
சுவர்க்கஞ்செல் வார்என்றனர்!

தம்சிறு வேதம்ஒப்பாத்
தமிழரை ஆரியர்கள்
நஞ்சென்று கொண்டாரடி-சகியே
நஞ்சென்று கொண்டாரடி!

வெஞ்சிறு வேதம்ஒப்பா
வீரரை ஆரியர்கள்
வஞ்சித்துக் கொன்றாரடி-சகியே
வஞ்சித்துக் கொன்றாரடி!

When questioned the Aryans, 'Why scriptures for us?'
'Only to enter into Heaven', they said - O, Dear!
'Only to enter into Heaven', they said.

Seven worlds above and seven worlds below -
Thus they lied throughout their scriptures - O, Dear!
Thus they lied throghout their scriptures.

Those who rebuke them will experience excess of suffering
Their skin should not be touched by that of others-
O, Dear!
Their skin should not be touched by that of others.

In the Heaven the Devas lived in bliss.
They were related to the Devas, they said - O, Dear!
They were related to the Devas, they said.

In the beginning if they pray the Aryans, after death
They will enter into Heaven, they said - O, Dear!
They will enter into Heaven, they said.

Those Tamils accepted not the little Aryan Vedas
Were considered as poison - O, Dear!
Were considered as poison.

Those heroes who accepted not the cruel little Vedas -
The Aryans killed by treason - O, Dear!
The Aryans killed by treason.

அழிவேதம் ஒப்பாதாரை
அரக்கரென் றேசொலிப்
பழிபோட்டுத் தலைவாங்கினார்-சகியே
பழிபோட்டுத் தலைவாங்கினார்!

பழிபேதம் ஒப்போம்என்ற
பண்டைத் தமிழர்தம்மைக்
கழுவேற்றிக் கொன்றாரடி-சகியே
கழுவேற்றிக் கொன்றாரடி!

ஆரியர்தமை ஒப்பா
ஆதித் திராவிடரைச்
சேரியில் வைத்தாரடி-சகியே
சேரியில் வைத்தாரடி!

சேரிப் பறையர்என்றும்
தீண்டாதார் என்றும்சொல்லும்
வீரர்நம் உற்றாரடி-சகியே
வீரர்நம் உற்றாரடி!

வெஞ்சமர் வீரர்தம்மை
வெல்லாமற் புறந்தள்ளப்
பஞ்சமர் என்றாரடி-சகியே
பஞ்சமர் என்றாரடி!

Those who accepted not the extinguishing Vedas were
labelled as barbarians.
And were revenged by execution - O, Dear!
And were revenged by execution.

The ancient Tamils who accepted not the mean Vedas
Were crucified and killed - O, Dear!
Were crucified and killed.

The Adi Dravidians who accepted not the Aryans
Were pushed into the slums - O, Dear!
Were pushed into the slums.

The heroes branded as slum *parayars* and untouchables -
They are our relatives - O, Dear!
They are relatives.

To dispose the gallant heroes without defeating them-
They named them as paupers - O, Dear!
They named them as paupers.

*Translated by C.Kanagasabapathy*

## 63. கூவாய் கருங்குயிலே !

எங்கள் திருநாட்டில் எங்கள்நல் ஆட்சியே
பொங்கிடுக வாய்மை பொலிந்திடுக என்றேநீ
செங்கதிர் சீர்க்கையால் பொன்னள்ளிப் பூசிய
கங்குல் நிகர்த்த கருங்குயிலே கூவாயே.

கன்னடம்தெ லுங்குமலை யாளம் களிதுளுவம்
முன்னடைந்தும் மூவாது மூள்பகைக்கும் சோராது
மன்னும் தமிழ்தான்இவ் வையத்தை யாள்களனக்
கன்னற் குரலெடுத்துக் கூவாய் கருங்குயிலே.

வராதெனச் சொன்னாரும் வருந்தத்தன் ஆட்சி
இராத இடமில்லை என்றநிலை நாட்டத்
திராவிட நாடு சிறைநீங்க என்று
குரலே முரசாகக் கூவாய் கருங்குயிலே.

உண்ணல் உடுத்தல் உயிர்த்தல்எனச் செந்தமிழை
நண்ணலும் ஆம்என்று நாட்டுக; வேறுமொழி
எண்ணல் நிறுவல் இலாதுகல்வி கட்டாயம்
பண்ணல் பயன்என்று கூவாய் கருங்குயிலே.

## *63. Proclaim! Ye Nightingale Dark!*

---

Let our own righteous rule flourish and truth suffuse
In our lofty land. So Ye proclaim,
O Nightingale Dark! Dark as the sable night,
And gilded gold by the red sun's radiant light.

Let everlasting Tamil alone rule the world,
Undeterred by the advancing Kannada, Malayalam,
Telugu and proud Tulu,
And undaunted by looming hostilities.
O Nightingale Dark! In sweet voice thus pronounce.

Let *Dravid* be freed,
And self-rule everywhere be established,
To the regret of those who did not expect it.
O Nightingale Dark! Thus thy voice as drum announce.

Establish love of Tamil as akin to eating, clothing and
living
It profits perforce to learn in Tamil,
Without thought and establishment of another language.
O Nightingale Dark! So ye declare.

செந்தமிழைச் செந்தமிழ் நாட்டைச் சிறைமீட்க
நந்தமிழர் உள்ளத்தில், வையம் நடுநடுங்கும்
வெந்தணல் ஒன்று விரைந்து வளர்ந்ததென்று
குந்திக் குரலெடுத்துக் கூவாய் கருங்குயிலே.

இளைஞர் துடிக்கின்றார் தமிழின்நிலை எண்ணிக்
கிளைஞர் அடைகின்ற கேடுபொறார் இங்கு
விளையாட வேண்டாமே ஆளவந்தார்! வாழ்வின்
களைநீக் குகஎன்று கூவாய் கருங்குயிலே.

பாலோடு நேர்தமிழும் பைந்தமிழ் மக்களும்
ஆலோடு வேர்என் றறிந்திருந்தும் ஆளவந்தார்
மேலோடு பேசி விடுவரேல் அவ்வாட்சி
சாலோடு நீர்என்று சாற்றாய் கருங்குயிலே.

To free Tamil and beautiful Tamil land,
A fierce fire grows fast in the hearts of Tamils,
For the world to tremble!
O Nightingale Dark! Thus thy clarion call announce.

The youth are agitated. Comrades' distress
Over the state of Tamil they can not brook
Let not the rulers dabble. Let life's ills be removed,
O Nightingale Dark! So ye thus call.

As one are the banian tree and its roots, so are
Nacterine Tamil and Tamils. Knowing this,
If the rulers speak lightly, their rule is like
Water lost in a furrow. O Nightingale Dark! So ye proclaim.

*Translated by R. Ganapathy*

# 64. உலகம் உன்னுடையது

---

பள்ளம் பறிப்பாய், பாதாளத்தின்
அடிப்புறம் நோக்கி அழுந்துக! அழுந்துக!
பள்ளந்தனில்விழும் பிள்ளைப் பூச்சியே,
தலையைத்தாழ்த்து! முகத்தைத்தாழ்த்து!
தோளையும் உதட்டையும் தொங்கவை! ஈன
உளத்தை, உடலை உயிரைச் சுருக்கு!
நக்கிக்குடி! அதை நல்லதென்றுசொல்!
தாழ்ந்துதாழ்ந்து தாழ்ந்த நாயினும்
தாழ்ந்துபோ! குனிந்து தரையைக்கௌவி
ஆமையைப் போலே அடங்கி ஒடுங்கு!
பொட்டுப் பூச்சியே, புன்மைத் தேரையே
அழு! இளி! அஞ்சு! குனி! பிதற்று!
கன்னங்கருத்த இருட்டின் கறையே,
தொங்கும் நரம்பின் தூளே, இதைக்கேள்;
மனிதரில் நீயுமோர் மனிதன்! மண்ணன்று!
இமைதிற! எழுந்து நன்றாய் எண்ணுவாய்!
தோளை உயர்த்து, சுடர்முகம் தூக்கு!
மீசையை முறுக்கி மேலே ஏற்று!
விழித்தவிழியில் மேதினிக் கொளிசெய்!
நகைப்பை முழக்கு! நடத்து லோகத்தை!

## *64. This World is Yours*

---

Ye, digging out trench!
Go sinking lower and lower until thou reach
The lowest of the nether worlds!
O Gryllus falling into ditch!
Bow thy head down! Turn down thy face!
Keep hanging low thy soulders and lips!
Shrink thy weak heart, body and soul!
Be a lapper and declare it an honour!
Sink lower and lower,
Lower than the base dog!
Bend low, grip the ground with thy lips!
Be subdued and withdraw like a tortoise!
O spider! O tiny toad!
Lament! Expose thy teeth! Dread! Bend! Babble!
O the stain on the densely black darkness!
O the dust of the hanging nerve! Listen to this!
Thou art one among the humans, not inanimate soil!
Open thy eyes! Rise up and think well!
Raise thy shoulders! Lift up thy lustrous face!
Twirl thy moustache and push it upward!
Give light to the world with a mere glance!
Laugh thunder-like and lead the world!

உன்வீடு-உனது பக்கதது வீட்டின்
இடையில் வைத்த சுவரை இடித்து,
வீதிகள் இடையில் திரையை விலக்கி,
நாடொடு நாட்டை இணைத்து, மேலே
ஏறு! வானை இடிக்கும் மலைமேல்
ஏறு விடாமல்! ஏறு மேன்மேல்!
ஏறி நின்று பாரடா எங்கும்;
எங்கும் பாரடா இப்புவி மக்களைப்,
பாரடா உனது மானிடப் பரப்பை!
பாரடா உன்னுடன் பிறந்த பட்டாளம்!
'என் குலம்' என்றுனைத் தன்னிடம் ஒட்டிய
மக்கட் பெருங்கடல் பார்த்து மகிழ்ச்சிகொள்!
அறிவை விரிவுசெய்! அகண்டமாக்கு!
விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை!
அணைந்துகொள்! உன்னைச் சங்கமமாக்கு !
மானிட சமுத்திரம் நானென்று கூவு!
பிரிவிலை எங்கும் பேதமில்லை
உலகம் உண்ணஉண்! உடுத்த உடுப்பாய்!
புகல்வேன்; உடைமை மக்களுக்குப் பொது!
புவியை நடத்து, பொதுவில் நடத்து!
வானைப் போல மக்களைத் தாவும்
வெள்ள அன்பால் இதனைக்
குள்ள மனிதர்க்கும் கூறடா தோழனே!

Demolish the wall between thy home and that of your
neighbour!
Remove the curtains amidst the streets,
Unite the nations together and move forward!
Ascend the mountain sky-scrapping without break!
Ascend higher and higher!
Climb high and cast thy eyes in all directions thence!
Behold everywhere the people of this earth!
Behold the vastness of thy kind!
Behold the battalion of thy brothers!
Feel elated on the sight of the human ocean
That declares thee as its kin very close!
Expand thy wisdom! Let it embrace the entire world!
Swallow the human kind with thy broad vision!
Embrace and mingle thyself inseparable with it!
No divisions! No distinctions anywhere!
Eat when the world eats and dress when it dresses itself!
Wealth is common to all I declare!
Lead the world, lead in common! O Comrade!
Through thy flood of love
Leaping on men like the heavens
Take this message even to the narrow minded!

*Translated by A. Dakshinamurthy*

## 65. மானிட சக்தி

---

மானிடத் தன்மையைக்கொண்டு-பலர்
வையத்தை ஆள்வது நாம்கண்ட துண்டு
மானிடத் தன்மையை நம்பி-அதன்
வன்மையினாற்புவி வாழ்வுகொள் தம்பி!
'மானிடம்' என்றொரு வாளும்-அதை
வசத்தில் அடைந்திட்ட உன்இரு தோளும்
வானும் வசப்பட வைக்கும்-இதில்
வைத்திடும் நம்பிக்கை, வாழ்வைப் பெருக்கும். (மானிட)

மானிடன் வாழ்ந்த வரைக்கும்-இந்த
வையத்திலே அவன் செய்தவரைக்கும்
மானிடத் தன்மைக்கு வேறாய்-ஒரு
வல்லமை கேட்டிருந்தால் அதைக் கூறாய் !
மானிட மென்பது புல்லோ?-அன்றி
மரக்கட்டையைக் குறித் திடவந்த சொல்லோ?
கானிடை வாழ்ந்ததும் உண்டு-பின்பு
கடலை வசப்படச் செய்ததும் அதுதான்! (மானிட)

மானிடம் போற்ற மறுக்கும்-ஒரு
மானிடம் தன்னைத்தன் உயிரும் வெறுக்கும்;
மானிடம் என்பது குன்று-தனில்
வாய்ந்த சமத்துவ உச்சியில் நின்று
மானிடருக் கினி தாக-இங்கு
வாய்த்த பகுத்தறிவாம் விழி யாலே
வான்திசை எங்கணும் நீ பார்!-வாழ்வின்
வல்லமை 'மானிடத் தன்மை' என்றேதேர். (மானிட)

## *65. Power of Mankind*

---

We have witnessed, brethren, so many
Reign over this round world
With the strength of human kind.
Plant your faith in humanness,
And with its hard potential
Hold in your grip the life of the world.
The sword of human kind
And your arms that weild that sword
Will bring even heaven within your reach
Root your faith in this human power
That well quicken life into fertile growth.

Is humanity just a blade of grass?
Or a mere word that signifies a dead and insensate wood?
In the long annuls of human life and of human acts
Have you ever heard of a force greater than that of human kind?
Humanity might have sojourned once in the primitive wild;
But mankind has ever since
Tamed the wild billowing seas into its grasp and management.
The flame of being within one
Will abhor him that fails to treasure
And to act on the virtue of human kind.
Humanity is a majestic hill:
From its broad pinacle of equality
View the whole space of earth and heaven
with discriminating rational eyes;
And grasp this wisdom that humanity
Is life's essential strength and power.

*Translated by M.Balasubramanian*

# 66. குமரகுருபரன்

---

**குருபரனுக் கருள்புரிந்தான்**

கயிலாச புரத்தில் நல்ல
சண்முகக் கவிரா யர்க்கும்,
மயில்நிகர் சிவகா மிக்கும்
வாயிலாப் பிள்ளை யாக
அயலவர் நகைக்கும் வண்ணம்
குருபரன் அவத ரித்தான்.
துயரினால் செந்தூர் எய்திக்
கந்தனைத் துதித்தார் பெற்றோர்;

நாற்பது நாளில் வாக்கு
நல்காயேல் எங்கள் ஆவி
தோற்பது திண்ண மென்று
சொல்லியங் கிருக்கும் போது,
வேற்படை முருகப் பிள்ளை
குருபரன் தூங்கும் வேளை,
சாற்றும்அவ் வூமை நாவிற்
சடாட்சரம் அருளிச் சென்றான்.

# 66. Kumara Guruparar

---

### Guruparan was blessed

Guruparan was born
To Shunmugam, the bard
And Sivakami, graceful as a peacock,
As a dumb child
To be mocked at by strangers
A pilgrimage to Tiruchendur
The parents made and prayed Lord Muruga.

Unless signalling benevolently
In about two scores of days,
They remained therein with a vow rigid
Swearing they would give up their lives;
Lord Muruga, armed with bow as a child
Scribbled the *Sadakshara mantra*
On the tongue of that mute Guruparan
When he was in a slumber deep!

## ஊமையின் உயர் கவிதை

அம்மையே அப்பா என்று
பெற்றோரை அவன்ௗ முப்பிச்
செம்மையே நடந்த தெல்லாம்
தெரிவித்தான்! சிந்தை நைந்து
கைம்மையாய் வாழ்வாள் நல்ல
கணவனைப் பெற்ற தைப்போல்,
நம்மையே மகிழ வைத்தான்
நடமாடும் மயிலோன் என்றார்!

மைந்தனாம் குருப ரன்தான்
மாலவன் மருகன் வாழும்
செந்தூரில் விசுவ ரூப
தரிசனம் செய்வா னாகிக்,
கந்தரின் கலிவெண் பாவாம்
கனிச்சாறு பொழியக் கேட்ட
அந்தஊர் மக்கள் யாரும்
அதிசயக் கடலில் வீழ்ந்தார்!

## ஞானகுருவை நாடிச் சென்றான்

ஞானசற் குருவை நாடி
நற்கதி பெறுவ தென்று
தானினைந் தேதன் தந்தை
தாயர்பால் விடையும் கேட்டான்
ஆனபெற் றோர்வ ருந்த
அவர்துயர் ஆற்றிச் சென்றான்,
கால்நிழல் போற்கு மார
கவியெனும் தம்பி யோடே.

**Marvellous poem of the mute**

Waking up his parents,
Calling them as Divine Mother and Father
The blessed boy spoke of what had happened;
They said; "We are happy
Even like the miserable widow
Who has gained a worthy husband
This is the grace
Of the God of Peacock!"

Gurupara, the son divine
Had a darshan unique of Tirumal's nephew
On the dewy morn at Thiruchendur
And hymned the *Kalivenba* on Kandan, the Lord
The sugary juice of which heard
A lot of persons in that place
Felt marvelled at his oceanic wisdom.

**In search of a spiritual mentor**

To go in search of a spiritual mentor
To secure a bliss ultimate
He sought his parents to let him go;
Miscerable they were, but he consoled them
And gone off in his pursuit
With a brother called Kumarakavi
Who constantly accompanied him.

மீனாக்ஷி யம்மன் பிள்ளைத்
தமிழ்பாட விரைந்து, தம்பி
தானதைக் குறிப் பெடுக்கத்
தமிழ்வளர் மதுரை நாடிப்
போனார்கள்; போகும் போது
திருமலை நாய்க்க மன்னன்
ஆனைகொண் டெதிரில் வந்தே
குருபரன் அடியில் வீழ்ந்தான்.

## யானைமேல் பானைத் தேன்

என்னையும் பொருளாய் எண்ணி
எழுதரும் அங்க யற்கண்
அன்னை,என் கனவில் தோன்றி,
அடிகள்நும் வரவும், நீவிர்
சொன்னநற் றமிழும் பற்றிச்
சொன்னதால் வந்தேன். யானை
தன்னில்நீர் எழுந் தருள்க
தமிழுடன்! என்றான் மன்னன்.

தெய்விகப் பாடல் தன்னைத்
திருவரங் கேற்று தற்கே,
எய்துமா றனைத்தும் மன்னன்
ஏற்பாடு செய்தான். தேவர்
துய்யநற் றமிழ்ச்சா ராயம்
துய்த்திடக் காத்தி ருந்தார்.
கையில்வாத் தியங்கள் ஏந்திக்
கந்தர்வர் கண்ணாய் நின்றார்.

To sing a hymn, *MeenakshiPillait-tamil*
And his brother to take it down -
They both hurried to Madurai, the Tamil City.
Came in front the ruler of Madurai
Thirumalai Naicker with an elephant caparisoned
Fell down at the benign feet of Guruparar

**Delectable Poems on the Procession**

"Considering me, the humble self
Appeared Goddess Angayarkanni in dream
Envisioned me of your historic arrival
Also of your celestial hymnody
Hence came I, to extend a welcome;
Bless me by mounting on this elephant
With your hymnal Tamil" said so the ruler.

Made also what all he could
To convene the assemblage of scholars
To obtain their approval for the work spiritual;
Lay in wait the scholars for relishing the
Tamil manna
Celestial beings too with instruments in hand
Stood on That day in rapt attention.

## அவையிடைச் சிவை

அரங்கிடை அரசன் ஓர்பால்,
அறிஞர்கள் ஓர்பால், கேட்கத்
தெரிந்தவர், கலையில் வல்லோர்
செந்தமிழ் அன்பர் ஓர்பால்
இருந்தனர்! அரி யணைமேல்
இருந்தனன் குரு பரன்தான்!
வரும் சனம் தமிழருந்த
வட்டிக்க ஆரம் பித்தான்!

அப்போது கூட்டத் தின்கண்
அர்ச்சகன் பெற்ற பெண்ணாள்,
சிப்பத்தைப் பிரித் தெடுத்த
சீனத்துப் பொம்மை போன்றாள்,
ஓப்பியே ஓடி வந்தாள்
காற்சிலம் பொலிக்க! மன்னன்
கைப்பற்றி மடியில் வைத்தான்
கவிதையில் அவாவை வைத்தான்.

## தெய்வப் பாடல்

குமரகு ருபரன் பாடல்
கூறிப்பின் பொருளும் கூறி,
அமரரா தியர்வி ருப்பம்
ஆம்படி செய்தான்; மற்றோர்
அமுதப்பாட் டாரம் பித்தான்.
அப்பாட்டுக் கிப்பால் எங்கும்
சமான மொன்றிருந்த தில்லை
சாற்றுவோம் அதனைக் கேட்பீர்:.

## Civai in the Assembly

Seated the ruler on one side
Scholars on the other in that Assembly
Also the listeners, connoisseur of Arts
Lovers of Tamil, all seated therein!
Guruparan on a pedestal on the dais
Began distilling the juicy Tamil
For the gaiety of those who there arrived.

Thenceforth among the assemblage
Rushed in the daughter of the priest
With her anklet jingling
As lovely as a chinese doll
Afresh as if just then unbundled.
The king put the girl on his lap
And his mind keen on the poems.

## Divine Song

Guruparan recited the songs first
With comments accompanying
To the delight of temporals and celestials;
Soon began he, a delectable song divine
Peerless in all its content
Herein I say, listen to it, please!

"தொடுக்கும் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே! நறைபழுத்த

துறைத்தீந் தமிழின் ஒழுகும்நறுஞ்
சுவையே! அகந்தைக் கிழங்கைஅகழ்ந்

தெடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்
கேற்றும் விளக்கே! வளர்சிமைய

இமயப் பொருப்பில் விளையாடும்
இளமான் பிடியே! எறிதரங்கம்,

உடுக்கும் புவனம் கடந்துநின்ற
ஒருவன் திரு வுளத்தில் அழ

கொழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிர் ஓவியமே! மதுகரம் வாய்

மடுக்கும் குழற் காடேந் துமிள
வஞ்சிக் கொடியே வருகவே!

மலையத் துவசன் பெற்ற பெரு
வாழ்வே வருக வருகவே!"

## இறைவி மறைவு

என்றந்தப் பாடல் சொன்னான்
குருபரன்! சிறுமி கேட்டு
நன்று நன்றென இசைத்தாள்;
நன்றெனத் தலை அசைத்தாள்:
இன்னொரு முறையுங் கூற
இரந்தனள்! பிறரும் கேட்கப்
பின்னையும் குரு பரன்தான்
தமிழ்க்கனி பிழியுங் காலை,

"The genius of a spiritual hymn
Offered to the God celestial!

Sugary juice flowing out of Tamil
Classified, ancient and matured!

A lamp lit in the minds of devotees
Who uproot the pride once for all!

A young and lovely doe that frolics
On the growing Himalayan heights!

A living portrait beautifully drawn
In the gracious mind of one
Who transcended the Universe
Bordered by the wavy oceans!

Oh! Ye, be present! the gentle creeper of *vanci*
With the lustrous locks of hair,
Where the cluster of bees suck honey!

Oh! ye, the perfect life, begotten by
Malayat-tuvasan
I hail thee! and pray! come to bless us!

**Vanishing of Goddess**

Such a hymn Guruparan recited!

Heard the girl attentively

And nodded it saying 'Well, Well'!

Pleaded for the hymn to be repeated!

When the poet acceeded to

For the sake of others too

And disseminated the juicy Tamil

பாட்டுக்குப் பொருளாய் நின்ற
பராபரச் சிறுமி, நெஞ்சக்
கூட்டுக்குக் கிளியாய்ப் போந்து
கொஞ்சினாள். அரங்கு தன்னில்!
ஏட்டினின் றெழுத்தோ டோடி
இதயத்துட் சென்ற தாலே,
கூட்டத்தில் இல்லை வந்த
குழந்தையாம் தொழும் சீமாட்டி!

## திருவடி சரணம்

முழுதுநூல் அரங்கேற்றிப் பின்
முடிமன்னன், குதிரை யானை,
பழுதிலாச் சிவி,கை செம்பொன்
காணிக்கை பலவும் வைத்துத்
தொழுதனன். குருபரன் பின்,
துதிநூலும் நீதி நூலும்
எழுதிய அனைத்தும் தந்தே
சின்னாட்கள் இருந்து பின்னே,

தம்பியை இல்லம் போக்கித்,
தான்,சிராப் பள்ளி யோடு
செம்மைசேர் ஆனைக் காவும்
சென்று,பின் திருவா ரூரில்
பைம்புனற் பழனத் தாரூர்
நான்மணி மாலை பாடி,
நம்மைவந் தடைந்த காலை
நாமொரு கேள்வி கேட்டோம்.

ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக், குணமொரு மூன்றும்
திருந்து சாத்துவிகமே யாக,
இந்துவாழ் சடையான் ஆடு மானந்த
எல்லையில், தனிப்பெருங் கூத்தின்
வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து,
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்;

The celestial girl, a source of that hymn
Fondled it on the stage
As a parrot in the cage of the mind!
What was scribed on the leaves
Ran straight into her mind and heart!
That girl of the Lordess was soon
Not to be seen among the audience!

After the elite's approval of the work divine
The ruler prayed and rewarded
The benevolent poet with horses and elephant
Chariots faultless and gold unalloyed.
Guruparan handed over the remnant
Of his Hymns and Ethicals to the king;
Stayed therein for a few days more.

After bading adieu for his brother,
Alone went ahead to Chirappalli and Anaikka
Proceeded to Thiruvarur and sang
Poems four-fold on the deity presiding;
When came to us thereafter,
We put a question for him to answer.

"When eyes alone took reign of all the five senses,
Faculties intellectual four have become of the mind,
And qualities three of the *Satvik* feelings,
He plunged himself into the flood of heavenly joy
That emerged out of the unique dance which
Siva performs in the cosmic region of bliss
And remained in immutable delectability."

ஆகுமித் திரு விருத்த
அனுபவப் பயனைக் கேட்க,
ஈகுவோன் கையி லொன்றும்
இல்லாமை போல் தவித்துத்,
தேகமும் நடுங்கி நின்று
திருவடி சரணம் என்றான்
ஏகிப்பின் வருக என்றோம்;
சிதம்பரம் ஏகி உள்ளான்.

சென்றஅக் குருபரன் தான்
திரும்பி வந்திடு மோர்நாளும்
இன்றுதான். சிறிது நேரம்
இருந்திடில் காணக் கூடும்''
என்றுநற் றேசிகர் தாம்
இருநாய்கன் மாருங் கேட்க
நன்றுற மொழிந்தார். கேட்ட
நாய்கன்மார் காத் திருந்தார்.

## சிதம்பரம் சென்று திரும்பிய குருபரன்

புள்ளிருக்கும் வேளூர் போய்ப்
புனைமுத்துக் குமரன் மீது
பிள்ளை நூல்பாடி, மன்றில்
பெம்மானை மும்மணிச் சொல்
தெள்ளுநீர் ஆட்டிப், பின்னும்
சிதம்பரச் செய்யுட் கோவை,
அம்மைக் கிரட்டை மாலை
அருளினான் இருளொன் றில்லான்.

When directed to explain, the proven uses
Of this graceful hymn,
Pined Gurupara as a patron
Who has nothing to donate!
Trembled he of his frame entire -
'Prostrate I at your benign feet', said he.

'Go ahead and come again' we said.
He has gone off to Chidambaram.
Today falls the eve of his return
Ye could see him now, if a bit waited
So said well, the benevolent Desikar
Heard this and waited, a couple of Naickers.

**Guruparan returned from Chidambaram**

Gone to Pullirukkuveloor and
*Pillait-tamil* he sang there,
Invoking the Lord Muthukumaran,
Adorned him with *Mummanik-kovai*
Also a *Ceyyutkovai* and *Irattaimalai*
Authored he who was devoid of murkiness.

மூளும் அன்பாற் பண்டார
மும்மணிக் கோவை கொண்டு
ஆளுடை ஞானா சானின்
அடிமலர் தொழுது பாடி,
நீளுறப் பரிசாய்ப் பெற்ற
நெடுநிதி அனைத்தும் வைத்து,
மீளவும் தொழும் சீடன்பால்
விளம்புவான் ஞான மூர்த்தி:

"அப்பனே, இதுகேள், இந்த
அரும்பொருள் அனைத்தும் கொண்டு
செப்பிடும் வடநா டேகிச்
சிவ தருமங்கள் செய்க!
அப்பாங்கில் உள்ளா ரெல்லாம்
அசைவர்கள், உயிர் வதைப்போர்:
தப்பிலாச் சைவம் சார்ந்தால்
அன்பிலே தழைத்து வாழ்வார்.

சைவநன் மடா லயங்கள்
தாபிக்க! கோயில் காண்க!
நைவார்க்குச் சிவ பிரானின்
நாமத்தால் உணவு நல்கும்
சைவசத் திரங்கள் காண்க!
தடாகங்கள் பூந்தோட் டங்கள்
உய்வாக, உயிரின் வேந்தன்
உவப்புறச் செய்து மீள்க!"

He again with a love surging
Wrote *Pandara Mummanik-kovai*
At the benign feet of his mentor spiritual
Surrendering all the gifts he earned
And repeatedly he prayed
To whom the spiritual sage replied.

Look here and listen, my disciple
With all these wealth precious
Proceed to the North of India and
Do all charities for Saivism!
The meat-eaters and butchers
Who exist in those regions
If adhered to infallible Saivism
Will flourish in mercy and love!

Found the monasteries well organised
For the sake of Saivism there!
Construct choultries and instal the temples
To feed all the indigent
In the name of Siva, the Lord!
Set up ponds and develop floral gardens
To gladden the Lord of all Beings
Before returning herein.

என்று தேசிகனார் சொல்லி
இனிதாக ஆசி கூறி,
நன்றொரு துறவு காட்டிக்
காவியும் நல்கி, ஆங்கே
"இன்றொடு வட தேசந்தான்
எம்பிரான் இருக்கை யாகித்,
தென்றமிழ் நாட்டினைப் போல்
சிறப்பெலாம் எய்த" என்றார்

மறைநாய்கன் மான நாய்கன்
வாய்மூடிக் காத்திருந்தார்
குறைவறு பரி சனங்கள்
கூட்டமாய்த் தொடர, அன்பால்
இறைவனாம் தேசிகன் தாள்
இறைஞ்சிய குருபரன் தான்,
பிறைசூடி தன்னைப் பாடிப்
பெருஞ் சிறப்போடு சென்றான்.

Desikar advised him thus
Blessed him lovingly
Ordained him a saint
Donned him with a fabric saffron
And said, 'Let the North of India
From to-day, be an abode of Siva
And let it secure all the best
As much as the Southern Tamil land.

Marainaicken and Mananaicken
Silently waited for;
And closely followed
By a crowd of servants infallible
Guruparan prayed the feet benign
Of Desikan, the God-like and
Glorified the Lord of crescent
And went ahead with fame and name.

*Translated by Palani Arangasamy*

# 67. அவனும் அவளும்

---

### கட்டிலண்டை மங்கை

தொண்டையினில் ஒன்றுமே அடைக்க வில்லை
துணைவனவன் சிறுகனைப்பக் கனைக்க லுற்றான்;
அண்டையிலே மங்கைபோய் "அத்தான்" என்றாள்;
அத்தானா தூங்கிடுவான்? "உட்கார்" என்றான்.
திண்தோளில் சந்தனத்தைப் பூசு கின்றாள்
சேயிழைக்கு முல்லைமலர் சூட்டு கின்றான்
கண்டான்! கண்டாள்! உவப்பின் நடுவிலே, "ஓர்
கசப்பான சேதியுண்டு கேட்பீர்" என்றாள்!

### பொதுத்தொண்டு செய்தோமா?

"மிதிபாகற் காய்கசக்கும்; எனினும் அந்த
மேற்கசப்பின் உள்ளேயும் சுவைஇருக்கும்;
அதுபோலத் தானேடி? அதனா லென்ன;
அறிவிப்பாய் இளமானே" என்றான் அன்பன்.
"அதிகாலை தொடங்கி நாம் இரவு மட்டும்
அடுக்கடுக்காய் நமதுநலம் சேர்ப்ப தல்லால்
இதுவரைக்கும் பொதுநலத்துக் கென்ன
செய்தோம்?
என்பதைநாம் நினைத்துப்பார்ப் பதுவு மில்லை.

## *67. He and She*

---

**She is near the Cot**

Nothing prevented her from speaking in a whisper;
He showed some signs of being awake;
She neared him, and said 'Lover' to him, to wake;
He is not to sleep, and he said, 'Sit Near';
She smears sandal on his strong shoulders;
He in turn decks her with *mullai* flowers
She saw and he saw delight; in this midst,
Listen to a bitter truth I have to state.

**Have we done social work?**

Bitter-gourd is bitter; yet inside the bitterness,
There will always be sweetness; this is like that;
'What of it? Tell me that' said the lover;
'From morning till night we have looked into our affairs;
What social work have we done? on that, we have not
Given any thought; is it fair?'

### வீட்டுத் தொண்டா பொதுத்தொண்டு?

"இன்றைக்குக் கறிஎன்ன? செலவு யாது?
ஏகாலி வந்தானா? வேலைக் காரி
சென்றாளா? கொழுக்கட்டை செய்யலாமா?
செந்தாழை வாங்குவமா? கடைச் சரக்கை
ஒன்றுக்கு மூன்றாக விற்ப தெந்நாள்?
உன்மீதில் எனக்காசை பொய்யா? மாடு
குன்றுநிகர் குடம்நிறையக் கறப்ப துண்டா?
கொடுக்கலென்ன? வாங்கலென்ன? இவைதாம்
[கண்டோம்.

### தன்னலத்தால் என்ன நடக்கும்?

தமிழரென்று சொல்லிக்கொள் கின்றோம் நாமும்;
தமிழ்நாட்டின் முன்னேற்றம் விரும்பு கின்றோம்!
எமதென்று சொல்கின்றோம் நாடோ றுந்தான்!
எப்போது தமிழினுக்குக் கையா லான
நமதுழைப்பை ஒருகாசைச் செலவு செய்தோம்?
நாமிதனை என்றேனும் வாழ்நாள் தன்னில்
அமைவாகக் குந்திநினைத் தோமா? இல்லை;
அனைவருமிவ் வாறிருந்தால் எது நடக்கும்?"

### தமிழ்நாடு தலைதூக்க உயிரையும் தருவேன்

"இழந்தபழம் புகழ்மீள வேண்டும் நாட்டில்,
எல்லோரும் தமிழர்களாய் வாழ வேண்டும்.
வழிந்தொழுகும் சுவைத்தமிழே பெருகவேண்டும்
மாற்றலர்கள் ஏமாற்றம் தொலைய வேண்டும்
விழுந்ததமிழ் நாடுதலை தூக்க என்றன்
உயிர்தனையே வேண்டிடினும் தருவேன்" என்றான்.
"பழம்இடுவேன் சர்க்கரைப்பால் வார்ப்பேன்
உங்கள்
பண்பாடும் வாய்திறப்பீர் அத்தான்" என்றாள்.

**Is household work social?**

What is the recipe today? how much is spent
today?
Did he come? Did the servant-maid go?
Shall we buy red plantains?When shall the articles
go
For thrice the cost price? is my love for you a lie?
Does the cow milk a pot, mountain-high?
What is our credit, our debt? how does it go?

**What can be got be selfishness?**

We call ourselves Tamilians, and we desire
That Tamilnadu should be prosperous; We mutter
This day in and day out; Have we spent our
Hard-earned cash to others' welfare?
Have we sat quietly and thought about it?
No; if everybody is like us,
What will happen to it?

**For Tamilnadu to win, my life will be given**

"Ancient glory should be regained; all
Should live accordingly; Tamil should be
In everyone's lips; the foreigners' rule
Should go; to achieve this, if, need be,
My life I am prepared to give", he said;
"I shall give you plantain and sugary
Liquid for your singing mouth", she said.

## அன்றன்று புதுமை

"அன்றிலடி நாமிருவர் பழமும் பாலும்
ஆருக்கு வேண்டுமடி! என்றன் ஆசைக்
குன்றத்திற் படர்ந்தமலர்க் கொடியே, மண்ணில்
குவிந்திருக்கும் சுவையுள்ள பொருள்கள் எல்லாம்
ஒன்றொன்றும் மறுநாளே பழமை கொள்ளும்;
ஒன்றொன்றும் சிலநாளில் தெவிட்டிப் போகும்;
அன்றன்று புதுமையடி தெவிட்ட லுண்டோ?
ஆருயிரே நீகொடுக்கும் இன்பம்" என்றான்.

## இரவுக்கு வழியனுப்பு விழா

நள்ளிரவின் அமைதியிலே மணிவி ளக்கும்
நடுங்காமல் சன்னலுக்குள் புகுந்த தென்றல்
மெல்லஉடல் குளிரும்வகை வீசா நிற்கும்
வீணையில்லை காதினிலே இனிமை சேர்க்கும்;
சொல்லரிதாய், இனிதினிதாய் நாழி கைபோம்;
சுடர்விழிகள் ஈரிரண்டு, நான்கு பூக்கள்,
புல்லிதழிற் போய்ஒடுங்கும்; தமைமறந்து
பூரிப்பார் நலம்பாடி இரவு செல்லும்.

## Everyday new

O! We both are the *Anrils*,
Whoelse wants the fruit and milk?
O! the lovely creeper over-spread on the hill of love.
All the tasty things heaped in the earth
Will become old even on the very next day.
They become cloying within somedays
But the sensuous pleasure you give me
Is always fresh, will it ever became loathed?

## Good bye to night

In the silence of midnight, the South wind
Enters without the lamp flickering, and cools
The body; without being veena, sweet hours
Pass, our ears sweeten; flaming eyes
Two; four flowers reach the lips;
Forgetting itself, night passes blessing the united.

*Translated by R. Sivadhanu Pillai*

## *68. வீரத்தாய்*

---

### காட்சி 1

*(மணிபுரி மாளிகையில் ஓர் தனி இடம். சேனாபதி காங்கேயனும் மந்திரியும் பேசுகின்றனர்.)*

**சேனாபதி :**

மன்னன் மதுவினில் ஆழ்ந்து கிடக்கின்றான்!
மின்னல்நேர் சிற்றிடை ராணி விஜயா
நமக்கும் தெரியாமல் எவ்விடமோ சென்றாள்.
அமைப்புறும் இந்த மணிபுரி ஆட்சி
எனக்கன்றோ! அன்றியு ம் என்னரும் நண்ப!
உனக்கே அமைச்சுப் பதவி உதவு வேன்

**மந்திரி :**

ஒன்றுகேள் சேனைத் தலைவ! பகைப்புலம்
இன்றில்லை; ஆயினும் நாளை முளைக்கும்,
அரசியோ வீரம், உறுதி அமைந்தாள்!
தரையினர் மெச்சும் சர்வ கலையினள்!

**சேனாபதி :**

அஞ்சுதல் வேண்டாம் அவளொரு பெண்தானே!

**மந்திரி :**

நெஞ்சில்நான் பெண்ணை எளிசாய் நினைக்கிலேன்

# *68. The Herioc Mother*

---

**Scene One**

*(A secluded corner in the Manipuri palace. Commander-in-Chief Kangeyan and the Minister are conversing)*

Commander-in-Chief:

The King drowns in drink.
Lightning waisted Queen Vijaya
Has gone away without informing us.
Administering Manipuri
Is now my job. My dear friend!
I shall of course make you the Minister.

Minister:

Commander-in-Chief! A word.
There are no enemies to day. But tomorrow
It could be otherwise. The queen is brave,
Has will-power. Famous through the land.

C-in-C:

Fear not. After all a woman!

Minister:

I wouldn't dismiss women so easily.

சேனாபதி :

ஆடை, அணிகலன், ஆசைக்கு வாசமலர்
தேடுவதும், ஆடவர்க்குச் சேவித் திருப்பதுவும்,
அஞ்சுவதும் நாணுவதும் ஆமையைப்போல் வாழுவதும்
கெஞ்சுவது மாகக் கிடக்கும் மகளிர்குலம்
மானிடர் கூட்டத்தில் வலிவற்ற ஓர்பகுதி!
ஆனமற் றோர்பகுதி ஆண்மைஎனப் புகல்வேன்!
எவ்வாறா னாலும்கேள்! சேனையெலாம் என்னிடத்தில்!
செய்வார்யார் நம்மிடத்தில் சேட்டை? இதையோசி.

மந்திரி *(சிரித்துச் சொல்வான்)* :

மானுஷிகம் மேல்என்பார், வன்மை உடையதென்பார்
ஆன அதனை அளித்ததெது? மீனக்
கடைக்கண்ணால் இந்தக் கடலுலகம் தன்னை
நடக்கும்வகை செய்வதெது? நல்லதொரு சக்தி
வடிவமெது? மாமகளிர் கூட்டமன்றோ? உன்சொற்
கொடிது! குறையுடைத்து! மேலும் அது கிடக்க;
மன்னன் இளமைந்தன் எட்டு வயதுடையான்,
இன்னும் சிலநாளில் ஆட்சி எனக்கென்பான்!

சேனாபதி :

கல்வியின்றி யாதோர் கலையின்றி, வாழ்வளிக்கும்
நல்லொழுக்க மின்றியே நானவனை ஊர்ப்புறத்தில்
வைத்துள்ளேன்; அன்னோன் நடைப்பிணம்போல்
வாழ்கின்றான்.
இத்தனைநாள் இந்த இரகசியம் நீயறியாய்!

மந்திரி :

ஆமாமாம் கல்வியிலான் ஆவி யிலாதவனே!
சாமர்த்தியசாலி தந்திரத்தில் தேர்ந்தவன்நீ!
உன்எண்ணம் என்னசொல்? நான்உனக் கொத்திருப்பேன்
முன்னால் செயப்போவ தென்ன மொழிந்துவிடு!

C-in-C:

Dresses, jewels, a love of flowers,
Servitude for the male sex,
Fear, shyness, tortoise-existence.
Mutter sweet nothings. Such is that species,
A weak portion of humanity.
The other part is victorious manhood.
Besides, the army is with me
Who will dare to play tricks with us?

Minister *(laughing)*:

They say man is superior, strong.
But who created him? Which is the power
That with its eyes makes this world move?
What is the image of Power divine?
Is it not that of women? Your words
Are flawed. Evil too. Let it be.
The Prince is eight years old.
He will claim the right to rule not long hence!

C-in-C:

I have isolated him beyond city limits.
He gets no education, training in art,
Or moral living. A lifeless moron!
You have not known this all these days.

Minister:

Yes, the illiterate are without life.
You are indeed very clever.
What's your plan? I shall join you.
Just give me an idea of your intentions.

**சேனாபதி :**

ராசாங்க பொக்கிஷத்தை நாம்திறக்கவேண்டும்;பின்
தேசத்தின் மன்னனெனச் சீர்மகுடம் நான்புனைந்தே
ஆட்சிசெய வேண்டும்என் ஆசையிது! காலத்தை
நீட்சிசெய வேண்டாம்; விரைவில் நிகழ்விப்பாய்.

**மந்திரி :**

பொக்கிஷத்தை யார்திறப்பார்? பூட்டின்அமைப்பை அதன்
மிக்க வலிமைதனைக் கண்டோர் வியக்கின்றார்.
தண்டோராப் போட்டுச் சகலர்க்கும் சொல்லிடுவோம்
அண்டிவந்து தாம்திறப்பார்க் காயிரரூபாய்கொடுப்போம்.

**சேனாபதி :**

தேவிலை! நீ சொன்னதுபோல் செய்துவிடு சீக்கிரத்தில்
ஆவி அடைந்தபயன் ஆட்சிநான் கொள்வதப்பா!

## காட்சி 2

*(சேனாபதி அரசகுமாரனாகிய சூரர்மனை மூடனாக்கி வைக்கக் கருதிக் காடு சேர்ந்த ஓர் சிற்றூரில் கல்வியில்லாத காளிமுத்து வசத்தில் விட்டு வைத்திருக்கிறான். கிழவர் ஒருவர் காளிமுத்தை நண்பனாக்கிக் கொண்டு உடன் வசிக்கிறார்.)*

**காளிமுத்து :**

என்ன கெழவா? பொடியனெங்கே? இங்கேவா!
கன்னா பின்னாஇண்ணு கத்துறியே என்னாது?
மாடுவுளை மேய்க்கவுடு! மாந்தோப்பில் ஆடவுடு!
காடுவுளே சுத்தவிடு! கல்விசொல்லித் தாராதே!

**கிழவர் :**

மாட்டினொடும் ஆட்டினொடும் மன்னன் குமாரனையுய
கூட்டிப்போய் வந்திடுவேன்; குற்றமொன்றும்
நான்புரியேன்!

மன்னன் மகனுக்குக் கல்வியோ நல்லறிவோ
ஒன்றும் வராமேஉன் உத்தரவு போல்நடப்பேன்.

C-in-C:

The treasury has to be opened.
I must be crowned as king
And begin to reign. Do not tarry.
Achieve this immediately.

Minister:

Who can open the treasury? Everyone marvels
Of the strangely designed lock that is hardy.
Let there be a public announcement.
Anyone who opens it gets a thousand rupees!

C-in-C:

All right. Do as you have said.
I must gain my life's desire, soon.

**Scene Two**

*(The Commander-in-Chief has left Prince Sudharman in the care of Kalimuthu to keep him ignorant. An old man befriends Kalimuthu and manages to live with him)*

Kalimuthu:

Hey oldy! Where is the brat come here!
What are you jabbering all the time?
Let him go graze the cattle,or play.
Allow him to walk free in the forest. Do not teach him!

Old Man:

I shall accompany the Prince with the cattle
And the goats!I shall do no wrong.
I shall follow your orders and see
That the Prince gains no education or morals.

**காளிமுத்து:**

ஆனா நீ போய்வா, அழைச்சிப்போ பையனையும்
ஓநாயில் லாத இடம் ஓட்டு!

## காட்சி 3

*(கிழவர் ஓர் தனியிடத்தில் சுதர்மனுக்கு
வில்வித்தை கற்றுக்கொடுக்கிறார். )*

**கிழவர் :**

விற்கோலை இடக்கரத்தால் தூக்கி, நாணை
விரைந்தேற்றித், தெறித்துப்பார்! தூணீ ரத்தில்,
பற்பலவாம் சரங்களிலே ஒன்றை வாங்கிப்
பழுதின்றிக் குறிபார்த்து, லட்சியத்தைப்
படபடெனச் சரமாரி பொழி! சுதர்மா,
நிற்கையில்நீ நிமிர்ந்துநிற்பாய் குன்றத்தைப்போல்!
நெளியாதே! லாவகத்தில் தேர்ச்சி கொள் நீ!

**சுதர்மன் :**

கற்போர்கள் வியக்கும்வகை இந்நாள் மட்டும்
கதியற்றுக் கிடந்திட்டஅடியே னுக்கு
மற்போரும், விற்போரும், வாளின் போரும்;
வளர்கலைகள்பலப்பலவும்சொல்லித்தந்தீர்!
நற்போத காசிரியப் பெரியீர், இங்கு
நானுமக்குச் செயும்கைம்மா றொன்றும் காணேன்!
அற்புதமாம்! தங்களை நான் இன்னா ரென்றே
அறிந்ததில்லை; நீரும் அதை விளக்க வில்லை.

**கிழவர் :**

இன்னாரென் றென்னை நீ அறிந்து கொள்ள
இச்சையுற வேண்டாங்காண் சுதர்மா, என்னைப்
பின்னாளில் அறிந்திடுவாய்! நீறு பூத்த
பெருங்கனல்போல் பொறுத்திருப்பாய்: உன்
பகைவன்

Kalimuthu:

Okey then. You may go with the boy.
Avoid the haunts of jackals!

**Scene Three**

*(The Old Man is teaching archery to Sudharman in an isolated place)*

Old Man:

Lift the bow with the left hand,
Tense the bowstring and pluck it!
Choose an arrow from the quiver,
Aim carefully, shoot it straight
At the target! Another, yet another!
Shower your arrows! Sudharma,
Stand straight as a rising hill.
Do not bend. Settle for perfection!

Sudharman:

These many days I was helpless.
You have taught me wrestling,
Archery, Fencing and other arts
Which would surprise the specialists!
O noble master, I know not
How to express my gratitude!
Passing strange! I do not know you.
You have never revealed your identity.

Old Man:

Do not seek to know who I am,
Sudharma. You will realise
My true self later. Be patient
Like the fire hidden in ashes.

என்பகைவன்; உன்னாசை என்றன் ஆசை!
இஃதொன்றே நானுனக்குச் சொல்லும் வார்த்தை
மின்னாத வானம்இனி மின்னும்! அன்பு
வெறிகாட்டத் தக்கநாள் தூரமில்லை!

## காட்சி 4

*(சுதர்மனும் கிழவரும் இருக்குமிடத்தில் தண்டோராச் சத்தம் கேட்கிறது.)*

**தண்டோராக்காரன் :**

அரசாங்க பொக்கிஷத்தைத் திறப்பா ருண்டா?
ஆயிரரூபாய் பரிசாய்ப் பெறலாங் கண்டீர்!
வரவிருப்பம் உடையவர்கள் வருக! தீம் தீம்!
மன்னர்இடும் ஆணையிது தீம்தீம் தீம்தீம்!

**கிழவர் :**

சரிஇதுதான் நற்சமயம்! நான்போய் அந்தத்
தறுக்குடைய சேனாதி பதியைக் காண்பேன்
வரும்வரைக்கும்பத்திரமாய் இரு! நான் சென்று
வருகிறேன் வெற்றிநாள் வந்த தப்பா.

## காட்சி 5

*(மந்திரியின் முன்னிலையில் கிழவர் அரசாங்க பொக்கிஷத்தைத் திறந்தார். மந்திரி கிழவரைக் கூட்டிக்கொண்டு சேனாதிபதியிடம் வந்தான்.)*

**மந்திரி :**

தள்ளாத-கிழவரிவர் பொக்கி ஷத்தின்
தாழ்தன்னைச் சிரமமின்றித் திறந்து விட்டார்!

**சேனாபதி :**

கொள்ளாத ஆச்சரியம்! பரிசு தன்னைக்
கொடுத்துவிடு! கொடுத்துவிடு! சீக்கி ரத்தில்!

Your enemy is my enemy; your aim is mine.
This is my message for you.
The dull sky will flash lightning soon.
The day draws near when I may express my love!

**Scene Four**

*(Sounds of drum where Sudharman and the Old Man are sitting)*

Drummer:

Any one ready to open the royal treasure-chest?
A thousand rupees is the prize
Come forward those who care: Dheem! Dheem!
The king's order! Dheem! Dheem!

Old Man:

The time is opportune. I shall go
To meet that egoist Commander-in-Chief:
Look after yourself. Give me leave.
The day of victory is not far off.

**Scene Five**

*(The Old Man opened the treasure-chest in the presence of the Mininster. The Minister brought him to the Commander-in-Chief)*

Minister:

This weak old man has opened
The treasury with least effort!

C-in-C:

Wonderful! Give him the prize money.
Yes, give it immediately.

மந்திரி :

விள்ளுதல்கேள்! இப்பெரியார் நமக்கு வேண்டும்.
வேலையிலே அமைத்துவிடு ராசாங்கத்தில்;

சேனாபதி :

உள்ளதுநீ சொன்னபடி செய்க *(கிழவரை நோக்கி)*
ஐயா
ஊர்தோறும் அலையாதீர்! இங்கி ருப்பீர்!

கிழவர் :

அரண்மனையில் எவ்விடத்தும் சஞ்ச ரிக்க
அனுமதிப்பீர்! என்னால் இவ் வரசாங்கத்தில்
விரைவில்பல ரகசியங்கள் வெளியாம்! என்று
விளங்குகின்ற தென்கருத்தில்! சொல்லி விட்டேன்.

சேனாபதி:

பெரியாரே, அவ்வாறே! அட்டி யில்லை.

மந்திரி :

பேதமில்லை, இன்றுமுதல் நீரு மிந்த
அரசபிர தானியரில் ஒருவர் ஆனீர்.
அறிவுபெற்ற படியாலே எல்லாம் பெற்றீர்!

## காட்சி 6

*(சேனாபதி காங்கேயன், தானே மணிபுரிஅரசனென்று நாளைக்கு மகுடாபிஷேகம் செய்துகொள்ளப் போகிறான். வெளிநாட்டரசர்களும் வருகின்ற நேரம். மந்திரி நாட்டின் நிலைமையைச் சேனாபதிக்குத் தெரிவிக்கிறான்.)*

மந்திரி:

மணிபுரி மக்கள்பால் மகிழ்ச்சி யில்லை!
அணிகலன் பூண்கிலர் அரிவை மார்கள்!
பாடகர் பாடிலர்; பதுமம் போன்ற
ஆடவர் முகங்கள் அழகு குன்றின!

Minister:

Listen to me. We need this man.
Appoint him in the king's service.

C-in-C:

As you say. *(to the Old Man)* Sir,
Stay here. No need to wander anymore.

Old Man:

Allow me to move all over the palace
As I will! Thanks to me
Many secrets will out. I can feel it.
I am rather frank in speech.

C-in-C:

Be it so, Sir. No objection.

Minister:

From today you are welcome
As one of the chief courtiers.
You have gained all this due to wisdom.

**Scene Six**

*(The eve of the Commander-in-Chief Kangeyan's coronation. . The time for the coming of kings of other countries is near. The Minister speaks of the state of the nation to the Commander-in-Chief)*

Minister:

Manipuri's people are not happy.
The women have laid aside their jewels.
Musicians are silent. Lotus-like faces
Of our women are lustreless.

வீதியில்தோரணம்விளங்க வில்லை!
சோதி குறைந்தன, தொல்நகர் வீடுகள்!
அரச குலத்தோர் அகம் கொதித்தனர்!
முரசும் எங்கும் முழங்குதல் இல்லை!

**சேனாபதி :**

எனக்குப் பட்டம் என்றதும், மக்கள்
மனத்தில் இந்த வருத் தம் நேர்ந்ததா?
அராஜகம் ஒன்றும் அணுகா வண்ணம்
இராஜக சேவகர் ஏற்றது செய்க!
வெள்ளி நாட்டு வேந்தன் வரவை
வள்ளி நாட்டு மகிபன் வரவைக்
கொன்றை நாட்டுக் கோமான் வரவை
குன்றநாட்டுக் கொற்றவன் வரவை
ஏற்றுப சரித்தும் இருக்கை தந்தும்
போற்றியும் புகழ்ந்தும் புதுமலர் சூட்டியும்
தீதற நாளைநான் திருமுடி புனைய
ஆதர வளிக்க! அனைத்தும் புரிக!

**மந்திரி:**

ஆரவாரம்! அதுகேட் டாயா?
பாராள் வேந்தர் பலரும் வரும்ஒலி!

**சேனாபதி:**

லிகிதம் கண்ட மன்னர்
சகலரும் வருகிறார் சகலமும் புரிகநீ

## காட்சி 7

*(அயல்நாட்டு வேந்தர்கள் வந்தார்கள்; சேனாபதி அவர்களை வரவேற்றுத் தனது மகுடாபிஷேகத்தை ஆதரிக்க வேண்டுகிறான்.)*

**சேனாபதி :**

மணிபுரியின் வேந்தனார் மதுவை யுண்டு
மனங்கெட்டுப் போய்விட்டார். விஜய ராணி

No banners decorate the streets.
Lights are dim. Ancient houses
And those of royal ancestry are soothing.
No drums are heard anywhere.

C-in-C:

Are the people rendered sad
Because I got the crown?
Let the royal servants be keen
To put down any insurrection.
Arrangement be made to welcome
The kings of Velli, Valli, Konrai
And Kunram in a grand scale.
Get ready residences for their stay.
All this would help celebrate
The coronation with adulatory speeches,
Strewing of flowers and what else.
Collaborate with me in all!

Minister:

Loud March! Do you hear them?
Sounds of the arrival of royal friends.

C-in-C:

The kings who have been invited
Are all come. Now for you to act.

**Scene Seven**

*(Kings from neighbouring lands have come. The Commander-in-Chief welcomes them and requests them to recognise his coronation)*

C-in-C:

The King of Manipuri, an alcoholic,
Has lost his senses. Our Queen Vijaya

தணியாத காமத்தால் வெளியே சென்றாள்.
தனியிருந்த இளங்கோமான் சுதர்மன் என்பான்
அணியாத அணியில்லை! அமுதே உண்பான்;
அருமையுடன் வளர்த்துவந்தும் கல்வி யில்லை.
பிணிபோல அன்னவன்பால் தீயொ ழுக்கம்
பெருகினதால் நாட்டினரும் அமைச்சர் யாரும்
என்னைமுடி சூடுகென்றார். உங்கட் கெல்லாம்
ஏடெழுதி னேன்நீரும் விஜயம் செய்தீர்;
சென்னியினால் வணங்குகின்றேன். மகுடம் பூணச்
செய்தென்னை ஆதரிக்க வேண்டு கின்றேன்.
மன்னாதி மன்னர்களே, என்விண்ணப்பம்!
மணிமுடியை நான் புனைந்தால் உம்மை மீறேன்!
எந்நாளும் செய்நன்றி மறவேன் கண்டீர்!
என்னாட்சி நல்லாட்சி யாயிருக்கும்!

**வெள்ளி நாட்டு வேந்தன் :**
*(கோபத்தோடு கூறுகிறான்.)*

காங்கேய சேனாதிபதியே நீர்ஓர்
கதைசொல்லி முடித்துவிட்டீர்; யாமும் கேட்டோம்
தாங்காத வருத்தத்தால் விஜய ராணி
தனியாக எமக்கெல்லாம் எழுதியுள்ள
தீங்கற்ற சேதியினைச் சொல்வோம், கேளும்!
திருமுடியை நீர்கவர, அரச ருக்குப்
பாங்கனைப்போல் உடனிருந்தே மதுப்பழக்கம்
பண்ணிவைத்தீர்! அதிகாரம் அபக ரித்தீர்.
மானத்தைக் காப்பதற்கே ராணி யாரும்
மறைவாக வசிக்கின்றார்! அறிந்து கொள்ளும்!
கானகம்நேர் நகர்ப்புறத்தில் ராஜ புத்ரன்
கல்வியின்றி உணவின்றி ஒழுக்க மின்றி
ஊனுருகி ஒழியட்டும் எனவி டுத்தீர்,
உம்எண்ணம் இருந்தபடி என்னே! என்னே!
ஆனாலும் அப்பிள்ளை சுதர்மன் என்போன்
ஆயகலை வல்லவனாய் விளங்குகின்றான்.

Preferred self-exile and clandestine love.
Prince Sudharma, lonely, a lover of jewels,
Prefers only dainty delicacies;
Brought up with love, yet has never shown
Any interest in education.
As he is sick with low morals, my people
And ministers want me to be crowned.
You have come responding to my letters.
I bow to you. I seek your help
To ascend the Manipuri throne.
Renowned emperors! A request.
When I am king, I will follow you.
Never shall I be an ingrate.
You will find my rule a golden age.

King of Velli:

*(angrily)*

Commander-in-Chief, Kangeya,
Your have told a tale. We listened.
Queen Vijaya in deep sorrow.
Has written to us all separately.
Hear this faultless message.
It was greed for the crown that drove you
To enslave the king with destructive wine,
All the while masking as a friend.
You seized power. To save herself
The queen chose exile. Know this.
You had placed the Prince outside the city
Underfed, untaught, a pray to immorality,
Hoping for his death soon. Alas!
How cruel your evil intentions!
Yet, the same boy Sudharma
Today excels in every branch of knowledge.

**வள்ளிநாட்டு மன்னன் :**

*(இடைமறுத்து உரைக்கின்றான்.)*

சுதர்மனைநாம் கண்ணால் பார்க்க வேண்டும்.
சொந்தநாட் டார்எண்ணம் அறிய வேண்டும்.
இதம்அகிதம் தெரியாமல் உம்மை நாங்கள்
எள்ளளவும் ஆதரிக்க மாட்டோம் கண்டீர்!

**கொன்றைநாட்டுக் கோமான் :**

*(கோபத்தோடு கூறுகிறான்.)*

சதிபுரிந்த துண்மையெனில் நண்பரே, நீர்
சகிக்கமுடி யாததுயர் அடைய நேரும்.

**குன்றநாட்டுக் கொற்றவன் :**

*(இடியென இயம்புவான்.)*

அதிவிரைவில் நீர்நிரப ராதி என்ப
தத்தனையும் எண்பிக்க வேண்டும் சொன்னோம்!

**சேனாபதி :**

*(பயந்து ஈனசுரத்தோடு.)*

அவ்விதமே யாகட்டும் ஐயன்மீர்! போசனத்தைச்
செவ்வையுற நீர்முடிப்பீர் சென்று

## காட்சி 8

*(சேனாபதி மந்திரியிடம் தனது ஆசாபங்கத்தைத் தெரிவித்து வருந்துவான்.)*

**சேனாபதி :**

வரைமட்டும் ஓங்கி வளர்ந்தஎன் ஆசை
தரைமட்டம் ஆயினதா? அந்தோ! தனிமையிலே
ராணி விஜயா நடத்திவைத்த சூழ்ச்சிதனைக்
காண இதயம் கலக்கம் அடைந்திடுதே!
வேந்தன் மகனுக்கு வித்தையெல்லாம் வந்தனவாம்
ஆந்தை அலறும் அடவிசூழ் சிற்றூரில்
போதித்ததார்? இதனைப் போயறிவோம் வாவாவா!
வாதிக்கு தென்றன் மனம்.

King of Valli:

*(intervening)*

We must see Sudharma right now.
Find out the views of citizenry.
Without being sure of real facts
We cannot assure you any support.

King of Konrai:

*(in anger)*

In case it is proved that you had plotted,
You will face endless sorrow.

King of Kunram:

*(thundering)*

Do not lost a single moment
To prove your innocence. Beware!

C-in-C:

*(afraid, haltingly)*

Be it so, my lords! First
To the banquet kept ready for you.

**Scene Eight**

*(The Commander-in-Chief speaks to the Minister of his frustration)*

C-in-C:

My desires that rose like a mountain
Have crumbled fast. Alas!
My heart is sorelly troubled to note
The counter-plotting by Queen Vijaya.
The prince is now well-trained, it is said.
Who taught him in that forest hamlet
Where the owl alone hoots? Let us find out.
Come, let us go. My mind is restless.

**மந்திரி :**

பொக்கிஷந் திறந்த அந்தப் புலனுறு பெரியார் எங்கே?
அக்கிழ வர்பால் இந்த அசந்தர்ப்பம் சொல்லிக் காட்டி
இக்கணம் மகுடம் பூண ஏற்றதோர் சூழ்ச்சி கேட்போம்;
தக்கநல் லறிஞரின்றித் தரணியும் நடவா தன்றோ!

*(கிழவர் காணப்படாதததறிந்து மந்திரி வருந்துவான்)*

திருவிலார் இவர்என் றெண்ணித் தீ ங்கினை எண்ணி, அந்தப்
பெரியாரும் நம்மை விட்டுப் பிரிந்தனர் போலும்! நண்பா!
அரிவையர் கூட்டமெல்லாம் அறிவிலாக் கூட்டம் என்பாய்,
புரிவரோ விஜயராணி புரிந்தஇச் செயல்கள் மற்றோர்

**சேனாபதி :**

இன்னலெலாம் நேர்க! இனியஞ்சப் போவதில்லை.
மன்னன்மக னைப் பார்ப்போம் வா!

**காட்சி 9**

*(கிழவர் சுதர்மனுக்கு வாட்போர் கற்பிக்கிறார். இதனை ஒருபுறமிருந்து சேனாதிபதியும் மந்திரியும் கவனிக்கிறார்கள்.)*

**சேனாபதி :**

தாழ்திறந்த அக்கிழவன் ராச தனயனுக்குப்
பாழ்திறந்து நெஞ்சத்தில்பல்கலையும் சேர்க்கின்றான்.
வஞ்சகக் கிழவனிவன் என்னருமை வாழ்க்கையிலே
நஞ்சைக் கலப்பதற்கு நம்மைஅன்று நண்ணினான்.
வாளேந்திப் போர்செய்யும் மார்க்கத்தைக் காட்டுகின்றான்
தோளின் துரிதத்தைக் கண்டாயோ என்நண்பா!

*(சேனாபதி கோபத்தோடு சுதர்மனை அணுகிக் கூறுவான்:)*

ஏடா சுதர்மா! இவன்யார் நரைக்கிழவன்?
கேடகமும் கத்தியும்ஏன்? கெட்டொழியத் தக்கவனே!

Minister:

Where is that old man who opened the treasury?
Let us unburden ourselves to him
And ask him for a plan to grab the crown.
Earth needs wise people for guidance.
*(the Minister is downcast as the Old Man is missing)*
The grand old man must have left us
Suspecting our imminent fall!
My friend! You said womankind is doltish.
Who can equal Queen Vijaya in planning?

C-in-C:

Come what may. I shan't fear.
Let us go the Prince.

**Scene Nine**

*(The Old Man is teaching Sudharman how to fence. The Commander- in-Chief and the Minister watch this from their hiding place)*

C-in-C:

The old man who opened the treasury
Has been feeding the Prince with knowledge.
This fraudulent fellow came that day
Only to destroy my prospering life.
He is teaching the boy to fight.
Mark the swift movement of shoulders.
*(The Commander-in-Chief approaches Sudharman angrily and says)*
Sudharma! Who is this grey old man?
From whence the sword and the shield? You rogue!

**சுதர்மன் :**

என்நாட்டை நான்ஆள ஏற்ற கலையுதவும்
தென்னாட்டுத் தீரர் செழுந்தமிழர்; ஆசிரியர்!

**சேனாபதி :**

உன்நாட்டை நீஆள ஒண்ணுமோ சொல்லடா!

**சுதர்மன் :**

என்நாட்டை நான்ஆள்வேன்! எள்ளளவும் ஐயமில்லை!

*(சேனாபதி உடனே தன் வாளையுருவிச் தர்மன்மேல் ஓங்கியபடி கூறுவான்.)*

**சேனாபதி :**

உன்நாடு சாக்காடே! ஓடி மறைவாய்! பார்!
மின்னுகின்ற வாள்இதுதான்! வீச்சும் இதுவே!

*(கிழவர் கணத்தில், சேனாபதி ஓங்கிய வாளைத் தமது வாளினால் துண்டித்துக் கூறுவார்.)*

உருவியவாள் எங்கே? உனதுடல்மேல் என்வாள்
வருகுகுபார், மானங்கொள்! இன்றேல் புறங்காட்டு!

*(என வாளை லாகவத்தோடு ஓங்கவே, சேனாபதி தன்னைக் காத்துக்கொள்ள முடியாமலும், சாகத் துணி யாமலும் புறங்காட்டி ஓடுகிறான். கிழவரும் சுதர்மனும் சபையை நோக்கி ஓடும் சேனாபதியைத் துரத்திக் கொண்டு ஓடி வருகிறார்கள்.)*

## காட்சி 10

*(கூடியுள்ளஅயல்நாட்டுவேந்தர்களிடம் சேனாபதி ஓடி வந்து சேர்ந்தான். அவரைத் தொடர்ந்து கிழவரும், சுதர்மனும் உருவிய கத்தியுடன் வந்து சேர்கிறார்கள்.)*

**வெள்ளிநாட்டு வேந்தன் :**

ஆடுகின்ற நெஞ்சும், அழுங்கண்ணு மாகநீ ஓடிவரக்
காரணமென் உற்றசபை நடுவில்? சேனாபதியே,
தெரிவிப்பாய் நன்றாக!

*(சேனாபதி ஒருபுறம் உட்கார்தல்.)*

Sudharman:

A Tamil here from the South who teaches me
The arts needed to rule my land.

C-in-C:

Dare you wish to rule your land?

Sudharman:

Of course, I shall rule my land. Where's the doubt?

*(The Commander-in-Chief unsheathes his sword and holds it threateningly at Sudharman)*

C-in-C:

Your land is Death. Away, get thee gone!
Here is my lightning sword. Such my thrust!

*(In a moment the Old Man cuts Kangeyan's sword into two pieces)*

Where is your unsheathed sword? My papier
Is coming to you! Honourable fight, or flight?

*(As he wields his sword, the Commander-in-Chief can neither fight nor give himself up. Sudharman and the Old man pursue the Commander-in-Chief who runs towards the Court)*

**Scene Ten**

*(The Commander-in-Chief comes running to the asssembled kings. The Old Man and Sudharman also arrive with drawn swords)*

King of Velli:

Heart-a-tremble, tear-swollen eyes:
How come you are running hither thus?
Commander-in-Chief, what is the matter?

*(the Commander-in-Chief takes a seat)*

மானைத் துரத்திவந்த வாளரிபோல் வந்து
குறித்தெடுத்துப் பார்க்கின்றீர்; நீவிர்யார் கூறும்?

*(என்று பெரியவரை நோக்கிக் கூறிப் பின் அயல்நின்ற சுதர்மனை நோக்கிக் கூறுவான். )*

பறித்தெடுத்த தாமரைப்பூம் பார்வையிலே வீரம்
பெருக்கெடுக்க நிற்கின்றாய் பிள்ளையே, நீயார்?

**கிழவர் :**

இருக்கின்ற வேந்தர்களே, என்வார்த்தை கேட்டிடுவீர்!
மன்னர் குடிக்கும் வழக்கத்தைச் செய்துவைத்தும்,
என்னை வசப்படுத்த ஏற்பாடு செய்வித்தும்,
செல்வனையும் தன்னிடத்தே சேர்த்துப் பழிவாங்கக்
கல்வி தராமல் கடுங்காட்டில்சேர்ப்பித்தும்
பட்டாபி ஷேகமனப் பால்குடித்தான் காங்கேயன்!
தொட்டவாள் துண்டித்தேன் தோள்திருப்பி இங்குவந்தான்!

*(தான் கட்டியிருந்த பொய்த்தாடி முதலியவை களைக் களைகிறாள், கிழவராய் நடித்த விஜயராணி. )*

தாடியும்பொய்! என்றன் தலைப்பாகையும் பொய்யே!
கூடியுள்ள அங்கியும் பொய்! கொண்டமுதுமையும்பொய்!
நான்விஜய ராணி! - நகைக்கப் புவியினிலே
ஊனெடுத்த காங்கேயன் ஒன்றும் உணர்கிலான்!
கோழியும்தன் குஞ்சுதனைக் கொல்லவரும் வான்பருந்தைச்
சூழ்ந்தெதிர்க்க அஞ்சாத தொல்புவியில்,ஆடவரைப்
பெற்றெடுத்த தாய்க்குலத்தைப், பெண்குலத்தைத் துஷ்டருக்குப்
புற்றெடுத்த நச்சரவைப் புல்லெனவேஎண்ணிவிட்டான்!

**வெள்ளி நாட்டரசன் :**

*(ஆச்சரியத்தோடு கூறுவான்)*

நீரன்றோ அன்னையார்! நீரல்றோ வீரியார்!
ஆர்எதிர்ப்பார் அன்னையார் அன்பு வெறிதன்னை!

You appear imperturable
As a lion pursuing a deer. Who are you?

*(having thus questioned the Old Man, he turns to Sudharman)*

Young man, I see heroism springing
From your lotus eyes. Who may you be?

Old Man:

Assembled kings, Listen to my words.
Having made the king a drunkard
And plotted to enslave me as well,
And sent my son to the deep forest
To rot there as an illiterate brute,
Kangeyan planned to crown himself.
I cut his sword in twain. So he ran here!

*(Queen Vijaya who had donned the garb of the Old man till now, removes the white beard that had disguised her)*

My beard was false: so too my turban.
So the dress: and the old age.
I am Queen Vijaya. Yet Kangeyan
Could not make me out. The world laughs.
On this earth the hen braves the vulture
That would harm its chick. He mistook for grass,
Womanhood, mother of man, the venomous snake
That had holed itself to destroy evil-doers!

King of Velli:

*(full of wonder)*

You are truly a mother. Heroine!
Who can challenge a mother's love?

**வள்ளிநாட்டு மகிபன் :**

*ஆவி சுமந்து பெற்ற அன்பன்உயிர் காப்பதற்குக்*
*கோவித்த தாயினெதிர், கொல்படைதான் என்செய்யும்?*

**கொன்றை நாட்டுக் கோமான் :**

*அன்னையும் ஆசானும் ஆருயிரைக் காப்பானும்*
*என்னும் படிஅமைந்தீர்! இப்படியே பெண்ணுலகம்*
*ஆகுநாள் எந்நாளோ? அந்நாளே துன்பமெலாம்*
*போகுநாள், இன்பப் புதியநாள் என்றுரைப்பேன்!*
*அன்னையெனும் தத்துவத்தை அம்புவிக்குக் காட்டவந்த*
*மின்னே, விளக்கே, விரிநிலவே வாழ்த்துகின்றேன்!*

**குன்ற நாட்டுக் கொற்றவன் :**

*உங்கள் விருப்பம் உரைப்பீர்கள் இவ்விளைய*
*சிங்கத்திற் கின்றே திருமகுடம் சூட்டிடலாம்!*
*தீங்கு புரிந்த, சிறுசெயல்கள் மேற்கொண்ட*
*காங்கே யனுக்கும் கடுந்தண் டனையிடலாம்!*

**ராணி :**

*கண்மணியே! உன்றன் கருத்தென்ன நீயேசொல்!*

**சுதர்மன் :**

*எண்ணம் உரைக்கின்றேன்! என்உதவி வேந்தர்களே,*
*இந்த மணிபுரிதான் இங்குள்ள மக்களுக்குச்*
*சொந்த உடைமை! சுதந்தரர்கள் எல்லாரும்!*
*ஆதலினால் இந்த அழகு மணிபுரியை*
*ஓதும் குடியரசுக் குட்படுத்த வேண்டுகின்றேன்!*
*அக்கிரமம் சூழ்ச்சி அதிகாரப் பேராசை*
*கொக்கரிக்கக் கண்ட குடிகள் இதயந்தான்*
*மானம் உணர்ந்து, வளர்ந்து, எழுச்சியுற்றுக்*
*கானப் புலிபோல் கடும்பகைவர் மேற்பாயும்!*
*ஆதலினால் காங்கேயன் அக்ரமும் நன்றென்பேன்;*
*தீதொன்றும் செய்யாதீர் சேனா பதிதனக்கே!*

King of Valli:

What can an army do against a mother
Who wished to save her dear child?

King of Konrai:

You have been a mother, teacher,
A guardian of life! When will women's world
Be entirely as this? That day will see
The end of sorrow, the birth of new life!
Damsel who incarnated to show the world
The ideal of motherhood! Moonlight glow!
All hail!

King of Kunram:

If you are all agreeable
This lion-cub shall be crowned today.
Also spell severe punishements
To the evil plotter, Kangeyan!

Queen:

My darling, What is your opinion?

Sudharman:

Friendly kings, hear my views.
This Manipuri is common property
To its citizens. All, all are free!
Therefore I would have this lovlely Manipuri
Declared a Sovereign Republic.
Should lust for power lead anyone
To misrule and corruption, the citizens
Will rise as one to guard their honour
And tiger-like spring upon enemies!
Seen thus, Kangeyan's iniquity was good too.
Do not harm the Commander-in-Chief!

**மன்னர்கள் :**

அவ்வாறே ஆகட்டும் அப்பனே ஒப்பில்லாய்!
செவ்வனே அன்புத் திருநாடு வாழியவே!
சேய்த்தன்மை காட்டவந்த செம்மால்! செழியன்புத்
தாய்த்தன்மை தந்த தமிழரசி வாழியவே!

**சுதர்மன் :**

எல்லார்க்கும் தேசம், எல்லார்க்கும் உடைமை எலாம்
எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே!
எல்லார்க்கும் கல்வி சுகாதாரம் வாய்ந்திடுக!
எல்லார்க்கும் நல்ல இதயம் பொருந்திடுக!
வல் லார்க்கும் மற்றுள்ள செல்வர்க்கும் நாட்டுடைமை
வாய்க்கரிசி என்னும் மனப்பான்மை போயொழிக;
வில்லார்க்கும் நல்ல நுதல்மாதர் எல்லார்க்கும்
விடுதலையாம் என்றே மணிமுரசம் ஆர்ப்பீரே!

The Kings:

So be it, youth unparalleled.
May your motherland prosper. You have come
As an ideal son. May good betide
The Tamil Queen image of motherhood!

Sudharman:

A common heritage, a common ownership,
All rights to be shared by everyone.
Education and health for one and all.
May everyone cherish goodness in heart.
No more the stealing of national wealth
By the mighty and the rich.
Beat the drum announcing freedom
To heroes and all women on earth!

*Translated by Prema Nandakumar*

## 69. மகா கவி

பாரதியார் உலககவி!-அகத்தில் அன்பும்
பரந்துயர்ந்த அறிவினிலே ஒளியும் வாய்ந்தார்!
ஒருருக் கொருநாட்டுக் குரிய தான
ஓட்டைச்சாண் நினைப்புடையர் அல்லர். மற்றும்
வீரர் அவர்!-மக்களிலே மேல்கீழ் என்று
விள்ளுவதைக் கிள்ளிவிட வேண்டும் என்போர்!
சீருயர்ந்த கவிஞரிடம் எதிர்பார்க் கின்ற
செம்மைநலம் எல்லாமும் அவர்பாற் கண்டோம்.

அகத்திலுறும் எண்ணங்கள், உலகின் இன்னல்
அறுப்பவைகள்; புதியவைகள்; அவற்றை யெல்லாம்
திகழ்பார்க்குப் பாரதியார் எடுத்துச் சொல்வார்
தெளிவாக, அழகாக, உண்மை யாக!
முகத்தினிலே களையிழந்த மக்கள் தம்மை
முனை முகத்தும் சலியாத வீரராகப்
புகுத்துமொழிப் பேச்செல்லாம் பொன்னி யாற்றுப்
புனல்போலத் தொடர்வதுண்டாம் அன்னார் பாட்டில்.

பழையநடை, பழங்கவிதை, பழந்தமிழ்நூல்,
பார்த்தெழுதிப் பாரதியார் உயர்ந்தாரில்லை;
பொழிந்திடுசெவ் வியஉள்ளம் கவிதை யுள்ளம்
பூண்டிருந்த பாரதியா ராலே இந்நாள்
அழுந்தியிருந் திட்டதமிழ் எழுந்த தென்றே
ஆணையிட்டுச் சொல்லிடுவோம் அன்னை மீதில்
அழகொளிசேர் பாரதியார் கவிதை தன்னை
அறிந்திலதே புவிஎன்றால் புவிமேற் குற்றம்!

# *69. The Grand Poet*

---

Bharati, World Poet! With love at heart endowed,
And light of wisdom, vast and lofty.
Of narrow confines of land or locality
He never had thoughts. And brave was he!
Divisions of people as 'high' and 'low'
Be destrtoyed, desired he.
All that is best in a good, great poet
In him we see.

Thoughts arising from within,
Those that world's miseries free, and ideas new,
To the glorious world expounds them all Bharati,
With truth, beauty and clarity.
Making a weary-eyed people
Wearyless warriors at the forefront,
Forceful sayings flow in his songs,
Like the streams of the *Ponni* river.

Eminence Bharati did not achieve, imitating
Ancient Tamil classics and age-old songs and styles.
On Mother we shall swear:
Suppressed Tamil rose today
Because of eloquent, poetic-hearted Bharati.
If unaware the world is,
Of Bharati's verses' beauty and grace,
The fault is the world's

கிராமியம் நன்னாகரிகம் பாடி வைத்தார்
கீர்த்தியுறத் தேசியம் சித்தி ரித்தார்
சராசரம்சேர் லௌகிகத்தை நன்றாய்ச் சொன்னார்.
தங்குதடை யற்ற உள்ளம்; சமத்வ உள்ளம்;
இராதெதென ஒன்றில்லாப் பெரிய உள்ளம்!
இன்புள்ளம் அன்புள்ம் அன்னார் உள்ளம்!
தராதலத்துப் பாஷைகளில், அண்ணல் தந்த
தமிழ்ப்பாட்டை மொழிபெயர்த்தால் தெரியும் சேதி!

ஞானரதம் போலொருநூல் எழுது தற்கு
நானிலத்தில் ஆளில்லை, கண்ணன் பாட்டுப்
போல்நவிலக் கற்பனைக்குப் போவ தெங்கே?
புதியநெறிப் பாஞ்சாலி சபதம் போலே
தேனினிப்பில் தருபவர் யார்? மற்றும் இந்நாள்
ஜெயபேரிகை கொட்டடா என்றோதிக்
கூனர்களும் குவலயத்தை அவாவும் வண் ணம்
கொட்டிவைத்த கவிதைதிசை எட்டும் காணோம்!

'பார்ப்பானை ஐயரென்ற காலமும்போச்
சே'யென்ற பாரதியார் பெற்ற கீர்த்தி
போய்ப்பாழும் கிணற்றினிலே விழாதா என்று
பொழுதெல்லாம் தவங்கிடக்கும் கூட்டத் தார்கள்
வேர்ப்பார்கள்; பாரதியார் வேம்பென் பார்கள்;
வீணாக உலககவி அன்றென் பார்கள்.
ஊர்ப்புறத்தில் தமக்கான ஒருவ னைப்போய்
உயர்கவிஞன் என்பார்கள் வஞ்ச கர்கள்,

Of civilization and rural heritage he sang.
Grandly he portrayed nationalism.
Ways of the material world he well-presented.
Free and egalitarian was his heart.
A heart that never denied.
A loving and joyful heart was his!
If into world's languages, the great soul's Tamil songs
Are translated, the truth shall out.

None in the world there is to write a work like
*The Chariot of Wisdom*
Where does one seek the imagination,
To sing like The *Songs of Kannan?*
Like the new vision of *Panchali's Vow*,
Who gives in honeyed-sweetness?
By the call, Beat ye the Drums of Victory,
Even the belittled aspired for the world.
Such a song nowhere now is heard.

'Gone are days that called Brahmins Aiyars,"
Bharati declared. Annoyed are those that
Eagerly await his fame to go down.
They say Bharati is bitter.
No world poet he is, they aver in vain.
From some corner,
These hypocrites find a favourite,
And call him a great poet.

"சாதிகளே இல்லையடி பாப்பா" என்றார்
"தாழ்ச்சிஉயர்ச் சிகள்சொல்லல் பாவம்" என்றார்.
சோதிக்கின் "சூத்திரற்கோர் நீதி தண்டச்
சோறுண்ணும் பார்ப்புக்கு வேறோர் நீதி"
ஓதியதைப் பாரதியார் வெறுத்தார், நாட்டில்
ஒடுக்கப்பட் டார்நிலைக்கு வருந்தி நின்றார்.
பாதிக்கும் படிபழமை பழமை என்பீர்
பழமைஇருந் திட்டநிலை அறியீர்" என்றார்.

தேசத்தார் நல்லுணர்வு பெறும்பொ ருட்டுச்
சேரியிலே நாள்முழுதும் தங்கி யுண்டார்.
காசுதந்து கடைத்தெருவில் துலுக்கர் விற்கும்
சிற்றுணவு வாங்கி, அதைக் கனிவாய் உண்டார்.
பேசிவந்த வசைபொறுத்தார்; நாட்டிற் பல்லோர்
பிறப்பினிலே தாழ்வுயர்வு பேசு கின்ற
மோசத்தை நடக்கையினால், எழுத்தால், பேச்சால்
முரசறைந்தார். இங்கிவற்றால் வறுமை ஏற்றார்.

வையத்து மாகவிஞர் மறைந்து போனார்;
வைதிகர்க்குப் பாரதியார் பகைவ ரேனும்
செய்வதென்ன? மேலுக்குப் புகழ்ந்தே வந்தார்;
சிலநாட்கள் போகட்டும் எனஇ ருந்தார்
உய்யும்வழி கெடாதிருக்க மெதுவாய் இந்நாள்
'உலககவி அல்லஅவர்' எனத் தொடங்கி
ஐயர்கவி தைக்கிழுக்கும் கற்பிக் கின்றார்
அழகாக முடிச்சவிழ்த்தால் விடுவார் உண்டோ?

"Castes there are none, dear child," said Bharati.
"Sin it is to impute 'high' and 'low'," told he.
Truly Bharati hated "one law for the Sutras,
Another for the good for nothing Brahmins."
Saddened was he,
By the lot of the land's oppressed.
Tellingly he asked: "Tradition! Tradition! Ye say,
Ye do not know of its state that was."

Among his countrymen right awareness to inculcate,
Stayed he in a *chery* all day long and ate.
He bought food from a Muslim in the bazaar,
And willingly had it.
He withstood calumny. By his conduct, writings and speeches.
He exposed the fraud of many in the country
Speaking of 'high' and 'low' by birth.
Thereby he courted poverty.

The world's great poet passed away.
Enemy to the orthodox Brahmins though was Bharati,
What could they do? they praised him outwardly.
Letting days go by, they lay low and now subtly say,
"Bharati is no world poet,"
And hold his verses too in disrepute,
Their selfish survival thus to ensure.
This artful play will anyone endure?

*Translated by R.Ganapathy*

## 70. சுதந்தரம்

---

தித்திக்கும் பழம் தின்னக் கொடுப்பார்;
மதுரப் பருப்பு வழங்குவார் உனக்குப்;
பொன்னே, மணியே, என்றுனைப் புகழ்வார்;
ஆயினும் பச்சைக் கிளியே அதோபார்!
உன்னுடன் பிறந்த சின்ன அக்கா
வான வீதியில் வந்து திரிந்து
தென்னங் கீற்றுப் பொன்னூசல் ஆடிச்
சோலை பயின்று சாலையில் மேய்ந்து
வானும் மண்ணுந்தன் வசத்திற் கொண்டாள்!
தச்சன் கூடுதான் உனக்குச் சதமோ?
அக்கா அக்கா என்றுநீ அழைத்தாய்.
அக்கா வந்து கொடுக்கச்
சுக்கா மிளகா சுதந்தரம் கிளியே?

## *70. Freedom*

---

They give you dainty fruits and delicious nuts,
And praise you, "my darling, my precious diamond!"
But poor parrot! Look there! your sweet loving sister
Flies through the ski'ce streets and swings high
On the golden fronds of the coconut tree.
Roves in the garden, moves in the street,
And has the world and the sky for her own.
Is the carpenter's cage your abode for ever?
You call her often
"Sister! Oh my sister!"
Is it ginger or peppar
For your sister to give?
It is sweet liberty, dear parrot!

*Translated by T. Murugusundaram*

# 71. தலைப்பில்லாக் கவிதைகள்

---

1

அண்டை வீட்டின் அறையி லிருந்து
பழுத்துக் காய்ந்த பனைஓலை மேல்
கூடல் வாய்த் தண்ணீர் கொட்டும் ஓசை
வந்தது; சென்று பார்த்தேன்
இந்திப் பாடம் நடத்தினார் ஈஸ்வரே.

2

அறைக்குள் யாழிசை ஏதென்று சென்றே
எட்டிப் பார்த்தேன்; பேர்த்தி
நெட்டுருப் பண்ணினாள் நீதிநூல் திரட்டையே .

3

கரடிகள் கீழிருந்து கையேந்த ஏந்த
மரக்கிளை ஆடரங் காகக்
குரங்குபந் தடித்தது விளாம்பழம் கொண்டே.

4

கொஞ்சும் குயிலொன்று 'கூ' 'கூ' என்றது
தென்றலால் அசைந்த செவ்விதழ் அல்லிதான்
இகழ்ச்சிச் சீழ்க்கை அடித்ததால்
தகாதிது 'தடபுடா' என்றது தவளையே!

# *71. Untitiled Poems*

1

From the neighbouring house
Sound came as though water was dropping
from the roof's outlet
On the dried palmyra leaf !
I went and peeped in
O ! Eswar was conducting Hindi lessons!

2

I thought I heard the music of the lute from the room .
I went and peeped in
My grand daughter was learning by rote the
anthology of Tamil Ethics.

3

While the bears waited under the tree with arms
outstretched
The monkey, with the tree-branch as a play-field
Played ball with the wood-apple!

4

A warbling cuckoo cooed,
Taking that to be a whistle in derision
By the russet - petalled lilly rustling in the breeze
The frog grunted its grating disapproval.

*Translated by M. Ramalingam*

# 72. புரட்சி செய்

புரட்சிசெய் புரட்சிசெய் தம்பி
புதிய நல்வாழ்வினை நம்பி!
புரட்சியினா லன்றி நாடு
பொதுமை கொள்ளாதுயர் பீடு!

பழமைகள் யாவுமே சாவும்,
பண்பாட்டுப் புதுமையே மேவும்!
கிழமான சாதி மதங்கள்
கிளர்ச்சிக் குதவாத பதங்கள்!

சீர்திருத்தம் என்னும் பரிதி-ஒளிச்
சிந்தனை யாலே உன் குருதி
சேர்ந்தது வேமாற்றம் கருதி-நீ
செயல்படுவாய் வெற்றி உறுதி!

அறிவியல் புகுந்ததே எங்கும்-அட
அறியாமையின் இருள் நடுங்கும்;
முறிந்தது முடியரசு சாட்சி-நீ
முழங்குக குடியரசு மாட்சி!

## *72. Rebel*

---

Rebel ! Rebel ! O my Brother
    Hoping for life new and better !
Not without rebel can a country
    Ever attain socialism and high glory!

Old conventions will all die,
    Cultural innovations done will flourish
Die hard castes and religions
    Are futile words resurgence.

The Sun of Reform through the light
    Of thought joined your bloodstream
To bring about change.
    Act ! Victory is certain !

Science has penetrated everywhere
    O ! Darkness of Ignorance will shiver,
Shattered is the rule of Monarchy - you
    Trumpet the glory of Democracy !

*Translated by K. Ramasamy*

# 73. ஞானியின் திண்டாட்டம்

பூரியில் ஒருநாள் நானக்,
பூதேவர் எனநடக்கும்
ஆரியன் ஒருவன் தன்றன்
அகல்விழி மூக்கை மூடி
நேரிலே வருதல் கண்டார்
நேர்படும் கோலத்திற்குக்
கோரினார்; காரணத்தைக்
கூறினான் அந்தப் பார்ப்பான்.

"கண்ணையும் மூக்கையும் நான்
கட்டுவ தாலே சிந்தை
எண்ணங்கள் அடங்கி, நெஞ்சம்
இரண்டற ஒருமை கொள்ளும்
உண்மை ஒன் றுரைப்பேன் கேளீர்:
ஊனக்கண் உணரா ஞானக்
கண்ணினால் உலகம் மூன்றின்
காட்சிகள் காண்கின்றேன் நான்.

குருநானக் இதனைக் கேட்டு
குமிண்சிரிப் புற்ற வண்ணம்
திருவாளர் கமண்டலத்தைத்
திருவாளர் பின்மறைத்தார்.
பெருஞானக் கண்ணால் யாதும்
பார்த்திடும் பெருமை கொண்டீர்
ஒருவாறு சொல்வீர் எங்கே
கமண்டலம் உள்ள தென்றார்?

## *73. The Ascetic's Embarrasment*

---

One day Nanak saw in Puri,
One Aryan with closed eyes and covered nose,
Walking towards him as the God of the Earth
Why in such a pose he should appear, he asked,
The Bhramin answered thus:

As I control both my eyes and the nose
All my thoughts calm and settle
To mingle in oneness with my heart
Shall I tell you of such a truth?
I can see
The vision of all the three worlds
Such a vision is not for the fleshly eyes
But for that of the enlightened one!

When Guru Nanak heard this,
He smiled at him,
And quickly took the ascetic's water jug
And hid it behind his back
Sir, you are proud to see
With the eyes of he great enlightenment!
Now, you may tell me, by any means
Where lies your water-jug?

மூன்றுல கத்தைக் காணும்
முனிவனால் கமண்டலத்தை
யாண்டுள தென்பதைத்தான்
இயம்பிட முடியவில்லை.
சான்றவர் நானக் சொன்னார்
சார்ந்தஉம் பின்புறத்தில்
தோன்றிடும் கமண்டலத்தை
துலக்காத உமது ஞானக்

கண்ணென்ன கண்ணோ? வீணாய்க்
கண்கட்டி வாயைப் பொத்தி
மண்ணுள்ள மனிதர் தம்மை
மருட்டிட வேண்டாம் என்றார்.
மண்கவ்விப் போனான்; நாணம்
மண்டிற்று முகப்பரப்பில்
திண்டாடிப் போனான் 'ஞானி'
செய்தவக் கோலம் தீர்த்தான்.

He, Who can visualise the three worlds
Knew not to spell out where
His water-jug was!
The noble Nanak spoke thus:
If your eyes can not see the water-jug
Just lying behind your back,

Are they real eyes? What sort are they?
Do not threaten people
By such a useless closing of eyes and mouth
Crest-fallen was he; shame pervaded his face.
From then on, he threw away the
Divine pose of an ascetic.

*Translated by N. Subramaniyan*

## 74. விடியா விடுதலை விடிவ தெந்நாள்?

இனிஇந் நாட்டில் இங்கிலாந்தின்
கொடி பறக்காது கோலோச்சாது.
எண்ணிலா வீரர்கள் எண்ணிலாத் தீரர்கள்
கண்ணீர் செந்நீர் களங்கண் டதன்பின்
வந்தது விடுதலை, உரிமை பெற்றது.
உடல் பொருள் ஆவி உவந்தீந்தவரின்
ஈகத்தினால்தான் எய்தினோம் விடுதலை.
ஈவதும் பெறுவதும் இல்லை விடுதலை.
சாவு ஆயிரத்தைத் தந்து பெற்றது.

வ. உ. சி, வாஞ்சி, வ. வே. சு, பாரதி
போன்ற கிளர்ச்சியின் புரட்சி யாளர்கள்,
மானம் மிகுந்த வாழ்வினர். திலகர்,
காந்தி, பகத்சிங், சரோஜினி குடும்பம்
ஈ. வே. ரா., சிங்கார வேலனார், ஜீவா
இன்னும் உயிரை எண்ணாக் கடமையர்
ஆயிரம் ஆயிரம் பேரை அளித்துப்
பெற்ற விடுதலை பித்தர்தம் கையில்
சிக்கிக் கொண்டது! திராவிடம் அழியும்!

## *74. When Will be the Dawn of Distant Liberty?*

---

The British rule has ended;
Its flag shall flutter no more
In our dear, dear country.
Soldiers innumerable and Heroes,
Shed their blood and tears
Then came freedom and all our rights.
It's through the giving away of all
Who readily sacrificed their body, wealth and soul
We won our freedom.
Liberty is neither given nor received;
It was got at the cost of a million lives.

V.O.C., Vanchi, Va.Ve.Su., Bharathi
And other such rebels of our struggle:
Tilakar, Gandhi, Bagat Singh, Sarojini's family,
E.V.R., Singara Velanar, Jeeva -
All men of great honour -
And many more in thousands and thousands
Mindful of their duty to the nation alone
Did their precious lives sacrifice to free the nation.
Alas, that freedom is now in the clutches of fanatics!
The 'Dravida Nadu' may perish!

சாதிமதத்தின் சழக்குகள் மிகுந்திடும்!
இனவெறி யாட்டம் பிணம்தின்னி யாகும்!
மொழிப்போர் மூளலாம், சமதருமத்தின்
விழிதிறவாது, வேற்றுமைச் சிக்கல்
மாநிலம்தோறும், வெறுப்பும் பகையும்
கால்கொளும்; ஏழை எளியவர் கடுந் துயர்
உள்நாட்டவரால் கொள்ளை நோய் ஆகும்.

இவற்றை எப்படி இப்பொழுதேநீர்
செப்பலாம் என்று சினப்பின், ஆட்சி
ஒப்பினவரையும் உட்கார்ந்தவரையும்
நாற்பதாண்டாய்நான் நன்கறிவேன்.
அறியாமையும் செருக்கும் கைகோத்து
அரியணை அமர்கையில் அண்ணலே ஒதுங்கினார்.
உழுதவன் இல்லை விதைத்தவன் இல்லை
மக்களுக்குள்ள சிக்கலறுக்காமல்
எல்லார்க்கும் எல்லாம் என்னும் உரிமை
சொல்லால் செயலால் தொடவும் எண்ணிடார்
இரவில் வாங்கும் இந்திய விடுதலை
என்று விடியுமோ யார் அறிகுவரே.

Religious bigotry and casteism shall rear their ugly
head!
Communal clashes shall several lives devour!
Language feuds may brew;
Socialism will never dawn;
Divisive disruptions with enmity and hatred
In all regions will thrive;
The untold misery of the poor and the meek
Will be aggravated into an epidemic
By our own country men.

If these statements enrage you -
For I have said them well in advance -
Believe me, I know very well these forty years
The rulers and the people.
While arrogance and ignorance joined hands
And ascended the throne,
The 'Father of the Nation' stood aloof.
The ploughman is gone; the sower is not seen
The problems of people remain;
Equality and socialism will never flourish,
In the letter and spirit;
Freedom came at midnight
When shall it be the dawn? who knows it?

*Translated by V.Ayothi.*

# 75. வாளினை எடடா!

வலியோர்சிலர் எளியோர் தமை
வதையே புரிகுவதா?
மகராசர்கள் உலகாளுதல்
நிலையாம் எனும் நினைவா?
உலகாளஉ னதுதாய்மிக
உயிர்வாதை யடைகிறாள்,
உதவாதினி ஒரு தாமதம்
உடனேவிழி தமிழா!

கலையேவளர்! தொழில் மேவிடு!
கவிதைபுனை தமிழா!
கடலேநிகர் படைசேர்கடு
விடநேர்கரு விகள் சேர்!
நிலமேஉழு! நவதானிய
நிறையூதியம் அடைவாய்;
நிதி நூல்விளை! உயிர் நூல்உரை
நிச நூல்மிக வரைவாய்!

அலைமா கடல் நிலம்வானிலுன்
அணிமாளிகை ரதமே
அவைஏறிடும் விதமேயுன
ததிகாரம்நி றுவுவாய்!
கொலைவாளினை எடடாமிகு
கொடியோர்செயல் அறவே
குகைவாழ் ஒரு புலியே உயர்
குணமேவிய தமிழா!

## *75. Take up Cudgels*

---

How I ask
A few men of power
Put to torture the meek and poor?
Do they think
They rule this world
For ever?
Your mother is anxious,
To rule this earth.
No more delay,
O Tamils,
Awake at once.

Tend the Arts! Take over the industries!
Compose your verses, O Tamils!
Be quick to rise in number
The men in arms to equal the seas;
Pile up in store poison-like military wares;
Till the land, and full harvests reap;
Write books on ethics, and on life-science too.
Bringforth true books great in number!

Declare your power in this world by
Moving your Chariot of sovereignity all over the
Land, sea and sky
Draw your fell sword
O Tiger in the den,
The righteous Tamil!
To put at nought
The deeds the evil wrought.

தலையாகிய அறமேபுரி
சரிநீதி யுதவுவாய்,
சமமேபொருள் ஜனநாயகம்
எனவேமுர சறைவாய்!
இலையே உண விலையே கதி
இலையே எனும் எளிமை
இனிமேலிலை எனவேமுர
சறைவாய் முரசறைவாய்!

Perform rightful deeds,
Help towards equal justice!
Beat the drums and declare:
Wealth is for all Democracy for all!
Beat O drums, beat to proclaim:
No more the cry 'No food for us'
No more the complaint, 'we are helpless'.

*Translated by Bala*

# 76. அரசியல் வகையின் அயல்மொழிப் பெயர்கள்

---

**சோசலிசம்**

இரண்டு கறவைகள் உன்னிடம் இருந்தால்
அண்டைவீட் டானுக்கொன் றளித்தல் சோசலிசம்!

**காப்டலிசம்**

கறவைகள் இரண்டில் கடிதொன்றை விற்றுக்
காளை வாங்குவது 'காப்ட லிசமாம்!

**கம்யூனிசம்**

ஆவிரண் டனையும் ஆள்வோர்க்கு விற்றுத்
தேவைக்குப் பால்பெறச் செப்பல் 'கம்யூனிசம்!'

**பாசிசம்**

பகரிரு கறவையைப் பறித்த ஆள் வோரிடம்
தொகைதந்து பால்பெறச் சொல்வது 'பாசிசம்'!

**நாசிசம்**

உரியவன் தன்னை ஒழித்தே அவனின்
கறவை இரண்டையும் கைப்பற்றல் 'நாசிசம்!'

**நியூடிலிசம்**

இரண்டு கறவையால் திரண்டபால் அனைத்தையும்
சாக்கடைக் காக்குவது தான் 'நியூ டிலிசம்'

எதனை இவற்றில் ஏற்பாய்?
அதனைஉன் நாட்டுக் காக்குக தோழனே!

## *76. Foreign Names for Various Forms of Government*

---

If two cows you have
Give one to your neighbour:
That is 'Socialism'.

One cow you sell
And buy a bull -
That is 'Captialism'.

Sell the cows to the Government
And procure the milk you need:
That is 'Communism'.

Confiscating your milch cows
And making you pay for the milk:
That is 'Fascism'.

Kill the owner of the cows
And seize the cows at once
That is 'Nazism'.

Collecting all the milk
And pouring it into a ditch -
That is 'New Dealism'.

Which of these.
Will you chose?
That be your country's creed. comrade!

*Translated by V.Ayothi*

## 77. ஏழையின் குடிசை

பானையிலே நற்சிலந்திக் கூடு பழஅடுப்பில்
பூனையின் தூக்கம், பொலிஎருமை மாட்டின்
முதுகெலும்பு போலும் முருங்கைக்காய் காக்கும்,
அதுவு ம் தலைமொட்டை, அன்னை கிழவி

மணைக்கட்டை மேல்தனது மண்டை உறுத்தக்
கணுக்கால் வயிறெட்டக் கட்டிச் சுருட்டிப்
படுத்த படுக்கை, பசிக்கோ குடல்தான்
கடித்துண்ணத் தக்க கறியுணவு, பச்சை
மயிலடியைப் போன்ற இலைநொச்சி மண்டும்
அயலிடத்தில் நின்றபடி அம்மே எனக்கதறும்
வற்றல் பசுமாட்டின் வாய்க்கதறல். காற்றசைவைச்

சற்றும் பொறுக்காமல், தள்ளாடும் மேற்கூரை.
ஆன இவையும் அடுக்காய் அமைந்ததுதான்
கூனக் கிழவர் குனிந்து புகும்குடிசை. ..

## 77. *The Poor Man's Hut*

---

A fine-spun spider's web covers the pot;
'Midst the ashes of the old oven sleeps a Cat;
A lone tree yielding drumsticks long and hard
Like the back-bone of a stud-buffalo,
Now stands bare and topless;

The grandam old lies on the floor
Rolling herself into a ball,
Her pate upon a rough wooden plank,
Drawn-up knees touching her shrunken belly,
Her own entrails, the only meat
To quell her hunger fierce;
Near a copse o'ergrown with tall chaste-trees,
With green leaves resembling peacock's feet,
Stands a scraggy old cow lowing in distress;

Unable to bear the slightest breeze
The thatched roof shakes precariously,
Such are the appointments, in order, of the hut,
Which the infirm old man now enters,
Bending and stooping his decrepit frame.

*Translated by K.G. Seshadri*

## 78. கேட்பேனா காண்பேனா?

அறிவொளி ஏற்றும்
அறிஞன் என்னும்
மொழியைக் கேட்பேனா?

வெறித்தனம் மாய்க்கும்
அறிவியல் புலமை
வியப்பைக் கேட்பேனா?

இருள் உலகத்தை
மாற்றினாய் என்றே
இயம்பக் கேட்பேனா?

பொருள் உலகத்தைப்
பொதுமை செய்த
புரட்சியைக் கேட்பேனா?

மடமை ஒழித்து
மக்களை உயர்த்தும்
மாண்பைக் கேட்பேனா?

கடமைக் கென்றே
வாழ்க்கைச் செயல்கள்
கனியக் காண்பேனா?

கள்ளம் குள்ளம்
கயமையை நாட்டில்
களையக் காண்பேனா?

உள்ளம் உயரும்
கொள்கைக் காக
உழைக்கக் காண்பேனா?

## *78. Shall I Hear or See?*

---

Shall I hear that you are an
Intellectual who kindles the
Light of Knowledge?

Shall I hear the marvel of the
Scientific talent which will put
An end to fanaticism?

Shall I hear somebody tell that
You have changed the dark world?

Shall I hear that you have made
A revolution changing the material
world into a socialist one?

Shall I hear of your dignity
Abolishing ignorance and
Raising the level of humanity?

Shall I see the fruition of the
Activities of your life
For the sake of duty?

Shall I see that you eradicate
Theft, craftiness and wickedness in the
country?

Shall I see you labour for the creed
Which will elevate the mind?

பெற்றோர் தம்மை
பேருல குவக்கப்
பென்னம் பெருஞ்செயல்கள்

கற்ற வரேளம்
கண்ணின் மணிகாள்
களிக்கச் செய்வீரே!

'Oh! the learned people of great deeds,
the apple of our eyes
Make the parents happy and gay
To the happiness of the world great.

*Translated by N.Sankaran*

## 79. பேசு! பாப்பா பேசு!

கணகண வென்று மணியடித்தது
காது கேட்கலையா?-பாப்பா
காது கேட்கலையா?-தம்பி
காது கேட்கலையா?-உன்
கையிற் சுவடிப் பையை எடுக்க
நேரம் வாய்க்கலையா?

முணுமுணு வென்று மூலையிலே
நின்றால் என்ன வரும்?-பாப்பா
நின்றால் என்ன வரும்?-தம்பி
நின்றால் என்ன வரும்?-என்
முன்னே வந்து சொன்னால் வாயின்
முத்தா சிந்தி விடும்?

பலகை இல்லையா எழுதப்
பலபம் இல்லையா?-பாப்பா
பலபம் இல்லையா?-தம்பி
பலபம் இல்லையா?-வீட்டுப்
பாடம் எழுத மறந்த துண்டா,
அந்தத் தொல்லையா?

## *79. Speak! Baby Speak!*

---

Tinkle of the bells
    Don't you hear? - Baby
    Don't you hear? - Brother
    Don't you hear?
For taking your satchel
*Hasn't the time come?*

Murmuring in the corner
    What's the use? - Baby
    What's the use? - Brother
    What's the use?
Will your mouth spill out pearls
If you come and tell me?

Don't you have a slate? -
    Don't you have a pencil? - Baby
    Don't you have a pencil? - Brother
    Don't you have a pencil?
Forgotten the home-work,
Is that the trouble?

சலவை செய்து வந்த சட்டை
வேண்டும் என்றாயா?-அழுக்கு
வேண்டா என்றாயா?-தம்பி
வேண்டா என்றாயா?-இதோ
சலவைச் சட்டை போட்டுக் கொண்டாய்
சிரித்துக் கொண்டாயா?

மனத்தில் உள்ளதை எடுத்துச் சொல்ல
வாயும் இல்லையா?-பாப்பா
வாயும் இல்லையா?-தம்பி
வாயும் இல்லையா?-நீ
வாய்திறந்தால் கொடுக்கத் தந்தை
தாயும் இல்லையா?

தனித்தமிழில் கலகல என்று
தட்டாமல் பேசு-பாப்பா
தட்டாமல் பேசு-தம்பி
தட்டாமல் பேசு-நீ
சாலை ஓரம் நடக்க வேண்டும்
எங்கே கை வீசு!

A laundered shirt
Did you ask?
Rejected the dirty? - Brother
Rejected the dirty? - Here
You've the laundered shirt on,
Do you smile?

To express your feelings
Don't you have a mouth? - Baby
Don't you have a mouth? - Brother
Don't you have a mouth?
If you ask
Don't you've Dad and Mum to give?

Speak freely in Tamil pure
Without fail - Baby
Without fail - Brother
Along the road must you walk,
Swing your hands, come on!

*Translated by Vanmuhil*

## 80. மாணவர்க்கு எழுச்சி

---

நிற்கையில் நிமிர்ந்து நில்!
நடப்பதில் மகிழ்ச்சி கொள்!
சற்றே தினந்தோறும் விளையாடு
பற்பல பாட்டும் பாடிடப் பழகு!-நீ
பணிவாகப் பேசுதல் உனக்கழகு. (நிற்கையில். .. )

கற்பதில் முதன்மைகொள்
காண்பதைத் தெரிந்துகொள்
எப்பொழுதும் மெய்யுரைக்க அஞ்சாதே
சுற்றித் திரிந்திடும் துட்டர் சிநேகிதம்
தொல்லை என்பதில் என்ன சந்தேகம்? நீ (நிற்கையில். .. )

சித்திரம் பயின்று வா
தேன்போன்ற கதைசொல்
முத்தைப்போல் துவைத்த உடையணிவாய்
புத்தகம் உனக்குப் புத்துயிர்அல்லவோ?
போக்கடிக் காதே இதைநான் சொல்லவோ?-நீ
(நிற்கையில். .. )

பத்திரிகை படி
பலவும் அறிந்து கொள்
ஒத்துப் பிறர்க்கு நலம் உண்டாக்கு!
நித்தமும் திராவிட நாடு தன்னை
நினைத்துப் பொதுப்பணிசெய் அவளுனக் கன்னை
(நிற்கையில். .. )

## *80. A Bugle call to the Student*

---

Stand erect when you stand,
Take a delight in your walk,
Play for a while everyday,
Do learn to sing songs of every kind.
Remember that humility in speech makes for beauty.

Always be on the top in learning,
Perceive everything you see;
Never dread speaking the truth,
Doubt not the dictum that the company of the wicked
is always a menace

Practice the art of drawing
And to tell stories sweet,
Let your apparel sparkle like the pearl.
Are not books your life-giving force?
Never lose them! Need I tell you this!

Let your day begin with the newspaper,
Learn all that needs to be.
Do unto others good through your assents
Let your daily service be to Dravida Nadu
For She is your very Mother.

*Translated by T.S. Shanmuga sundaram*

# 81. நம் கடமை

நல்லதோர் திட்டம் அமைத்தல் நம்கடன்.
அல்லன அனைத்தும் அழித்தல் நம்கடன்.
செல்வம் நாட்டிற் சேர்ப்பது நம்கடன்.
செந்தமிழ் காத்தல் சிறந்த கடன்நமக்கு.
மதம் அகன்ற சாதி மறைந்த
அரசு கடந்தஓர் வாழ்க்கை அமைப்பது
நம்கடன்!

## *81. Our Duty*

---

Devising a good scheme is our duty,
Eradicating all evil is our duty;
Our duty is to enrich our country;
It's our bounden duty to protect perfect Tamil;
Establishing a life style
Transcending religion, caste and government,
Is also our duty.

*Translated by V.Ayothi*

## 82. இயற்கையில் இல்லை; மனிதருக்கு ஏன்?

மலர்கள் பற்பல, மணமும் பற்பல
மதங்கள் கிடையாது;
விலங்குகள் பற்பல வண்ணம் பற்பல
வேற்றுமை கிடையாது.

தண்ணீர் பற்பல, நிலங்கள் பற்பல
சாதிகள் கிடையாது;
பண்கள் பற்பல பாடல்கள் பற்பல
பகைத்தீ கிடையாது.

மலைகள் பற்பல மடுவுகள் பற்பல
மடமைகள் கிடையாது;
அலைகள் பற்பல ஆழ்கடல் பற்பல
சமயம் ஆங்கில்லை.

மாந்தர் பற்பலர், மொழிகள் பற்பல
மதிக்கும் அறிவிருந்தும்
ஏந்தும் சாதி சமயம் மதத்தின்
இழிவால் கெட்டனரே!

## *82. Not in Nature; Why Among Men?*

---

Many are the flowers, diverse their scents;
Yet no religions have they,
Animals are many, many their colours;
Yet no differences among them.

Water is of many kinds, varied are the lands too;
Yet no castes have they.
Many are the tunes, songs also many;
Yet ther's no enmity among them.

Mountains there are galore so are the gorges too;
Yet so free from folly.
Waves are many, so are the deep seas;
Yet sects they do not have.

Many are the people, many their languages too;
and they have discrimination;
Yet ruined themselves by adopting
Shameful caste, sect and religion!

*Translated by S. Krishanamurthy*

# 83. திராவிடன் கடமை

மனவீட்டைத் திறப்பாய்-சாதி
மதக்கத வுடைத்து மனவீட்டைத்.

இனமான திராவிடர் பண்பின்
எழில்காண உணர்வு விளக்கேற்று மனவீட்டைத்.

புனைசுருட் டுக்குப்பை அன்றோ-பழம்
புராண வழக்கங்கள் யாவும்?
இனிமேலும் விட்டுவைக் காதே
எடுதுடைப் பத்தைஇப் போதே
தனிஉலகை ஆண்டனை முன்னாள்
தன்மானம் இழந்திடாதே இந்நாள்
மனவீட்டைத்.

வடநாடு தென்னாட்டை வீழ்த்தச்-செய்த
வஞ்சங்கள் சிறிதல்ல தம்பி
இடைநாளில் மட்டுமா? சென்ற
இரண்டாயிரத் தாண்டு பார்த்தார்
விடுவாயாடா தன்ன லத்தை-உன்
விடுதலை திராவிடர் விடுதலையி லுண்டு
மனவீட்டைத்.

# *83. Dravidian's Duty*

---

Break down the gates of caste and creed,
And open the door of your mind's home
Light up the lamp of racial pride
To perceive the character of the Dravidian race.

Are not the customs of ancient myths
Mere rubbish of lies and notions false?
Take a broom and sweep them away;
Let them not be any more.
Lose not your sense of self-respect,
You, who once reigned this entire world.

For two thousand years, and, oh, more,
The treacheries of the North to humble the South
Were not few in number; nor in passing phase.
Will you let their selfisheness succeed?
Know. your freedom is in the freedom
of the Dravidian race.

*Translated by M.Balasubramanian*

## 84. திராவிடர் திருப்பாடல்

---

தென்றல் குளிரும்
செழுங்கா மலர்மணமும்
நின்று தலைதாழ்த்தும்
வாழையும் நீள்கரும்பும்;
என்றும் எவர்க்குமே
போதும் எனும்செந்நெல்
நன்று விளையும்
வளமார்ந்த நன்செய்யும்
அன்றன் றணுகப்
புதிய புதியசுவை
குன்றாத செந்தமிழும்,
குன்றும், மணியாறும்
தொன்றுதொட்ட சீரும்
உடைய திராவிடத்தை
இன்று விடுதலைச்சீர்
எய்துவித்தல் உங்கடனே.

## *84. The Holy Song of Diravidars*

---

The moist Southern breeze,
The fragrance of the flowers
From the bounteous grove
The erect plantain bowing its head,
the lofty sugar-cane
The good paddy field which yields crops
Always to all people's contentment
The chaste Tamil which is an inexhaustible fountain of
fresh sweetness and yields novel delights
to those who seek it anew
and the hill and the river of pearls
and the glory that has persisted through the ages
Such is the greatness of Dravidian Land
Yours is the duty to give her the gift of freedom

*Translated by K.Chellappan*

# A NOTE ON TRANSLATORS

ALBERT,D. (Dr.)

Scholar and Critic. Was Professor of English in St. Joseph College and later Associate Professor in IITS, Madras. Published many articles and translated many Tamil poems into English. His immature death in 1988, is reallly a loss to Literaty World.

ALICE, A.(Dr.) (b.1953)

Author of 1 book. Specialised in stylistics and literary criticism. Lecturer in Tamil, Bharathidasan University, Trichy.

AYOTHI,V. (Dr.) (b.1952)

Author of 2 books. Specialised in Comparative Literature and Mass-Communication. Regularly contributing articles in English and Tamil to many magazines.

BALACHANDRAN,R. (Dr.) (Bala) (b.1946)

Critic and Poet. Author of 3 books. He has translated the love songs of Vidhyapathi into Tamil. Lecturer in English, H.H.Rajah's College, Pudukkottai.

BALASUBRAMANIAN, M. (Dr.) (b.1947)

Lecturer in English, Bharathidasan University,Trichy.

CHELLAPPAN, K. (Dr.) (b.1936)

Professor, Scholar and an authority in Comparative Literature. Has done an in-depth study of Shakespeare and Tamil Poet Elango Adigal. Regularly contributing articles in English and Tamil to Indian and foreign journals. Being a globe-trotter, has participated in many International seminars. Has published 2 books in Tamil. Is Professor & Head, Dept. of English, Bharathidasan University, Trichy.

DAKSHINAMURTHY, A. (Dr.) (b.1938)

Professor and Translator. Published 1 book in Tamil and one book in English. Now actively engaged in translating Sangam classics and works of Alwars. Teaches Tamil at Sri Puspam college, Poondi.

ELAMARAN, M. (Dr.) (b.1936)

Working in the field of Comparative Literature. Got his Doctorate for his thesis 'Bharathidasan and Robert Burns', a Comparative study. Teaches English at Saraswathy Narayanan College, Madurai.

GANAPATHY, R. (Dr.) (b.1931)

Eminent Educationist and a Veteran Scholar. Specialised in Comparative Aesthetics. Has edited some books in English and translated Vallalar, Bharathi and Periyar E.V.R. into English. Is Prof. & Head, Dept. of English, Annamalai University.

KANAGASABAPATHY, C. (Dr.) (b.1928)

Distinguished Critic. Has authored 2 works of criticism. Retired from Madurai Kamaraj University recently.

KRISHNAMURTHY, S. (b.1929)

Writer and Translator. Well versed in Hindi, Bengali, Sanskrit and English. Has 5 books to his credit. Has been awarded Rabindra Naath Memorial Award of West Bengal Govt. and Ilakkiya Chintanai Award of Tamil Nadu. Lives in Calcutta.

MARUDANAYAKAM, P. (Dr.) (b.1939)

Teaches English at Central University, Pondicherry. Published 80 articles in American and Indian journals. published 2 books.

MURUGUSUNDARAM, T. (b.1929)

Well known Tamil Poet. A close associate of Poet Bharathidasan. Published 4 collections of poems. Has received many Awards and honours. After serving 35 years as a teacher recently retired. Lives in Salem.

NATARAJAN, N. (b.1951)

Scholar and Critic. Published many articles in English and Tamil. Teaches English at Central University, Pondicherry.

NIRMAL SELVAMONEY, (Dr.) (b.1953)

Having varied intersts in the fields like Translation, Musicology, Educational Technology, Psychology and Social Ethics. Has edited some books. Teaches English at Christian College, Tambaram.

PARAMESWARAN, P. (Dr.) (b.1935)

Professor and Translator. Translated 1 book of Bharathidasan into English. Has been awarded Cultural Doctorate by World University, Arisona, U.S.A. Teaches English at P.S.G. College of Arts & Science, Coimbatore.

PREMA NANDAKUMAR, (Dr.) (b.1939)

Well-known Writer and a Veteran Translator. Author of many books and innumerable articles. Is regularly contributing to most of the Journals in English and Tamil. Lives in Srirangam

RAMALINGAM, M. (Dr.) (b.1939)

Writer, Poet and Critic. Has more than 20 books to his credit. Winner of several Awards including Sahitya Akademi Award and Pavendar Bharathidasan Award. Is Prof. & Head, Dept. of Tamil Studies, Bharathidasan University, Trichy.

RAMAN, S. (Dr.) (b.1939)

Professor and Translator. Published many books and articles. Teaches English at Sri Pushpam College, Poondi.

RAMACHANDRAN, T.N. (b.1934)

Is a lawyer by profession. Edited several scholarly works. Translated many ancient and Modern Tamil works into English. Is Honorary Director, International Institute of Saiva Siddhantha Research, Dharmapuram, since 1987. Lives in Thanjavur.

RAMASAMY, K. (Dr.) (b.1948)

Linguist and Researcher. Authored 3 books in English and some articles in Tamil, on Language Teaching. Is lecturer in Tamil at CIIL, Mysore.

RENGASAMY, PALANI (Dr.) (b.1937)

Professsor, Writer and Translator. Authored 5 books, one among them being a pioneer work in the field of Journalism. Regularly contributing Book reviews to English Journals. Is Professor of Translation, Tamil University, Thanjavur since 1988.

SANKARAN, N. (b.1930)

Educationist and Translator. After serving more than 40 years teacher, recently retired. Author of 2 books in English. Won Best College Teacher Award in 1988. Lives in Madras.

SESHADRI, K.G. (b.1928)

Well-known Educationist and Translator. Retired from Tamil Nadu Educational Service in 1986. Worked as Professor Emeritus in Tamil University, Thanjavur for some time. Has translated 'Paripadal', one of the Sangam classics into English. Has published one book of translation and edited one collection of Modern Short Stories in English.

SIVADHANU PILLAI, (Dr.)

Scholar, Critic and Translator. Formerly working as Chief Professor of English in Presidency College, Madras. Has translated many Ancient Tamil classics into Tamil. Lives in Nagercoil.

SHANMUGASUNDARAM, N. (b.1941)

Teaches English at E.V.R . Govt. Arts College, Trichy. Actively engaged in Translating Tamil works into English.

SHANMUGASUNDARAM, T.S. (b.1938)

Professor and Scholar. Had been working Educational Officer at the Ministry of National Education, Govt. of Tanzeniya (East Africa) for 5 Years. Has been teaching English for three decades in many Govt. Colleges, Tamil Nadu. Contributed articles in English to several Journals. Currently serving as Registrar, Bharathidasan University, Trichy.

SUBRAMANIYAN, A.V. (b.1937)

Profound Scholar, and an outstanding Translator. Served as Manager in Indian Railways for 34 years. Retired in 1982. Has varied interests in the fields like Literature, Religion and Philosophy. Has translated several Ancient Tamil classics into English.

VANMUKIL (b.1944)

Poet, Critic and Translator. Published 4 books. Participated in many All India Conferences and Kavi Sammelanams. Teaches English in Govt. Arts College, Coimbatore.

TENGAPPA, LENIN, M. (b.1934)

Poet, Critic and Translator. Published 6 collections of Poems and 1 collection of essays. Engaged in Translation for past three decades. Teaches Tamil in Tagore Govt. College, Pondicherry.